## தமிழ்மொழிப் பதிப்புக்கு ஓர் குறிப்பு!

மாஸ்கோ அயல்மொழிப் பதிப்பகம் வெளியிட்ட ஆங்கிலப் பதிப்பிலிருந்து இத்தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. ஆங்கிலப் பதிப்பில் சில தகவல்கள் தவறாகக் கொடுக்கப்பட்டுள்ளன. உதாரணமாக: பாதிமா, முகம்மது நபியின் சகோதரி (தமிழ்ப் பதிப்பு பக். 14) என்றும், செயின்ட் டேவிட் கோட்டை, அதாவது இன்றைய கடலூர், சென்னைக்குத் தெற்கில் 12 மைல் தொலைவில் இருக்கிறது (பக். 105) என்றும் காணப்படுகிறது. இத்தகைய தகவல்கள் தவறானவை என்பது தெரிந்திருந்தாலும்கூட, ஆங்கிலப் பதிப்பையொட்டியதே இத் தமிழாக்கம் என்பதனாலும், ஆங்கிலப் பதிப்பில் உள்ள தகவல்களை மாற்றும் உரிமை நமக்கு இல்லை என்பதாலும் அவைகள் அப்படியே விடப்பட்டுள்ளன.

பதிப்பகத்தார்.

# (ஆங்கில மொழிப் பதிப்பில்)

## நூல் வெளியீட்டாளரின் குறிப்பு

1947ல் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டி யின் மார்க்சிச—லெனினிசக் கழகம், கார்ல் மார்க்ஸின் **இந்திய வரலாற்றுக் குறிப்புகளின்** ரஷ்ய மொழிப் பதிப்பைத் தயாரித்தது. அதையொட்டியதுதான் இந்த ஆங்கில மொழிப் பதிப்பு. அதன் பின்னர் கழகமானது கையெழுத் துப் பிரதியின் மீது நடத்திய ஆராய்ச்சியின் பொழுது செய்யப்பட்ட திருத்தங்களும் இங்குப் பின்பற்றப்பட் டுள்ளன.

ரஷ்ய மொழிப் பதிப்பில் செய்யப்பட்டதுபோல் அல்லாமல், இங்கு ஆசிரியரின் இடைச் செருகல்கள், இடைச் செருகல்களாகவே பிரித்துக் காட்டப்பட்டுள்ளன.

குறிப்புகளின் கையெழுத்துப் பிரதி ஆசிரியரால் எப் பொழுதும் பதிப்பிக்கப்படவேயில்லை. இக்காரணத்தினால், குறிப்புகளை வெளியிடுவதற்குத் தயார் செய்யும்பொழுது, நுணுக்க ரீதியான சில திருத்தங்கள் செய்யப்படவேண்டி யிருந்தன ; அத்திருத்தங்கள் இயற்கையாகவே, ஆங்கில ஆசிரியர்களிடமிருந்து ஆங்கில மொழியிலேயே மார்க்ஸ் மேற்கோளாக எடுத்தாண்டிருந்த விவரங்களையும்கூட பாதித்தன. குறிப்பாக, கீழ்வரும் மாறுதல்கள் செய்யப் பட்டிருக்கின்றன.

1. எல்பின்ஸ்டன், சிவெல் ஆகியவர்களின் நூல்களி லிருந்து ஆசிரியர் எடுத்துப் பயன்படுத்திய இந்திய இடப் பெயர்கள், ஆட்பெயர்கள் முதலியவைகளில் (Proper

names-மொ.ர்.) பெரும்பான்மையானவற்றின் எழுத்து முறை (spelling-மொ.ர்.), நவீன ஆதார பூர்வமான முறைக்கு ஏற்றதாக அமைக்கப்பட்டிருக்கிறது. பிரதேச மொழியில் வழங்கும் எழுத்து முறையிலிருந்து மரபாக வழங்கும் எழுத்துமுறை மிகவும் மாறுபட்டிருந்தாலுங்கூட, பின்னையதுக்கே முதன்மை கொடுக்கப்பட்டிருக்கிறது.

2. பொதுச் சுட்டுச் சொற்கள் (Articles-மொ.ர்.), மூவிடப் பெயர், பெயர்ச் சுட்டு, சுட்டு வினைப் பெயர்கள் (Pronouns-மொ.ர்.), துணை வினைகள் (auxiliary verbs-மொ.ர்.), இணைப்பிடைச் சொற்கள் (conjunctions-மொ.ர்.) ஆகியவைகள் எங்கெங்கே தேவைப்படுகின்றனவோ அங்கெல்லாம் சேர்க்கப்பட்டிருக்கின்றன; ஆசிரியரே எழுதிய பொழுது தனக்கே தெரியாமல் நேர்ந்துவிட்ட எழுத்துப் பிழைகளும் திருத்தப்பட்டிருக்கின்றன.

## பொருளடக்கம்


பக்கம்

ரஷ்யமொழிப் பதிப்புக்கு முகவுரை ... 9

[இந்தியாவை முஸ்லீம்கள் வெல்லுதல்]

1. கொராசானில் முஸ்லீம் அரச வம்சங்கள் ... 14

2. கஜினி மாமூது, அவரது இந்தியப் படையெழுச்சிகள்; அவரது சந்ததியாரின் படையெழுச்சிகள். முறையே 999—1152; 1186. ... 17

3. கோர் குடும்பம், சுபக்தகீன் குடும்பத்தின் இடிந்த அஸ்திவாரத்தின்மீது கஜினியில் தன் அரசை நிறுவுதல், 1152-1206. ... 24

4. டெல்லியின் அடிமை [மம்லூக்] மன்னர்கள், 1206—1288. ... 27

5. கில்ஜி குடும்பம், 1288—1321. ... 30

6. துக்ளக் குடும்பம், 1321—1414. ... 33

7. சையதுகளின் அரசாங்கம், 1414—1450. ... 38

8. லோடி குடும்பம், 1450—1526. ... 38

[ரா. சீவெலின் நூலிலிருந்து சில பகுதிகள்]... 42

பாபரது வருகையின்பொழுது இந்தியாவிலிருந்த அரசுகள். ... 43

## இந்தியாவில் மொகலாயப் பேரரசு, 1526—1761


1. பாபரின் ஆட்சி, 1526—1530. ... 46
2. ஹுமாயூனின் முதலாவது, இரண்டாவது ஆட்சி, இடையில் வந்த சூர் அரச குடும்பத்தினரின் அரசாங்கத்துடன், 1530—1556. ... 48
3. அக்பரின் ஆட்சி, 1556—1605. ... 53

   தக்காணத்தில் போர்கள், 1596—1600. ... 59
4. ஜஹாங்கீரின் ஆட்சி, 1605—1627. ... 60
5. ஷாஜஹானின் ஆட்சி, 1627—1658. ... 63
6. அவுரங்கசீப்பின் ஆட்சியும், மகாராஷ்டிரர்களின் எழுச்சியும், 1658—1707. ... 67

   [இந்தியாவுக்குள் ஐரோப்பிய வியாபாரிகளின் ஊடுருவல்] ... 76
7. பானிப்பட்டுப் பெரும்போர் வரை அவுரங்கசீப்புக்குப்பின் ஆண்டவர்கள்;மொகலாய அதிகாரத்தின் அழிவு, 1707 1761. ... 82

   (1) பகதுர் ஷா, 1707—1712 ... 82

   (2) ஜெகாந்தர் ஷா, 1712—1713 ... 83

   (3) பரூக்ஷெர், 1713—1719 ... 83

   (4) முகம்மது ஷா, 1719—1748 ... 84

   (5) அகமது ஷா, 1748—1754 ... 88

   (6) ஆலம்கீர்.II 1754—1759 ... 89

   பானிப்பட்டுப் போருக்குப் பிறகு நாட்டின் நிலை, 1761. ... 91

[இந்தியாவின்மீது செய்யப்பட்ட அந்நியப் படையெடுப்புகளின் கணக்கீடு] ... 93

பண்டைத் தக்காண அரசுகள் ... 96

## [பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவைக் கைப்பற்றுதல்]

[i] வங்காளத்தில் கிழக்கிந்தியக் கம்பெனி 1725—1755. ... 101

[ii] கர்நாடகத்தில் பிரெஞ்சுக்காரர்களுடன் போர், 1744—1760. ... 103

[iii] வங்காளத்தில் நிகழ்ச்சிகள், 1755—1773. ... 115

கிளைவின் இரண்டாவது நிர்வாகம், 1765—1767. ... 125

இங்கிலாந்தில் நிகழ்ச்சிகள் ... 130

[iv] சென்னையிலும் பம்பாயிலும் விவகாரங்கள், 1761—1770. ... 133

[v] வாரன்ஹேஸ்டிங்ஸின் நிர்வாகம், 1772—1785. ... 140

மகாராஷ்டிர விவகாரங்கள், 1772—1775. ... 145

முதல் மகாராஷ்டிர யுத்தம், 1775. ... 147

மகாராஷ்டிரர்களுக்கும் மைசூர்க்காரர்களுக்குமிடையில் பெருங்கூட்டணி. ... 151

திப்புசாகிப் அரியணையேறல், டிசம்பர் 1782. ... 155

| | | |
|---|---|---|
| | வாரன் ஹேஸ்டிங்ஸ் நிர்வாகத்தின் முடிவு, 1783—1785. | ... 158 |
| | [பிரிட்டனில் கிழக்கிந்தியக் கம்பெனியின் விவகாரங்கள்] | ... 161 |
| [vi] | காரன்வாலிஸ் பிரபுவின் நிர்வாகம், 1785—1793. | ... 167 |
| | சிந்தியாவின் வாழ்க்கை, 1784—1794 | ... 170 |
| | பார்லிமென்ட் நடிவடிக்கைகள், 1786—1793. | ... 172 |
| | [குடியானவர்களின் நிலங்களை ஜமீன்தார்களுக்காகப் பறிமுதல் செயதல், 1793] | ... 173 |
| [vii] | சர் ஜாண் ஷோரின் நிர்வாகம், 1793—1798. | ... 181 |
| [viii] | வெல்லெஸ்லி பிரபுவின் நிர்வாகம், 1798—1805. | ... 185 |
| | பெரும் மகாராஷ்டிர யுத்தம், 1803—1805. | ... 194 |
| [ix] | காரன்வாலிஸ் பிரபுவின் இரண்டாவது நிர்வாகம், 1805. | ... 202 |
| [x] | சர் ஜார்ஜ் பார்லோவின் நிர்வாகம் 1805—1806. | ... 202 |
| [xi] | மிண்டோ பிரபுவின் நிர்வாகம், 1807—1813. | ... 204 |
| | ரஞ்சித் சிங் | ... 204 |
| | பாரசீகத்துக்கு இரண்டாவது தூது | ... 205 |

பாரசீகக் கடற்கொள்ளைக்காரர்களுக்கெதிராகப் படையெழுச்சி ... 207

மக்காவோவுக்குப் படையெழுச்சி ... 207

மரீஷியஸையும் பூர்போனையும் கைப்பற்றல் ... 207

பிண்டாரிகளின் தோற்றம் ... 209

சென்னையில் ரயத்வாரிமுறை ... 210

பார்லிமென்ட் நடவடிக்கைகள் ... 211

[xii] ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் நிர்வாகம், 1813—1822. ... 213

மகாராஷ்டிர அரசுகளின் அழிவு ... 219

நாகபுரி ராஜாவின் வீழ்ச்சி ... 220

ஹோல்கார் வம்சத்தின் வீழ்ச்சி ... 221

## கடைசி கட்டம், 1823—1858 (கிழக்கிந்தியக் கம்பெனியின் அழிவு)

1. ஆம்ஹர்ஸ்ட் பிரபுவின் நிர்வாகம், 1823—1828. ... 226

2. வில்லியம் பெண்டிங் பிரபுவின் நிர்வாகம், 1828—1835, ... 230

3. சர் சார்லஸ் மெட்காப், இடைக்காலக் கவர்னர்-ஜெனரல், 1835—1836. ... 235

4. ஆக்லந்து பிரபுவின் நிர்வாகம், 1836—1842. ... 236

5. எல்லன்பரோ பிரபுவின் (யானையின்) நிர்வாகம், 1842—1844. ... 254

6. ஹார்டிஞ் பிரபுவின் நிர்வாகம், 1844—1848. ... 262

முதல் சீக்கிய யுத்தம், 1845—1846 ... 263

7. டல்ஹௌசி பிரபுவின் நிர்வாகம், 1848—1856. ... 266

இரண்டாம் சீக்கிய யுத்தம், 1848. ... 267

8. கானிங் பிரபுவின் நிர்வாகம், 1856—1858. ... 273

பாரசீக யுத்தம், 1865—1857. ... 273

சிப்பாய்க் கலகம், 1857—1858. ... 274

—(o)—

## ரஷ்ய மொழிப் பதிப்புக்கு முகவுரை

காலனி ஆட்சி, கொள்ளை ஆகியவற்றின் பல்வேறு வடிவங்களும் முறைகளும் கையாளப் பட்டு வந்த ஒரு காலனி நாடு என்ற வகையில் இந்தியாவைப் பற்றி, 1850—1859 தொடங்கி மார்க்ஸ் கவனமாக ஆராய்ந்தார். பண்டைப் பொதுவுடைமைச் சமுதாயத்துக்கே விசேஷமான உறவுகளை இந்தியா இன்னும் ஓரளவு பெற்றிருந்த காரணத்தினுலும் மார்க்ஸ் இந்தியாவைப் பற்றி அக்கறை காட்டினர். "இந்தியாவின் கடந்த காலத்தில் அரசியல் அம்சம் எவ்வளவுதான் மாற்றமுடையதாகத் தோன்றினும் அந்நாட்டின் சமுதாய நிலை மிக மிகப் பண்டுதொட்டு, 19-ஆம் நூற்ருண்டின் முதல் பத்தாண்டுக் காலம் வரை மாற்றமுருமலேயே இருந்திருக்கிறது" என்று 1853-ல் மார்க்ஸ் எழுதினர். ("இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி," நூற் தொகுப்புகள், ஆங்கிலப் பதிப்பு, மாஸ்கோ, தொகுதி I பக். 348.)

மார்க்ஸின் குறிப்புகளில் இந்திய வரலாற்றில் ஆயிரத்துக்கும் அதிகமான ஆண்டுகள் — 7-ஆம் நூற்ருண்டின் இடைக்காலத்திலிருந்து 19-ஆம் நூற்ருண்டின் இடைக்காலம் வரை: முதல் முஸ்லீம் படையெழுச்சியிலிருந்து, இந்தியாவை இணைத்துக் கொண்டதைச் சட்ட பூர்வமாக்கும் இந்தியா மசோதாவை பிரிட்டிஷ் பார்லிமெண்ட் நிறைவேற்றிய ஆகஸ்ட் 2, 1858 வரை—அடங்கியிருக்கின்றன.

18-ஆம் நூற்ருண்டின் இடையில் முடிவுறும் முன் காலப்பகுதி இக் குறிப்புகளில் மூன்றிலொன்றுக்கும் குறைவான இடத்தையே பெற்றிருக்கிறது. கையெழுத்துப்

பிரதியின் இதரபாகம், இந்தியாவைப் பிரிட்டிஷ்காரர்கள் வென்றதன் வரலாற்றைக் கூறுகிறது.

வட இந்தியாவில், சிந்து கங்கைச் சமவெளிகளில் ஆண்டு, அங்கிருந்து தங்களது நாடு பிடித்தலை தெற்கு நோக்கிப் பரப்பிய, முஸ்லீம் வம்சங்களை மார்க்ஸ் ஒன்றன் பின் ஒன்ருகத் தருகிருர். பாபரின்—தேமர்லேன், ஜெங்கிஸ்கான் ஆகியவர்களின் சந்ததியில் தான் தோன்றியதாக இவர் தன்னைக் கூறிக்கொண்டார்—படையெழுச்சியைத் தொடர்ந்து 1526ல் தோன்றிய மொகலாயப் பேரரசின் வரலாற்றை மேலும் அதிக விளக்கத்துடன் மார்க்ஸ் எழுதுகிருர்.

இந்தியாவை பிரிட்டிஷ்காரர்கள் வென்ற வரலாறு பற்றிய குறிப்புகளை எழுது முன்பாக, மாசிடோனைச் சேர்ந்த அலெக்சாந்தர் தொட்டு இந்தியா மீது நடத்தப் பட்ட பல்வேறு அந்நியப் படை யெழுச்சிகளை மார்க்ஸ் மீண்டும் ஒரு முறை ஒன்றன்பின் ஒன்ருகச் சுருக்கமாகத் தந்து பல்வேறு இந்திய அரசுகளைப் பற்றியும் கணக்கிடுகிருர்.

தனது வாழ்வின் இறுதியாண்டுகளில் மார்க்ஸ் எழுதிய கையெழுத்துப் பிரதிகளிடையில், **இந்திய வரலாற்றுக் குறிப்புகள்** ஒரு பிரதான இடத்தைப் பெற்றிருக்கின்றன. **மார்க்ஸ்-எங்கெல்ஸ் தஸ்தாவேஜுகளின் பகுதியாக** (தொகுதிகள் V-VIII) பிரசுரிக்கப் பட்ட பொது வரலாறுபற்றிய **தேதிவாரியான குறிப்புகள்** என்பதன் ஒரு முக்கிய அனுபந்தமாக அவை இருக்கின்றன.

இந்தியாவில் நில உரிமை முறையின் மாறும் வடிவங்களைப்பற்றி மார்க்ஸ் ஆராய்ந்ததால், அந்நாட்டின் பரந்த நிலப்பரப்பின் மீது நடந்த வரலாற்று நிகழ்ச்சிகளது போக்கின் சுருக்கமான வர்ணனை என்ற விதத்தில் தேதிவாரியாக நிகழ்ச்சிகளைத் தொகுத்தார். நில உரிமை முறையின் வடி

வங்களுடைய இயல்பைப்பற்றி ஆராய்வதுடன் அவர் நின்றுவிடவில்லை; ஸ்தூல வரலாற்றுப் போக்கு முழுவதையும் ஆராய முயன்றார். தான் ஆராய்ந்த பலவற்றுள்ளும், இந்திய நில உரிமை முறையை, முஸ்லீம் சட்டம் பாதித்த சூழ்நிலைகளையும், இந்தக் குறிப்பிட்ட விஷயத்தில் நிலமானிய முறையின் வளர்ச்சியை இந்தியாவை பிரிட்டிஷ்காரர்கள் கைப்பற்றி. நசுக்கிய விதத்தையும் அவர் ஆராய்ந்தார்.

அடுத்தபடியாக, இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி விரிவடைந்ததைப் படிப்படியாக மார்க்ஸ் பகுத்து ஆராய்ந்தார். 17-ஆம் நூற்றாண்டின் முதலில், நிதி முதலாளிகள், வியாபாரிகள், பிரபுக்கள் ஆகியோரின் கருவியாக நிறுவப்பட்ட பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியின் நிர்வாகத்தின் கீழ் இந்தியாவைக் கைப்பற்றுதல் நடைபெற்றது. இந்தியாவில் பிரிட்டிஷ்காரர்கள் உபயோகித்த அரசாங்கத்தின் ஏகாதிபத்திய வடிவங்களையும் முறைகளையும் மார்க்ஸ் வெளிப்படுத்துகிறார்; ஒன்றன்பின் ஒன்றாக நீண்டகாலம் இந்தியாவை ஆண்ட பிரிட்டிஷ் ஆட்சியாளர்களையும் திட்டிக்காட்டுகிறார்.

“கடைசி கட்டம், 1823—1858 (கிழக்கிந்தியக் கம்பெனியின் அழிவு)” என்று மார்க்ஸினால் தலைப்பிடப்பட்ட அப்பகுதியில், இந்தியாவிலும், அதன் அண்டை நாடுகளிலும் பிரிட்டிஷ்காரர்கள் செய்த தொடர்ச்சியான ஆக்கிரமிப்புப் போர்களை ஆசிரியர் வரிசைப்படுத்திக் கொடுக்கிறார்.

இந்தியமக்களைக் கொடுமையாகச் சுரண்டியதன் விளைவாக எவ்வாறு பிரிட்டிஷ் காலனிப் பேரரசு விரிவடைந்தது என்பதை மார்க்ஸின் குறிப்புகள் காண்பிக்கின்றன; பிரிட்டிஷ் ஆட்சியினால் அம்மக்களுக்கு நேர்ந்த பொருளாதார அரசியல் விளைவுகளையும் வலியுறுத்துகின்றன.

தனது குறிப்புகளைத் தொகுப்பதற்கு மார்க்ஸ் ஏராள மான நூல்களைப் படித்தார். இந்திய வரலாற்றின் முன் காலப்பகுதியைப் பொருத்த வரை—7-ஆம் நூற்றுண்டி லிருந்து 18-ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதி வரை-எல்பின் ஸ்டனின் "இந்திய வரலாறு" என்ற நூலையே அவர்பெரும் பாலும் உபயோகித்தார். இந்தியாவைப் பிரிட்டிஷ்காரர் கள் வென்றது பற்றிய அரசியல் வரலாற்றின் காலவரை யறைக்கு ராபர்ட் சிவெல் எழுதிய "பகுப்பாய்வு ரீதியான இந்திய வரலாறு" (லண்டன், 1870) என்ற நூலை உபயோ கப்படுத்தினுர்.

இந்தியவரலாற்றுக் குறிப்புகளை அச்சிடுவதற்குத் தயார் செய்த பொழுது, பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டதும் மறுக்க முடியாததுமான விவரங்களிலிருந்து, கையெழுத்துப் பிரதி வேறுபடுகின்ற இடங்களில் மிக மிகத் தேவையான சில திருத்தங்கள் செய்யப்பட்டன. மார்க்ஸ் தருகின்ற தேதிகளோடு மாறுபடுகின்ற விவரங்களை பிற்காலத்திய ஆதார பூர்வமான ஆராய்ச்சி தருகின்ற பலவிடங்களில் வேறு தேதிகளை, அவைகளைத் தருகின்ற மூலங்களுடன் அடிக்குறிப்புகள் கொடுக்கின்றன.

அடிக்குறிப்புகள் அனைத்தும் பதிப்பாசிரியர்களுடை யவை. ஆசிரியரின் வாசகத்தின் ஊடே பதிப்பாசிரியர் களின் இடைச் செருகல்கள் பகர அடைப்புக் குறிகளில் தரப்பட்டுள்ளன.

சோவியத் கம்யூனிஸ்டுக்
கட்சி மத்தியக் கமிட்டியின்
மார்க்சிச — லெனினிசக் கழகம்.

— (o) —

# இந்திய வரலாற்றுக் குறிப்புகள்
# (664 — 1858)

## [இந்தியாவை முஸ்லீம்கள் வெல்லுதல்]

அரேபியர்கள் இந்தியாவுக்குள் முதலில் புகுதல் கி. பி. **664** (ஹிஜிராவில் 44-வது ஆண்டு). முல்தானுக்குள் முகல்லப் நுழைந்தார்.

**632.** முகம்மது காலமானர்.

**633.** அபு பெக்கரின் தலைமையின் கீழ் அரேபியர்கள் சிரியாவின்மேல் படையெடுத்தனர்; அவர்கள் பாரசீகத்தைத் தாக்கி, பாரசீகத்து ஷா மன்னனை ஆக்சஸ் நதிக்கு அப்பால் விரட்டி, அந்நாட்டை **638**-ல் முறியடித்தனர்; அதேசமயத்தில், கலீபாவின் படைத் தலைவர்களில் ஒருவரான அமர் என்பவர் எகிப்தை வென்றார்.

**650.** பாரசீகத்து ஷா தனது அரசை மீண்டும் பெற முயன்றார்; தோற்கடித்துக் கொல்லப்பட்டார்; ஆக்சஸ் வரையிலுள்ள நாடு முழுவதையும் அரேபியர்கள் கைக்கொண்டார்கள். வடக்கில் காபூலும், தெற்கில் பலுசிஸ்தானமும், அவைகளுக்கிடையில் ஆப்கானிஸ்தானமும் மட்டுமே பாரசீகத்தையும், இந்தியாவையும் அப்பொழுது பிரித்தது.

**664.** அரேபியர்கள் காபூலை [அடைந்தார்கள்]; அதே ஆண்டில், முகல்லப் என்ற ஒரு அரேபியத் தளகர்த்தர்

இந்தியாவைக் கொள்ளையிட்டு, முல்தான் வரைமுன்னேறினர்.

**690.** காபூல் வெல்லப்பட்டது; இதை அப்துர் ரஹ்மான் முடித்து வைத்தார். இவரை, பாரசீக வளைகுடாவில் [ஷத் அல் அரப்பின் முகத்துவாரத்தில்] உள்ள பஸ்ராவின் கவர்னரான ஹஜாஜ் என்பவர் தளகர்த்தராக அனுப்பினர்.

**711.** முகம்மது காசிம் (ஹஜாஜுக்கு உடன் பிறந்தார் மகன்) சிந்துவை வென்ருர். (இவர் பஸ்ராவிலிருந்து கப்பலில் புறப்பட்டார்).

**714.** கலீபா வலீத் பொருமையுற்று முகம்மது காசிமைக் கொன்ருர்; அது காரணமாக, சிந்துவில் முகம்மதியனிஸத்தின் வீழ்ச்சிக்கு வித்திடப்பட்டது. முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு அரேபியனும் சிந்துவில் இல்லை.— இந்துக்களிடையில் பரவியதை விட பாரசீகர்களிடையில் முகம்மதியனிஸம் அதிக வேகமாகப் பரவியது: ஏனெனில் பாரசீகத்தில் புரோகித வர்க்கம் மிகவும் கீழ்ப்பட்டதும், மிகவும் இழிவு செய்யப்பட்டதுமான வர்க்கமாக இருந்தது; ஆனல் இந்தியாவிலோ, சமூகக் கூட்டமைப்பில் மிகவும் பலம்வாய்ந்த அரசியல் சக்தியாக அது விளங்கியது. (எல்பின்ஸ்டன்).

## (1) கொராசானில் முஸ்லீம் அரச வம்சங்கள்

**713.** அரேபியர்கள் ட்ரான்ஸ் ஆக்சியானவில் *நிலை பெற்றனர். (670-ல் ஆக்சஸ் நதியை அவர்கள் கடந்தார்கள்; சற்றுப்பிறகு போகாராவையும் சமர்கந்தையும் துருக்மானியர்களிடமிருந்து கைப்பற்றினர்); புதிதாகப் பெறப்பட்ட இந்நிலப் பகுதியின்மீதான கலீபா

---

* நவீன வரலாற்ருசிரியர்கள் அப் பிரதேசத்தின் அரபுப் பெயராகிய மாவாரா உன்னகர் என்பதை உபயோகிக்கிருர்கள்.

பதவிக்கு, பாதிமா (முகம்மதுவின் சகோதரி), அப்பாஸ் (அவரது பெரியப்பா) ஆகியோரின் குடும்பங்களுக் கிடையில் அச்சமயத்தில் பெரும் போட்டி ஒன்று இருந்தது; அப்பாஸின் குடும்பம் வெற்றி பெற்றது; பிறகு அவ்வினத்தின் 5-ஆவது கலீபாவாக ஹரூன்-அல்-ரஷீது ஆனார். அவர்—

809—ல், ஒரு கலகத்தை ஒடுக்குவதற்காக ட்ரான்ஸ் ஆக்சியானா செல்லும் வழியில் காலமானார்; அவரது மகன் மாமூன் என்பவர் கொராசானில் அரேபிய அரசை மீண்டும் நிறுவினார்; பின்னர், தனது தந்தையின் ஸ்தானத்தில் பாக்தாதில் கலீபா ஆனார்; அவரது அமைச்சர் தாஹிர் புரட்சி செய்து, பிறகு—

821—கொராசானின் சுதந்திரமான அரசராகத் தன்னைப் பிரகடனப் படுத்திக் கொண்டார்; அங்கு அவரது குடும்பம்—

821—870—தாஹிரின் வம்சம் என ஆட்சி செலுத்தியது; பிறகு சபாரின் குடும்பத்தால் அவர் அரச பதவியிலிருந்து விலக்கப்பட்டார்.

872—903. சபாரின் வம்சம்; அதன் கடைசி மன்னர் யாகூப் என்பவர் சாமானிக்குடும்பத்தால் தோற்கடிக்கப்பட்டார்.

903—999. சாமானி வம்சம். ட்ரான்ஸ்ஆக்சியானாவில் சுதந்திரமான பிரதேசங்களைப் பெற்றிருந்த, இக்குடும்பத்தைச் சேர்ந்த பல்வேறு உறுப்பினர்கள் ஆக்சஸைக் கடந்து, பாரசீகப் பகுதிக்குச் சென்று பெரிய நிலப் பரப்பு ஒன்றை வென்றனர்; ஆனால் பாக்தாத் கலீபா பதவியை வகித்துவந்த புயா குடும்பம் (தைலமியர்கள் என்றும் அழைக்கப்பட்டது) அவர்களை மீண்டும் கொராசானுக்குள்ளேயே விரட்டியடித்தது; இங்கேயே அவர்கள் தங்கினர்.

**961.** சாமானிக் குடும்பத்தின் 5-ஆவது மன்னரான **அப்தல் மலீக்கின்** கீழ், **அலப்தகீன்** என்ற பெயருடைய ஒரு **துருக்கிய அடிமை** கடைசியில் **கொராசானின்** கவர்னராக நியமிக்கப்பட்டார்; இவர் அரசவை விதூஷகராக அரசப் பணியில் நுழைந்திருந்தார்; பிறகு அப்தல் மலீக் சீக்கிரம் இறந்துவிடவே, புதிய மன்னரால் விரும்பப்படாத அலப்தகீன் பொறுக்கி யெடுக்கப்பட்ட சில ஆட்களுடன் **கசினிக்கு** ஓடிப்போய், அங்கு தன்னைக் கவர்னராக்கிக் கொண்டார்.

**அலப்தகீனுக்குப்** பிறகு, அவரது அடிமைகளில் ஒருவரான **சுபக்தகீன்** கொராசானின் அரசவையில் பதவி யேறினார். இந்திய எல்லையிலிருந்து **கசினி** 200 மைல்களே இருந்தது; எனவே, **லாகூர் ராஜா ஜெய்பால்,** ஒரு முஸ்லீம் அரசாங்கம் அண்மையிலிருப்பது பற்றி அச்சங் கொண்டு, **கசினியை எதிர்த்துப்** படையுடன் கிளம்பினார்; சமாதானம் செய்து கொள்ளப்பட்டது; ராஜா அதை மீறினார்; ஆகவே சுலைமான் மலைகள் வழியாக அணிவகுத்துச் சென்று சுபக்தகீன் இந்தியாமேல் படையெடுத்தார். **டெல்லி, கனோஜ், காலிஞ்சர் ஆகிய நாடுகளின் ராஜாக்களுடன்** ஜெய்பால் கூட்டணி ஏற்படுத்திக் கொண்டு, பல லட்சம் பேர்களைக் கொண்ட ஒரு படையுடன் முன்னேறினார்; **சுபக்தகீனால் தோற்கடிக்கப்பட்டார்;** பிறகு பஞ்சாபில் பெஷாவரின் கவர்னராக ஒரு முகமதிய அதிகாரியை விட்டு விட்டு, சுபக்தகீன் சீக்கிரமே திரும்பிப் போனார்; இடையில், சாமானிக் குடும்பத்தின் 7-ஆவது மன்னர் **நூஹ்** என்பவருக்கு எதிராகத் தார்த்தாரியர்களின் கலகம் ஒன்று மூண்டு விட்டது; நூஹ் ஆக்ஸஸுக்கு அப்பால் பாரசீகப் பகுதிக்கு விரட்டப்பட்டார். அவரது உதவிக்கு **சுபக்தகீன் விரைந்து,** கலகக்காரர்களைத் துரத்தி யடித்

தார்; நுஹ் நன்றியறிவுடன் (சுபக்தகீனுடைய மூத்த மகன்) மாமூது என்பவரைக் கொராசானின் கவர்னராக்கினர் சுபக்தகீனுடைய மரணத்தின் பொழுது மாமூது வெளியூரில் இருந்ததால், அவரது தம்பி இஸ்மாயில் கசினியின் அரியணையைக் கைப்பற்றினர்; ஆனல் மாமூது அவரைத் தோற்கடித்து, சிறைப்படுத்தினர். அப்பொழுது சாமானி அரசராக இருந்த மன்சூர் என்பவரிடம் மாமூது தூது ஒன்றை அனுப்பி, தன்னைக் கசினியின் கவர்னராக அங்கீகரிக்கும்படி கேட்டார்; இது மறுக்கப்பட்டது, கசினியின் சுதந்திரமான அரசனுக மாமூது தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டார்; பிறகு சீக்கிரமே மன்சூர் அரியணையிலிருந்து தள்ளப்பட்டு—

**999**—கசினி மாமூது, சுல்தான் பட்டத்தை மேற்கொண்டார்.

**999—ஏப்ரல் 29, 1030** (அவர் மரணம்), கசினி மாமூது.

**999.** இலெக்கான் என்ற, மன்சூரின் படைத் தலைவர்களில் ஒருவர், சாமானியர்களின் வீழ்ச்சியைப் பயன்படுத்திக் கொண்டு பொகாராவையும், ட்ரான்ஸ் ஆக்சியானுவிலிருந்து எல்லா முஸ்லீம் பிரதேசங்களையும் கைப்பற்றினர். அவருக்கும் மாமூதுக்கும் போர் மூண்டது.

**1000.** இலெக்கானுடன் மாமூது சமாதானம் செய்து கொண்டு, அவரது மகளை மணந்தார். இவ்வாறு அவர் செய்ததன் திட்டம், இந்தியாவுக்கு எதிராகப் படையெடுப்பதற்குச் செயல் சுதந்திரம் பெறுவதுதான்.

## (2) கசினி மாமூது, அவரது இந்தியப் படையெழுச்சிகள்; அவரது சந்ததியாரின் படையெழுச்சிகள் முறையே 999—1152; 1186

**1001.** மாமூதின் முதல் இந்தியப் படையெழுச்சி. லாகூர். பெரும் படையுடன் மாமூது சுலைமான் மலைகளைக் கடந்தார்;

லாகூரின் ராஜா ஜெய்பாலை பெஷாவருக்கு அருகில் தாக்கினார்; பிறகு சட்லெஜ் நதியைக் கடந்து, பாடிண்டாவைப் பிடித்தார்; ஜெய்பாலின் மகன் ஆனந்த்பாலை ராஜாவாக நியமித்துவிட்டு, கஜினிக்குத் திரும்பினார்.

**1003***. மாமூதின் இரண்டாவது படையெழுச்சி. பாடியா. தன்மீது சுமத்தப்பட்ட சமாதான நிபந்தனைகளை ஆனந்த்பால் கடைபிடித்தார்; ஆனால் சமாதான ஒப்பந்தத்தில் உடன் கையெழுத்திட்டவர்களில் ஒருவரான பாடியா ராஜா கப்பம் செலுத்த மறுத்தார். மாமூது அவருக்கு எதிராகச் சென்று அவரைத் தோற்கடித்தார்.

**1005**. மாமூதின் மூன்றும் படையெழுச்சி. முல்தான். முல்தானின் ஆப்கானியத் தலைவரான அபுல் பதே லோடி புரட்சி செய்தார்; மாமூது அவரைத் தோற்கடித்து ஒரு கட்டணத்தைச் சுமத்தினார். அவர் இல்லாத சமயத்தில், இலெக்கான் ஆக்சஸைக் கடந்து, பெரிய தார்த்தாரியப்படையுடன் கொராசானைத் தாக்கினார். மாமூது, கசினியிலிருந்து கொராசானுக்கு (இந்திய யானைகளுடன்) விரைந்து, இலெக்கானை மீண்டும் பொகாராவுக்குத் துரத்தினார்.

**1008**. மாமூதின் நான்காம் படையெழுச்சி. பஞ்சாப். நகர்க் கோட்டை ஆலயம். பாடிண்டாவின் ராஜா ஆனந்த்பால் இந்தியத் தலைவர்களைக் கொண்ட பலமிக்க கூட்டணியை மாமூதுக்கு எதிராக அமைத்தார். இந்துக்கள் ஆவேசத்துடன் போரிட்டனர்; மாமூது அவர்களைத் தோற்கடித்து, நகர்க் கோட்டை ஆலயத்தைக் கொள்ளையடித்தார்.

* 1004, என்கிறார் எல்பின்ஸ்டன், இந்திய வரலாறு. லண்டன், 1866.

**1010.** **ஆப்கானியர்கள் வசிக்கும் கோர் ராஜ்யத்தை** *மாமூது வென்றார்.*

**1010.** **குளிர் காலம். மாமூதின் ஐந்தாம் படையெழுச்சி. முல்தான் மீது புதிய படையெழுச்சி;** *அபுல் பதே லோடி கைதியாகக் கசினிக்குக் கொண்டு வரப்பட்டார்.*

**1011.** **மாமூதின் ஆறும் படையெழுச்சி. தானேஸ்வரம்** *(யமுனைக் கரையில்), சிற்றரசர்கள் தங்களது சேனையைத் திரட்டுமுன்னர், செல்வம் மிக்க ஆலயத்தை அவர் இங்கே கைப்பற்றினார்.*

**1013ம் 1014ம். ஏழாவது, எட்டாவது படையெழுச்சிகள்.** *கொள்ளையடிப்பதற்காகவும், வேவு பார்ப்பதற்காகவும்* **காஷ்மீரத்தில்** *இரண்டு அத்து மீறிய நுழைவுகள்.*

**1013.** **இலெக் கான் மரணம்.** *1016 ல்* **பொகாராவையும் சமர்கந்தையும்** *மாமூது பிடித்தார்; பிறகு 1017 ல் ட்ரான்ஸ் ஆக்சியானுவைக் கைப்பற்றுதலை நிறைவேற்றி முடித்தார்.*

**1017,** **குளிர்காலம். ஒன்பதாம் படையெழுச்சி.** *மாமூதின் பெரிய படையெழுச்சி;* **பெஷாவர் வழியாகக் காஷ்மீரத்தினுள்** *நுழைந்து, அங்கிருந்து* **யமுனையை** *அடைந்து. அதைக் கடந்தார்; (புராதன நகரம்)* **கனோஜ்** *அவரிடம் சரணடைந்தது; பிறகு அவர் முன்னேறி* **மதுராவுக்குச்** *சென்று, அதைத் தரைமட்ட மாக்கினார்;* **மகவானையும் முஞ்சையும் கொள்ளை யிட்டு** *விட்டுத் திரும்பினார்.*

**1022.** **பத்தாவது, பதினொன்றாவது படையெழுச்சிகள்.** *தனது நகரத்திலிருந்து துரத்தப்பட்ட* **கனோஜ்** *ராஜாவுக்கு உதவியாக இரண்டு போர் எழுச்சிகள். இப்படையெடுப்புகள் ஒன்றின் பொழுது* **லாகூர் முழுமையாக வெல்லப்பட்டது.**

**1024.** **பன்னிரண்டாவது படையெழுச்சி.** *குஜராத்தும்* **சோம்நாத்தும்.** *மாமூதின் கடைசி பெரிய படையெடுப்பு;*

அவர் கசினியிலிருந்து முல்தானுக்குப் படையெடுத்துச் சென்று, பிறகு சிந்து பாலைவனத்தின் வழியாக குஜராத்தை அடைந்து, தலைநகரம் அன்ஹுல்வாரைப் பிடித்தார்; தனது வழியில் அஜ்மீர் ராஜாவின் பிரதேசங்களை அழித்து, பிறகு ராஜபுத்திரப் படையால் வீரத்துடன் பாதுகாக்கப்பட்ட சோம்நாத் ஆலயத்தைக் கைப்பற்றினர். பிறகு மாமூது அன்ஹல்வாருக்குத் திரும்பி, அங்கு ஓராண்டு தங்கினர். பாலைவனத்தின் வழியாக அவரது [மீட்சி] பெரிய சேதத்தை விளைவித்தது.

**1027.** செல்ஜுக்குகள் என்ற துருக்கியக் குலங்கள் (Tribes-மொர்) புரட்சி செய்தன; மாமூதினல் நசுக்கப்பட்டன.

**1028.** தைலமியர்களிடமிருந்து பாரசீக ஈராக் மீண்டும் வெல்லப்பட்டதன் மூலம் பாரசீகம் முழுதும் மாமூதின் ஆட்சியின் கீழ் கொணரப்பட்டது.

**ஏப்ரல் 29, 1030.** கசினி மாமூதின் மரணம். கவிஞர் பிர்தௌசி அவரது அவையில் வசித்தார். அவரது படை பெரும்பாலும் துருக்கியர்களைக் கொண்டிருந்தது; இவர்கள் பாரசீகர்களுக்கு அடிமைகள் எனக் கருதப்பட்டு, மம்லூக் (அடிமை) காவற்படை அணிகளாக அமைக்கப்பட்டிருந்தனர். ஆட்டிடையர்கள் பெரும்பாலும் தார்த்தாரியர்கள். பிரபுக்களும் உயர்தர மக்களில் பெருவாரியானவர்களும் அரேபியர்கள்; நீதி, மதம் பற்றிய எல்லா அதிகாரங்களையும் அவர்கள் பெற்றிருந்தனர்; சிவில் நிர்வாகம் பெரும்பாலும் பாரசீகர்களால் நடத்தப்பட்டது.

மாமூதுக்குப்பின் மூன்று குமாரர்கள் இருந்தனர்; முகம்மது, மசூத், அபுல் ரஷீது; தான் இறக்கும்பொழுது, தனது மூத்த மகன் முகம்மதுவைச் சுல்தானுக இருக்கும்

படி அவர் நியமித்தார்; ஆனால் அதே ஆண்டில் (1030), படை வீரர்களால் நேசிக்கப்பட்டவராகிய **மசூத்,** தனது அண்ணனைப் பிடித்துக் குருடாக்கிச் சிறையில் வைத்து, அரியணையைப் பிடித்துக் கொண்டார்.

**1030-1041.** **சுல்தான் மசூத் I.** ஆக்சஸுக்கு அப்பாலிருந்த செல்ஜுக் துருக்கியர்கள் அவரது ஆட்சியில் **கலகம்** செய்தனர்; மசூத் அவர்களைத் தங்களது நாட்டுக்கு மீண்டும் விரட்டி யடித்தார்,

**1034.** **மசூத் I** லாகூரில் ஏற்பட்டிருந்த அமைதி குலைவை ஒடுக்குவதற்கு இந்தியா [சென்றார்];பிறகு செல்ஜுக்குகளுக்கு எதிராகப் படையுடன் போனார்.

**1034-1039.** செல்ஜுக்குகளுக்கு எதிராக அவரது போர்; **மெர்வுக்கு** அருகில் **சந்தேகானில்** [தன்டன்கானில்] முழுதும் தோற்கடிக்கப்பட்டு அவர் இந்தியாவுக்கு ஓடிப்போனார்; அவருடைய அதிகாரிகளின் **கலகம்;** முகம்மதுவின் மகன் **அகமதுவை** அவர்கள் அரியணைமேல் அமர்த்தினர்; இவர் தனது சிற்றப்பன் மசூதைத் தொடர்ந்து பின் சென்று, அவரைப் பிடித்துக்—

**1041—கொன்றார்.** கொல்லப்பட்ட சுல்தானின் மகன் **மவ்தூதினல் சுல்தான் அகமது** [தாக்கப்பட்டார்]. [அவர்] **பல்கி**லிருந்து புறப்பட்டு, லக்மானில் அகமதுவைச் சந்தித்து அவரைத் தோற்கடித்தார்; பின், அவரையும் அவரது குடும்பம் முழுதையும் கொல்லுவித்து, **சுல்தா**னைகத் தன்னைப் பிரகடனப் படுத்திக் கொண்டார்.

**1041-1050.** **சுல்தான் மவ்தூத்.** ட்ரான்ஸ் ஆக்சியானவில் செல்ஜுக்குகள் **தொஹ்ரில் பேக்கை**த் தங்களது தலைவராகத் தேர்ந்தெடுத்து, எல்லாத் திசைகளிலும் ஆக்கிரமிப்புகளை விரும்பித் தங்களது சேனையைச் சிதறவிட்டு விட்டார்கள்; ஆகவே, ட்ரான்ஸ் ஆக்சியானவை மவ்தூதினல் வெல்ல முடிந்தது.—மறு பக்கத்தில்

டெல்லி அரசர் கலகம் செய்து, தானேஸ்வரம், நகர்க் கோட்டை, மேலும் லாகூர் நீங்கலாக சட்லெஜ்ஜுக்கு அப்பாலுள்ள பிரதேசங்கள் ஆகியவைகளை முகம் மதியர்களிடமிருந்து பறித்துக் கொண்டார்; லாகூர் மட்டும் சிறிய முகம்மதியக் கோட்டைப் படையால் காபாற்றப்பட்டது.

**1046.** தனது வாழ்நாள் முழுதும் செல்ஜுக்குகளை எதிர்த்துப் போரிட்டிருந்த மவ்தூத், அக்குலத்தினருக்கு எதிராகத் தனக்கு உதவும்படி கோர் ராஜாவால் கோரப் பட்டார்; அவ்வாறு செய்வதாக உறுதி தந்தார்; ஆனால் அதற்கு மாறாக, தனது கூட்டாளியைக் கொன்று, கோரைப் பிடித்துக் கொண்டார். அவரும் கசினியில் **1050** ல் இறந்தார்; அவருக்குப் பின் அவரது தம்பி—

**1050-1051**—சுல்தான் அபுல் ஹசன் அரியணை யேறினார்; நாடு முழுவதும் அவருக்கு எதிராகக் கலகம் செய்தது; கசினி மட்டுமே அவரிடம் எஞ்சியிருந்தது. அவரது தளகர்த்தர் அலி இபின் ரபியா இந்தியாவுக்குச் சென்று, அங்கு தன்னிச்சையாகவே ஆக்கிரமிப்புகளைச் செய்தார். சுல்தான் அபுல் ஹசனின் சிற்றப்பனும், சுல்தான் மாமூதின் இளைய குமாரனுமாக அபுல் ரஷீது வுக்கு ஆதரவாக மேற்குப் பகுதி முழுவதும் ஆயுத மேந்தி [எழுந்தது]; ரஷீது கசினியில் அபுல் ஹசனைப் பதவியிலிருந்து நீக்கினார்.

**1051—1052.** சுல்தான் அபுல் ரஷீது; கலகத் தலைவர் தொஹ்ரில் என்பவரால் கசினியில் முற்றுகையிடப் பட்டார்; கோட்டை தாக்கப்பட்டு, அரசவம்சத்தைச் சேர்ந்த ஒன்பது இளவரசர்களுடன் சுல்தான் கொல்லப் பட்டார்; ஆத்திரங் கொண்டெழுந்த பொதுமக்களால் தொஹ்ரில் கொல்லப்பட்டார்; அவரது குலத்தினர் நாட்டை விட்டுத் துரத்தப்பட்டனர். சுபக்தகீன்

குடும்பத்தைச் சேர்ந்த ஒரு இளவரசனை நாடு தேடியது; ஒரு **கோட்டையில்** சிறை வைக்கப் பட்டிருந்த **பரூக்சாத்** கண்டு பிடிக்கப்பட்டு, விடுதலை செய்யப் பட்டு, அரியணையில் அமர்த்தப் பட்டார்.

**1052—1058. சுல்தான் பரூச்சாத்.** அமைதியான ஆட்சி; இயற்கை மரணம் எய்தினர்; பின்னர் அவரது **சகோ** தரர்—

**1058—1089**—(பக்திமான்) **சுல்தான் இப்ராஹிம்** பட்ட மெய்தினர். முக்கிய நிகழ்ச்சிகள் ஒன்றும் நிகழாத ஆட்சி; அவருக்குபின் பட்டமேற்றவர் **அவரது மகன்—**

**1089—1114—சுல்தான் மசூத் II; இவர் முகம்மதியர்களின் படை வலிமையைக் கங்கைக்கு அப்பாலும் காட்டினர்;** அடுத்து பட்டத்துக்கு வந்தவர் இவரது மகன்—

**1114—1118—சுல்தான் அர்ஸலான்; பஹ்ராம்** தவிர தனது மற்ற எல்லாச் சகோதரர்களையும் இவர் பிடித்துச் சிறைப்படுத்தினர்; பஹ்ராம் மட்டும் **செல்ஜுக்குகளிடம்** ஓடிச் சென்று தப்பித்துக் கொண்டார்; இவர்கள் பஹ்ராமின் கட்சியை மேற்கொண்டு, அர்ஸலானுக்கு எதிராகப் படையெடுத்துச் சென்று அவரைத் தோற்கடித்து, பஹ்ராமை அரியணை ஏற்றினர்.

**1118—1152. சுல்தான் பஹ்ராம்.** சில ஆண்டுக்கால ஆட்சிக்குப் பிறகு, இவர் **கோரில்** தலையிட்டு, இளவரசர்களில் ஒருவரைக் கொலை செய்தார்; கொல்லப்பட்ட மனிதரின் சகோதரர் **சைபுதீன்** இவருக்கு எதிராகக் கிளம்பி, கசினியைப் பிடித்து பஹ்ராமை மலைகளுக்கு விரட்டியடித்தார். **பஹ்ராம் திரும்பி வந்து** சைபுதீனைப் பிடித்து வதைத்துக் கொன்ருர்; கொலையுண்டவரின் சகோதரர் **அலாவுதீன்,** கோரியர்களைக் கொண்ட ஒரு படையுடன் வந்து கசினியை முழுதும் அழித்துத் தரைமட்டமாக்கினர்; மாமூது, மசூத் I, இப்ராஹிம் ஆகி

யோரின் சமாதிகளாகிய மூன்று கட்டிடங்களை மட்டுமே விட்டு வைத்தார். பஹ்ராம் லாகூருக்கு ஓடிப் போனர்; கசினி வம்சம் முடிவுற்றது. லாகூரில் கசினி அரச குடும்பம் மேலும் **34** ஆண்டுகள் (**1186** வரை) ஆட்சி புரிந்து, பிறகு அழிந்தொழிந்தது.

இவ்வாருக, கசினி மாமூதின் வம்சம், மாமூது தன்னை (999-ல்) சுல்தாளுகப் பிரகடனப்படுத்திக் கொண்ட பின் **187** ஆண்டுகள் கழித்து முடிவுற்றது.

## (3) கோர் குடும்பம், சுபக்தகீன் குடும்பத்தின் இடிந்த அஸ்திவாரத்தின் மீது கசினியில் தன் அரசை நிறுவுதல், 1152—1206

**1152—1156.** அலாவுதீன் அர்ஸ்லானிலிருந்து செல்ஜுக்குகளிடம் தப்பித்து ஓடிச் சென்ற பொழுது, அவர்கள் தன்னை அரியணையில் மீண்டும் அமர்த்திஞல் அவர்களுக்குக் கப்பம் கட்டுவதாக பஹ்ராம் உறுதி தந்திருந்தார்; தான் விரட்டப்படும் வரை அவ்வாறே அதைக் கட்டியும் வந்தார். தன்னைக் கசினி மன்னன் என்று அலாவுதீன் பிரகடனப்படுத்திக் கொண்ட உடனே, முன்பு போலவே கப்பம் செலுத்தப்படவேண்டுமென்று செல்ஜுக் தலைவர் சஞ்சார் கேட்டார்; அலாவுதீன் மறுத்தார்; அவரை எதிர்த்து சஞ்சார் படையெடுத்துச் சென்று, அவரைச் சிறை பிடித்தார்; ஆயினும், அவரை மீண்டும் பதவியில் அமர்த்தினர்.

**1153.** ஒகூஸ் தார்த்தாரியக் குலமானது சஞ்சார், அலாவுதீன் ஆகிய இருவரது பிரதேசங்களையும் படையெடுத்து அழித்தது. அலாவுதீனின் மரணத்துக்குப் பிறகு அவரது மகன்—

**1156—1157**—சைபுதீன் பட்டத்துக்கு வந்தார்; இவர் தனது பிரபுக்களில் ஒருவருடைய சகோதரரைக்

கொன்றிருந்ததால், தான் அப்பிரபுவால் கொல்லப் பட்டார். **அலாவுதீனுக்கு உடன் பிறந்தார் குமாரர்கள் இருவர்** இருந்தனர்; அவர்கள் **கியாசுதீன், ஷெகாபுதீன்** என்ற சகோதரர்கள்.

**1157—1202. கியாசுதீன்** அரியணை யேறி, தனது சகோதரர் ஷெகாபைச் சேனைகளின் தளபதியாக ஆக்கி, அவருடன் இணைந்து இருந்தார். இவ்விரண்டு சகோதரர்களும் **செல்ஜுக்குகளிடமிருந்து கொராசானை வென்று,** ஒன்றுபட்டுப் பணி புரிந்தனர்.

**1176. ஷெகாப் லாகூருக்கு**[ச் சென்றார்]; **மாமூது குடும்பத்தின் கடைசி பிரதிநிதியாகிய குஸ்ரு II** வைத் தோற்கடித்தார்.

**1181. ஷெகாப் சிந்துவைக் கைப்பற்றி, 1186-ல்** குஸ்ருவைச் சிறைப்படுத்தினார்; பிறகு, இந்துஸ்தானத்திலிருந்த பலமிக்க **ராஜபுத்திரச் சிற்றரசுகளை** நோக்கித் தன் கவனத்தைத் திருப்பினார்; **டெல்லி**மீது செய்த தாக்குதலில், அப்பொழுது டெல்லி, அஜ்மீர் ஆகியவற்றை ஆண்டு வந்த **பிருதிவிராஜா** என்ற பெரிய மன்னரால் தோற்கடிக்கப்பட்டு, கசினி திரும்பினார்.

**1193. ஷெகாப்** மீண்டும் இந்தியாமீது படையெடுத்து, பிருதிவிராஜாவைத தோற்கடித்துக் கொன்று, பிரபுவாக்கப்பட்ட அடிமை* குதபுதீனை **அஜ்மீரின் கவர்னராக** விட்டு அகன்றார். குத்புதீன் **டெல்லியை வென்று,** அங்கேயே கவர்னராகத தங்கி, பின்னர் தன்னைச் சுதந்திரமானவராகப் பிரகடனப் படுத்திக் கொண்டு, **டெல்லியின் முதலாவது முகம்மதிய மன்னராக** ஆனார்.

---

* கிழக்கத்திய மன்னரின அடிமைகள் (மம்லூக்குகள்), அரசவையில் அடிக்கடி பிரதான பங்கு ஆற்றி, சில சமயங்களில் அரண்மனைப் புரட்சிகளும் நடத்தினர்.

**1194.** ஷெகாப் கனேஜையும் காசியையும் கைப்பற்றி (கனேஜ் நகரத்து ராஜா [கொல்லப்பட்டார்]வும் அவரது குடும்பத்தினரும் மார்வாருக்கு விரட்டப்பட்டனர்; அங்கே அவர்கள் ஒரு சிற்றரசை நிறுவினர்), குவாலியரையும் தன்னாட்சியில் இணைத்துக் கொண்டார்; அதே சமயம் குஜராத், அயோத்தி, வடக்கு பீஹார், வங்காளம் ஆகியவற்றைக் குத்புதீன் கொள்ளையடித்தார்.

**1202.** கியாஸ் மரணம்; அடுத்து பட்டம் சூட்டிக் கொண்டவர் அவரது சகோதரர்—

**1202—1206**—ஷெகாபுதீன்; குவாரிசத்தைக் கைப்பற்ற முயன்று தோற்று, உயிர் தப்பிக்க ஓட்டம் பிடிக்க வேண்டியதாயிற்று.

**1206.** குவாரிசத்தின் மேல் இரண்டாம் படையெடுப்பு; தனது காவலர்களிடமிருந்து விலகி யிருந்தபொழுது சில காகார்களால் (ஒரு கொள்ளைக்காரக் குலம்) கொல்லப்பட்டார்; அவரது உடன் பிறந்தார் மகன்—

**1206**—மாமூது அடுத்தபடியாகப் பதவியேறினர்; உள்நாட்டுப் பூசல்களிலிருந்து ராஜ்யத்தைப் பாதுகாக்க இயலவில்லை; அது சிதைந்தது; ஷெகாப்பின் நெருங்கிய அடிமைகள் அதன் பல்வேறு பகுதிகளைப் பிடித்துக் கொண்டனர். சுல்தானி பங்கிடப்பட்டது; குத்புதீன் டெல்லியையும் இந்தியப் பிரதேசங்களையும் எடுத்துக் கொண்டார். (**1200** ஆண்டுகளாகச் சிறிய, முக்கிய -மற்றொரு ராஜ்யத்தின் தலைநகரமாக டெல்லி இருந்தது.) ஈல்தீஸ் என்ற ஒரு அடிமை கசினியை எடுத்துக் கொண்டார்; ஆனால், குவாரிச மன்னனால் விரட்டப்பட்டு, டெல்லிக்கு ஓடிப்போனார். நசீருதீன் என்ற இன்னொரு அடிமை, முல்தானுக்கும், சிந்துவுக்கும் தன்னை எஜமானாக ஆக்கிக் கொண்டார்.

## (4) டெல்லியின் அடிமை [மம்லூக்] மன்னர்கள், 1206—1288

**1206—1210.** குத்புதீன்; *அவரது மரணத்தின் பின்னர் அவர் மகன்—*

**1210—**ஆராம் *பட்டம் ஏறினர்; அடுத்த ஆண்டில் தனது மைத்துனரால்* கவிழ்க்கப்பட்டு, *ஆட்சியை இழந்தார்; இம் மைத்துனர்—*

**1211—1236—**ஷம்சுதீன் அல்டமிஷ்.

**1217.** ஜெங்கிஸ்கான் *(பிறப்பு 1164*)* தலைமையில் மாபெரும் மங்கோலியப் படை *தூரானிலிருந்து வந்து,* குவாரிசத்தைத் தாக்கிற்று; *சிந்து நதிக்கரை வரை தோற்கடித்துத் தள்ளப்பட்ட [ஷாவின் மகன்]* ஜலால் *குவாரிசத்தை, சிந்து நதிக்கரை வரையில், வீரத்துடன் காத்துப் போராடினர். மங்கோலியருக்கு அஞ்சி, எந்த அரசரும் அவருக்கு ஆதரவு தராமல் போகவே, அவர்* காகார்கள் கூட்டம் *ஒன்றைத் திரட்டிக்கொண்டு பரவலாகக் கொள்ளையடித்தார்.*

*பின்னர், நசிருதீனுடைய* முல்தான், சிந்துப் பிரதேசத்திற்குள் *பெரும்படையை* ஜெங்கிஸ்கான் *அனுப்பி, அதைப் பாழாக்கினர்; மங்கோலியர்கள்* சிந்துவைக் *கடந்து மீண்டதும்,* ஷம்சுதீன் அல்டமிஷ் *நாட்டின் நிலைமையைப் பயன்படுத்திக்கொண்டு, அதைத்* தாக்கி, வென்று, தன் ராஜ்யத்துடன் இணைத்துக்கொண்டார்.

* *ஸ்க்லோசெரிலிருந்து மார்க்ஸ் எடுத்தாண்ட கால* வரையறை *பற்றிய பகுதிகளில்,* ஜெங்கிஸ்கான் *பிறந்த ஆண்டு 1155 என்று தரப்பட்டுள்ளது* (மார்க்ஸ், ஏங்கெல்ஸ் தஸ்தாவேஜுகள் *தொகுதி V, பக். 219). இந்தத் தேதி இப்பொழுது பொதுவாக* ஒப்புக்கொள்ளப்படுகிறது.

**1225.** ஷம்சுதீன் பீஹாரரையும் மாளவத்தையும் வென்று—

**1232.** இந்துஸ்தானம் முழுதிலும் மன்னர் என அங்கீகரிக்கப் பட்டார்; தனது ஆட்சியின் உச்ச கட்டத்தில் **1236**ல் அவர் காலமானார்; அடுத்து பட்டத்துக்கு வந்தவர்—

**1236**—அவரது மகன் ருக்நுதீன்; அதே ஆண்டில் தனது சகோதரியால் பதவியிலிருந்து விலக்கப்பட்டார்! சகோதரி அரியணையைக் கைப்பற்றினார்.

**1236—1239.** சுல்தானா ரசியா; அரசவையிலிருந்த ஒரு அபிசீனிய அடிமையுடன் இவ்வம்மையாரது காதல் சம்பவ மானது அவைப் பிரபுக்களுக்கு ஆத்திர மூட்டியது; பாடிண்டாவின் தலைவர் அல்தூனியா புரட்சி செய்து, இப் பெண்மணியைக் கைதியாக்கினார்; ரசியா அவரைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டார்; அல் தூனியா பிறகு டெல்லிக்குப் படையெடுத்துச் சென் றார்; பிரபுக்கள் அவரைத் தோற்கடித்து, ரசியாவைக் கொன்றார்கள்; இவருக்குப் பிறகு இவரது சகோதரர்—

**1239—1241**—மொயிசுதீன் பஹ்ராம் பட்ட மேறினார்; பயங் கரமான கொடுங்கோலர்; இவர் கொலை செய்யப் பட்டார்; பிறகு ருக்நுதீனின் மகன்—

**1241—1246**—அலாவுதீன் மசூத் அரியணை யேறினார்; கொலை செய்யப்பட்டார். ஷம்சுதீன் அல்டமிஷ்ஷின் பேரனும் மொயிசுதீன் பஹ்ராமின் மகனுமான ஒருவருக்கு அரியணை இப்பொழுது தரப்பட்டது; அவர்—

**1246—1266**—நசீருதீன் மாமூது. கியாசுதீன் பால்பன் என்ற அடிமைதான் அவரது அமைச்சர்; மொகலாய (மங்கோலிய)த் தாக்குதல்களை எதிர்த்து விரட்டுவதற்குப் பலம் பொருந்திய எல்லைப்புற நாட்டுக் கூட்டிணைப்பை இந்த பால்பன் அமைத்தார்; மேலும் பல சிறிய இந்து அரசு களைத் தோற்கடித்தார்.

**1258.** பஞ்சாபின் மீதான இன்னொரு மங்கோலியத் தாக்கு தலைப் பால்பன் எதிர்த்து விரட்டினார்.

**1266.** மன்னர் நசீருதீன் மாமூது குழந்தையின்றி இறந்தார்; அரியணை அவரது அமைச்சர்—

**1266—1286**—கியாசுதீன் பால்பனுக்குக் கிடைத்தது; இந்தியாவில் அவரது அரசவை ஒன்று மட்டும்தான் முகம்மதிய அரசவையாக இருந்தது.

**1279.** வங்காளத்தில் கலகம் காரணமாக அவர் போர்க்களம் புகுந்தார்; அவர் இல்லாத நேரத்தில், டெல்லியின் கவர்னர் தொஹ்ரில் புரட்சி செய்து, அங்கரின் அரசராக தன்னை ஆக்கிக்கொண்டார்; கியாஸ் திரும்பி வந்து அவரைத் தோற்கடித்து, அவரையும் 1,00,000 கைதிகளையும் கொன்றார்; அவர் **1286**ல் இறந்தார்; அவருக்குப் பிறகு பட்டமேறியவர், இன்னும் உயிருடனிருந்த அவரது இரண்டாம் மகன் (அவரது முதல் மகன் முன்னரே இறந்துவிட்டார்) பகரா கான் அல்ல, ஆனால் பகராகானின் மகன்—

**1286—1288**—கைகோபாத் (பால்பனின் மூத்த மகன் முகம்மதுவுக்கும் அதேபோல் ஒரு மகன் இருந்தார்; கைகுஸ்ரு என்ற இவர் முல்தான் கவர்னராக நியமிக்கப் பட்டார்).

**1287.** சதி செய்து கொண்டிருந்த தனது முதலமைச்சர் நைசாமுதீனுக்கு (இவர் முதலில் கைகுஸ்ருவுடன் சேர்ந்து சதி புரிந்தார்; பிறகு அவரைக் கொல்லுவித்தார்; மேலும், தனது அசரவையிலிருந்த எல்லா மங்கோலியர்களையும் ஒரு விருந்தின்போது நயவஞ்சகமாகக் கொலை செய்யும்படி கைகோபாதை இவர் தூண்டினார்) [கைகோபாத்] நஞ்சிட்டார். முதலமைச்சர் மரணத்தின் பிறகு, அரசவையில் குழப்பம். அப்பொழுது (1287)

டெல்லியில் முதன்மையான கட்சியானது **கில்ஜிகள்** ஆகிய பழைய **கசினிக்** குடும்பம்தான்; **1288**ல் அவர்கள் **கைகோபாதைக்** கொன்று—

**1288**—தங்களது தலைவர் **ஜலாலுதீன் கில்ஜியை, டெல்லி அரியணை** மேல் அமர்த்தினர்.

## (5) கில்ஜி குடும்பம், 1288—1321

**1288—1295**. **ஜலாலுதீன்** கில்ஜி; இணக்கமான ஆட்சி முறையை ஏற்படுத்தினர்; ஒரு கலகத் தலைவனை, கியாசுதீனின் உடன் பிறந்தார் மகனை, மன்னித்தார்; ஒரு **மங்கோலிய ஊடுருவலை** முறியடித்து விரட்டிய பின், எல்லாக் கைதிகளையும் விடுதலை செய்தார்.

**1293. 3000 மங்கோலியர்கள்** அவருடன் சேர்ந்துகொண்டார்கள்; அவர்கள் டெல்லியில் குடியமர்த்தப்பட்டனர். ஔத்* 'மாகாணத்தின் கவர்னராக ஆக்கப்பட்டிருந்த, அவரது உடன்பிறந்தார் மகன் **அலாவுதீன் தக்காணத்தைப் படையெடுக்கத்** திட்டமிட்டு, எல்லிச்பூர் வழியாகத் **தேவகிரி** (இப்பொழுது **தௌலதாபாத்** என அழைக்கப் படுகிறது)க்குச் சென்று, ஆழ்ந்த அமைதியில் அங்கு வசித்துக்கொண்டிருந்த இந்து ராஜாவைத் திடீரெனத் தாக்கி, அவரது நகரத்தையும் செல்வங்களையும் சூறையாடி, சுற்றிலும் இருந்த நிலப்பகுதிமீது போர் நஷ்ட ஈட்டுத் தொகையைச் சுமத்தினர்; **அவருடன் ராஜா சமாதானம் செய்துகொண்டார்**; எனவே, அவர் **மாளவத்திற்கு** மீண்டார்; பிறகு **டெல்லிக்குச்** சென்று, அங்கு மன்னரான தனது மாமன் தன்னைத் தழுவியபொழுது இருதயம் வரை பாயும்படி அவரைக் குத்திக்கொன்றார்.

---

* அயோத்தி என்பதுதான் ஐரோப்பியர்களால் ஔத் என்று அழைக்கப்படுகிறது—மொ.ர்.

**1295—1317.** **அலாவுதீன் கில்ஜி** (*மிக மிக மூர்க்கத் தனமும் குருதி வெறியும் கொண்டவர்*) *தனது மாமன் இறந்தபின், அவரது குமாரர்களையும், விதவை மனைவியையும் கொன்றார். இதனால் புரட்சி விளைந்தது; கலகக்காரர்களின் மனைவி மக்களை நிறையக் கொன்று குவித்து அக்கலகத்தை நசுக்கினார்.*

**1297.** குஜராத்தை *வென்றார். சற்றுப் பிறகு ஒரு* **மங்கோலியப் படையெடுப்பு** [*நிகழ்ந்தது*]; **அலாவுதீன்** *இதை எதிர்த்து விரட்டினார்.*

**1298.*** *வேட்டைக்குச் சென்றிருந்தபொழுது, தனது உடன் பிறந்தார் மகன் இளவரசர்* **சுலைமான்** *என்பவரால் காயமுற்றார்; அவர் இறந்துவிட்டார் என்று கருதி சுலைமான் அவரை விட்டுவிட்டு மீண்டார்;* **சுலைமான்** *டெல்லிக்கு* [*ச் சென்று*], *அரியணை தனது என்று உரிமை கொண்டாடினார்; ஆனால்,* **அலாவுதீன்** *உடல் குணமுற்று, படையின் முன்னால் வந்து தோன்ற, அது முழுதும் அவரைப் பின்பற்றி நின்றது.* **சுலைமானும், மற்றும் உடன் பிறந்தார் குமாரர்கள் இருவரும் தலை துணியப்பட்டனர்;** *இதன்மேல் பொது மக்கள் புரட்சி; பயங்கரமான கொடுமையான முறைகளால் ஒடுக்கப்பட்டது.*

**1303.** *தனக்கு எதிராகக் கலகம் செய்த ஒரு* **ராஜபுத்திர**னிடமிருந்து, **அலாவுதீன் மேவாரில் சித்தூரைப் பிடித்தார்;** *இந்தியாவில் மிகவும் கீர்த்தி பெற்ற மலைக்கோட்டைகளில் இது ஒன்று; அதே ஆண்டில், ஒரு* **மங்கோலிய ஊடுருவல்.**

**1304.** *இந்துஸ்தானத்துக்குள் வலிந்து நுழைவதற்கு* **மங்கோலியர்கள் மூன்று தனித்தனி முயற்சிகள் செய்தனர்;** *ஒவ்வொரு தடவையும் எதிர்த்து விரட்டப்பட்டனர்.*

---

* *1299 என்கிறார் எல்பின்ஸ்டன்.*

இந்த சமயங்களில், முகாமிற்குள் கொண்டு வரப்பட்ட எல்லா மங்கோலியக் கைதிகளும் இரக்கமின்றி வெட்டித் தள்ளப்பட்டனர் என்று பெரிஷ்தா கூறுகிறார்.

**1306.** ஜலாலுதீனால் தன் மீது சுமத்தப்பட்ட திறையைத் தேவகிரி ராஜா செலுத்த மறுத்ததால், அலியும் முன்னாள் அடிமையுமான மாலிக் காபூரின் தலைமையில் அலாவுதீன் பெரும் படையை அனுப்பினார். ராஜா தோற்கடிக்கப் பட்டு, டெல்லிக்குக் கொண்டு செல்லப்பட்டார்; அங்கு தன் எஞ்சிய ஆயுட் காலத்தை அவர் கழித்தார்.

**1309.** மாலிக் காபூர் மீண்டும் தென் திசைக்கு, இச்சமயம் தெலிங்கானுவுக்கு, அனுப்பப்பட்டார்; அங்கு அவர் பலம் பொருந்திய வாரங்கல் கோட்டையைக் கைப் பற்றி வெற்றியுற்றார்.

**1310.** மாலிக் காபூர் கர்னாடகத்தையும், குமரி முனை வரையில் கிழக்குக் கடற்கரை முழுவதையும் வென்று, செல்வங்களை நிறையச் சுமந்துகொண்டு டெல்லி திரும்பினார்; தனது வெற்றியின் பரப்பைக் கொண்டாடுவதற்காகக் குமரி முனையில் மசூதி ஒன்றை அவர் கட்டியிருந்தார். தமிழ் மண்ணின் மீது முதலாவது முகம்மதியப் படையெடுப்பு இது தான். டெல்லியில் வாழ்ந்த 15,000 மொகலாயர்கள் அனைவரையும் அலாவுதீன் படுகொலை செய்தார். தான் பட்டம் சூட மாலிக் காபூர் சதி செய்ய ஆரம்பித்தார்; நாட்டில் பெரும் அமைதி குலைவு; ஏனெனில், அலாவுதீ-னுடைய மூர்க்கத்தனத்தினாலும் கொடுங்கோன்மை யினாலும் மக்கள் ஆத்திர முற்றிருந்தனர்.

**1316.** பெருங் கோபத்தினால் விளைந்த வலிப்பினால், இந்த "கொடுங்கோலன்" ஆவியை விட்ட பின்னர், காபூர் அரியணையைக் கைப்பற்ற முயன்றார்; ஆனால் "தீர்த்துக் கட்டப்பட்டார்." பிறகு அலாவுதீனின் மகன்—

**1317—1320**—முபாரக் கில்ஜி பதவியேறினார்; தனது மூன்றும் சகோதரரைக் குருடாக்கி, தான் அரியணை யேற உதவிய இரண்டு தளகர்த்தர்களையும் கொன்று அவர் தனது ஆட்சியைத் தொடங்கினார்; அடுத்து, தனது படை முழுவதையும் கலைத்துவிட்டு, தனது முதலமைச்சரை—குஸ்ருகான்—அடிமையாக்கி, கீழ்த்தர மான தீயொழுக்கங்களில் தான் மூழ்கினார்.

**1319**. குஸ்ரு மலையாளத்தை வென்று—

**1320**—டெல்லிக்குத்திரும்பி, மன்னர் முபாரக்கைக் கொன்று கில்ஜி குடும்பத்தினரில் உயிருடனிருந்தவர்கள் அனை வரையும் தீர்த்துக்கட்டி, நாட்டை அவர்களிட மிருந்து விடுதலை செய்தார்; பிறகு அவர் அரியணையைக் கைப் பற்றினார் ; ஆனால்—

**1321**—பஞ்சாபின் கவர்னர் கியாசுதீன் துக்ளக்கின் தலைமை யில் அம்மாகாணத்திலிருந்து ஒரு பெரும் படை வந்து, டெல்லிக்கு முன் தோன்றியது; டெல்லி சூறையாடப் பட்டு, குஸ்ரு "தீர்த்துக் கட்டப்பட்டு" அந்த மாஜீ கவர்னரே மன்னராகவும், துக்ளக் குடும்பத்தின் ஸ்தா பகராகவும் ஆனார். இக் குடும்பம் டெல்லியில் 100 ஆண்டுகளுக்கும் அதிகமாக ஆண்டது. நசீருதின் மாமூதின் முதலமைச்சரும், அவருக்குப்பின் பட்டத் துக்கு வந்தவருமாகிய (மாஜி அடிமை) கியாசுதீன் பால் பனுடைய அடிமையின் மகன்தான் கியாசுதீன் துக்ளக்.

## (6) துக்ளக் குடும்பம், 1321—1414

**1321—1325**. கியாசுதீன் துக்ளக் I; மிகமிக இணக்கமான ஆட்சி.

**1324**. தன் மகன் ஜுனுகானை ஆட்சி நடத்தும்படி விட்டு விட்டு, தான் வங்காளத்துக்குப் படையெடுத்துச் சென் றார். அவர் திரும்பியதும்—

**1325**—அரசவை விழாவின் பொழுது கட்டிடமொன்று இடிந்து விழுந்து கொல்லப்பட்டார்; அடுத்து அவரது மகன் **ஜூனகான்**—

**1325-1351**—**முகம்மது துக்ளக்** என்ற பெயருடன் பட்டமேறினர்; அக்காலத்து அரசர்களில் மிகவும் திறைமை வாய்ந்தவர்; தனது மிகவும் அதிகச் செலவு மிக்கத் திட்டங்களினால் தனக்குத்தானே நாசத்தைத் தேடிக் கொண்டார். **அவரது முதல் நடவடிக்கை:** மங்கோலியர்களுக்குப் பொருள் கொடுத்து, தனது ஆட்சி முழுவதிலும் அவர்கள் ஊடுருவல்கள் நடத்தாதபடி அவர்களை இணைக்கப்படுத்தினர். பிறகு, **தக்காணத்தைப் பணிய வைத்தார்.** அதன் பிறகு, உலகப் பேரரசை அமைக்க அவரது திட்டங்கள் [எழுந்தன.]

மிகப் பெரிய **"பாரசீகப் படை"** (அந்நாட்டை வெல்வதற்காக) ஒன்றை[அவர்]அமைத்தார்; படை மிகப் பெரிதாக இருந்ததால், அதற்குச் சம்பளம் கொடுக்கத் தேவையான பணம் இவரிடம் இல்லாமற் போயிற்று; பிறகு, இவர் சீனவைத் தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர எண்ணி, இமயமலை வழியாக ஒரு வழியைக் கண்டு பிடிப்பதற்காக 1,00,000 ஆட்களை அனுப்பினர்; அவர்கள் அனைவரும், கிட்டத்தட்ட எல்லோரும் **தராய்க்*** காடுகளில் உயிரிழந்தனர். கஜானா காலியாகி விட்டதால், **வாழ்வையே நாசமாக்கக் கூடிய கொடிய வரிகளை மக்கள் மேல்** சுமத்தினர்; **வரிச்சுமை மிகவும் அதிகமாக இருந்ததால்** ஏழைகள் காடுகளுக்கு ஓடிப் போயினர்; அவர்களைச் சுற்றி, துருப்புக்களைக் கொண்டு ஒரு வளையம் அமைத்துச் சூழ்ந்து, ஓடிப்போன அவர்களை ஒரு சிறப்பான போரில் படுகொலை செய்வித்தார்.

* [illegible] மலையடிவாரங்கள்.

இப்போரில் தானே பங்கு கொண்டு, அம்மனிதர்களை வேட்டை மிருகங்களைப் போல் கொன்று குவித்தார். இதன் விளைவு: மகசூல் முழுமையாகக் குன்றியதும், பயங்கரமான பஞ்சமும். எல்லா பகுதிகளிலும் கலகங்கள் தோன்றின; மாளவத்திலும் பஞ்சாபிலும் தோன்றிய கலகங்கள் எளிதாக ஒடுக்கப்பட்டன; ஆனால்—

**1340**—வங்காளத்தில் கலகம் வெற்றி பெற்றது. சோழ மண்டலக் கடற்கரை (கிருஷ்ணா நதியிலிருந்து கன்னியா குமரி வரையுள்ள இந்தியாவின் கிழக்குக் கடற்கரை) புரட்சி செய்து, சுதந்திரம் பெற்றது. தெலிங்கானவும் கர்னடகமும் வெற்றியுடன் புரட்சி செய்தன. ஆப்கானியர்கள் பஞ்சாபைக் கொள்ளையிட்டனர்; குஜராத் கலகம் செய்தது; பஞ்சம் தலை விரித்தாடியது. மன்னர் குஜராத்தின் மேல் [படையெடுத்துச் சென்று] அம்மாகாண முழுவதையும் நாசப்படுத்தி, பிறகு ஒவ்வொரு கலகத்தையும் ஒன்றன் பின் ஒன்ருக அடக்குவதற்கான முயற்சியுடன் நாடு முழுவதும் விரைந்தார்; அம்முயற்சியில் ஈடுபட்டிருக்கும் பொழுது—

**1351**—சிந்துவில் தட்டா என்னுமிடத்தில் காய்ச்சல் கண்டு இறந்தார். ("கிழக்கத்திய நாடுகளில் ஒரு கெட்ட அரசனைத் தொலைத்துக் கட்டுவதில் பொதுவாகக் கொஞ்சங்கூட நீதி, அநீதி பற்றிய தயக்கம் இருப்பதில்லை; எனவே ஒரு மனிதனின் தவருன ஆட்சியினுல் இவ்வளவு பரந்த தீமைகள் பெரும்பாலும் நேருவதில்லை," என்று தனது இந்திய வரலாற்றில் எல்பின்ஸ்டன் கூறுகிருர்.) அவருக்குப்பின் பட்ட மேற்றவர் அவரது உடன் பிறந்தார் மகன்—

**1351-1388**—பிருஸ் துக்ளக்; வங்காளத்தை மீண்டும் பெற வீண்முயற்சி செய்து, பின்னர் அம்மாகாணம், தக்காணம் ஆகியவைகளின் சுதந்திரத்தை அவர் அங்கீகரித்தார்;

## (7) சையதுகளின் அரசாங்கம், 1414—1450.

**1414-1421.** சையது கிசர்கான்; அலாவுதீன் கில்ஜி கைக் கொண்ட பிரதேசங்கள் அனைத்தும் இழக்கப்பட்டு விட்ட தால், டெல்லி நகரும் அதைச் சுற்றியுள்ள சிறு நிலப்பரப்பும் தவிர, டெல்லி அரசில் வேறு ஒன்றும் எஞ்சியிருக்கவில்லை. தைமூருக்காகப் பதவியாற்றும் ஒரு பிரதிநிதியாகவே கிசர்கான் இருந்தார்; உண்மையில் ஒரு சின்னஞ்சிறிய அரசனாகவே இருந்தார். ரோகில்கந்திலிருந்தும் குவாலியரி லிருந்தும் திறை வசூலித்தார்; அவருக்குப்பின் பட்டம் சூடியவர் அவரது மகன்—

**1421-1436**—சையது முபாரக் பஞ்சாபில் பெரும் அளவில் குழப்பம்; அவர் கவலைப்படவே இல்லை. 1436ல் தனது முதலமைச்சரால் கொலை செய்யப்பட்டார்; அடுத்து அவரது மகன்—

**1436-1444**—சையது முகம்மது அரியணை யேறினார்; டெல்லிப் பிரதேசம் மாளவ மன்னனால் படையெடுக்கப்பட்டது; பஞ்சாபின் கவர்னர் பலோல் கான் லோடியைத் தனது உதவிக்கு அழைத்து, சையது மாளவ மன்னனைத் தோற்கடித்துத் திரும்பிப் போகுமாறு செய்தார்; அடுத்து பட்டத்துக்கு வந்தவர் அவரது மகன்—

**1444-1450**—சையது அலாவுதீன்; தனது தலை நகரை, கங்கைக்கு அப்பால் பதாவூனுக்கு அவர் மாற்றினார்; பஞ்சாபின் கவர்னர் பலோல்கான் லோடி டெல்லியைக் கைப்பற்றினர்.

## (8) லோடி குடும்பம், 1450—1526.

**1450-1488.** பலோல் லோடி; அவர் பஞ்சாபை டெல்லியுடன் ஐக்கியப் படுத்தினர். 1452 ஜான்பூர் ராஜா டெல்லியை முற்றுகையிட்டார்; இதனால் விளைந்த போர் 26 ஆண்டு கள் நீடித்து (இது முக்கியம்; ஏனெனில், பழைய

முஸ்லீம் ஆட்சியை [எதிர்க்கும்] அளவுக்குச் சுதேச இந்திய அரசர்கள் பலம் வாய்ந்தவர்களாக ஆகிவிட்டிருந்தனர் என்பதை இது காண்பிக்கிறது). ராஜாவின் முழுத் தோல்வியிலும், டெல்லியுடன் ஜான்பூர் இணைக்கப் பட்டதிலும் முடிவுற்றது. பலோல் மேலும் ஆக்கிரமிப்புக்களை நடத்தினர்; அவர் மரணத்தின்போது அவரது அரசானது, யமுனையிலிருந்து இமயம் வரையிலும், கிழக்கில் காசி, மேற்கில் பண்டேல்கந்து வரையிலும் உள்ள நிலப்பரப்பை உள்ளடக்கியிருந்தது. அவருக்குப் பின் அவரது குமாரர்—

**1488-1506**—சிகந்தர் லோடி பதவியேறினர்; அவர் பீஹாரை மீண்டும் இணைத்துக்கொண்டார்; திறமையானவர், சமாதானத்தையே நாடிய மன்னர்; பிறகு, அவரது குமாரர்-

**1506-1526**—இப்ராஹிம் லோடி பட்டத்துக்கு வந்தார்; மூர்க்கர்; அவையில் இருந்த எல்லாப் பிரபுக்களையும் கொன்றார். பஞ்சாப் கவர்னருக்கு எதிராகவும் அதே நடவடிக்கையை மேற்கொள்ள முயன்றார்; இந்தக் கவர்னர், பாபரின் தலைமையிலான மொகலாயர்களைத் தன் உதவிக்கு அழைத்தார்.

**1524.** பாபரின் இந்தியப் படையெடுப்பு; தன்னை அழைத்திருந்த பஞ்சாப் கவர்னரைச் சிறை செய்து, பாபர் லாகூரைப் பிடித்தார்; இங்கு, டெல்லி மன்னர் இப்ராஹிமின் சகோதரர் அலாவுதீன் பாபருடன் சேர்ந்துகொண்டார்; அவரது தலைமையில் மொகலாயப் படை டெல்லியைக் கைப்பற்றுவதற்காக அனுப்பப்பட்டது. இப்ராஹிம் அவரை அறவே முறியடித்தார்; பிறகு, பாபரே வந்தார்; இரு படைகளும் பானிப்பட்டில் (டெல்லிக்கு வடக்கில், யமுனைக்கு அருகில்) சந்தித்தன.

**1526.** முதலாம் பானிப்பட்டுப் போர். இப்ராஹிம் தோற்கடிக்கப்பட்டார்; அவரும், 40,000 இந்துக்களும் போர்க்

களத்தில் வீழ்ந்து பட்டனர். பாபர் டெல்லியையும் ஆக்ராவையும் கைப்பற்றினர்.

.................................................................................................

தனது பகுப்பாய்வு ரீதியான இந்திய வரலாறு (1870) என்னும் நூலில் ராபர்ட் சீவெல் (சென்னை சிவில் சர்வீஸ்) கூறுகிறார் :

ஆசியாவில் மூன்று பெரிய இனங்கள் ; (1) துருக்கியர்கள் (துருக்மானியர்கள்) ; போகாராவைச் சுற்றி, காஸ்பியன் கடலுக்கு மேற்குப்புறமாக வசிப்பவர்கள் ; (2) தார்த் தாரியர்கள் ; சைபீரியா, ரஷ்யா ஆகியவற்றின் பகுதி களில், தங்களில் முக்கிய குலங்கள் அஸ்ட்ராகானிலும், காசானிலும், துருக்கியக் குலங்களுக்கு வடபால் உள்ள நிலப்பரப்பு முழுவதிலும் பரந்து, வசிப்பவர்கள் ; (3) மொகலாயர்கள், அல்லது மங்கோலியர்கள் ; மங்கோலியா, திபேத், மஞ்சூரியா ஆகியவைகளில் வசிப்பவர்கள் ; எல்லோரும் ஆட்டிடையக் குலங்கள். மேற்கு மொகலா யர்கள், அல்லது கல்முக்குகள் ஆகியோரும் கிழக்கு மொக லாயர்களும் பல குலங்களாக, அல்லது உலூக்களாகப் பிரிந்திருக்கின்றனர். இந்த உலூக்கள் அல்லது சிறு கணங்கள், (clans-மொர்) ஒரு விதமான பரஸ்பரக் கூட்டிணைப்பு மூலமாக ஒரு தலைவரின் கீழ் அடிக்கடி ஐக்கியப்பட்டன.

**1164.** ஜெங்கிஸ் கான் பிறப்பு ; கிதான் தார்த்தாரியர்களுக்குக் கப்பம் செலுத்திக்கொண்டிருந்த, முக்கியமில்லாத ஒரு சிறு கணத்தின் தலைவர்; பிறகு, அவரால் தார்த் தாரியர்கள் நன்கு முறியடிக்கப்பட்ட பின், அவர்களும் அவரது படையில் சேர்ந்துகொண்டனர்; அப்பொழுது மங்கோலியர்களைவிட அவரது கூட்டம் பெரியதாக இருந்தது. ஜெங்கிஸ் கான் இப்படையுடன் கிழக்கு மங்கோலியாவையும் வட சீனாவையும், பிறகு ட்ரான்ஸ்

ஆக்சியானுவையும், கொரார்சானையும் வென்றார்; துருக்கிய நாட்டை, அதாவது பொகாரார்; குவாரிசம், பாரசீகம் ஆகியவற்றை வென்று, இந்தியாமேல் படையெடுத்தார். அச்சமயம், அவரது பேரரசு காஸ்பியன் கடலிலிருந்து பீகிங் வரை, தெற்கில் இந்திய மாக்கடல் இமயமலை வரை, விரிந்திருந்தது; அஸ்ட்ராகானும் காசானும் மேற்கு எல்லையாக இருந்தன. அவரது மரணத்தின் பின், அவரது பேரரசு நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது: கிப்சாக், ஈரான், ஜகதாய், பிறகு சீனுவைச் சேர்த்து மங்கோலியா; முதல் மூன்றும் கான்களால் ஆட்சி செய்யப்பட்டன; பழைய தலைமையான நாடாக இருந்ததால், கடைசி பகுதியின் மன்னர் மேலான, அல்லது பெரிய கான் ஆக இருந்தார்.

**1336.** **தைமூர்,** சமர்கந்துக்கு அருகில் **ஜகதாயில் கீஷில்** பிறந்தார்; அவர்—

**1360**—தனது பெற்றோருடன் பிறந்தாராகிய சைபுதீனுக்குப் பிறகு, **கீஷின் சிற்றரசராகவும்** பருலாக்கள் குலத்தின் தலைவராகவும், ஜகதாயின் கான் **துக்ளக் தைமூரின்** மேலாதிக்கத்தின் கீழ், பதவியேறினார்.

**1370.** அந்தக் கான் ராஜ்யம் முதலியவைகளைத்தேமர்லேன் கைப்பற்றினார். **1405** ல் இறந்தார். அவருடைய மரணத்தின் பின் அவரது பேரரசு அவர் குமாரர்களுக்கிடையில் பங்கிடப்பட்டது; மிகப் பெரிய பகுதி தைமூருடைய மூத்த குமாரரின் இரண்டாவது மகன் **பீர் முகம்மதுவுக்குக்** கிடைத்தது.

இதே ஆசிரியர் (சீவெல்) கூற்றின்படி, துருக்கியர்களது முக்கியமான குடும்பங்களானவை, **ஆட்டோமான்கள்** (இவர்கள் 14 ம் நூற்றாண்டில் மேற்கு நோக்கிச் சென்று, **பிரிஜியாவில்** தங்களது ஆட்சியை நிறுவினார்கள். இங்கிருந்து அவர்கள் வெளியேற்றப்படவே

இல்லை), செல்ஜுக்குகள் (முக்கியமாக, பாரசீகம், சிரியா: இகோனியம் ஆகிய இடங்களில்), கடைசியாக உஸ்பெக்கு கள் (1305 ல் தோன்றினர்); இவர்கள் கிப்சாக் துருக்கியர் கள்; உஸ்பெக் என்ற பெயர், 1305ல் பிறந்த இவர்களது கானின் பெயரிலிருந்து வந்தது. இவர்கள் பாபரின் காலத்தில் பெரும் பலம் பெற்றிருந்தார்கள். *

1526. பாபர்; தைமூரி (தேமர்லேனி)லிருந்து ஆருவது சந்ததி, இவர் பர்காறு (இன்றைய கோகந்து மாகாணம்) வின் மன்னர் உமர்ஷேக் மிர்சாவின் புதல்வர். தனது சுயசரி தத்தை எழுதிய ஒரே மொகலாய மன்னர். இதை லேடனும்

---

* ராபர்ட் சிவெல்லின் நூலில் நிறையத் தவறுகள் இருக் கின்றன. முதலாவதாக, சைபீரியத் தார்த்தாரியர்களும் மாங் கோலியர்களும் வெவ்வேருன இரண்டுமக்கள் தொகுதிகள் உறுதி யாகக் கூறுகிருர். இரண்டாவதாக, ஜெங்கிஸ்கான் பிறந்த தேதி யைப் பற்றி பக்கம் 22 ஐக் காண்க. மூன்ருவதாக, தைமூரின் மரணத்தின்பின், அந்த மாபெரும் அதிகாரத்தைப் பெற்றவர். கொரர்கான், சீஸ்தான், மாசந்தரான், ஆகியவற்றின் அரசரான அவரது மகன் ஷாருத் என்பவர்; சிவெல் கூறுவதுபோல பீர் முகம்மது அல்ல. நான்காவதாக, மத்திய ஆசியாவிலிருந்து ஆசியா மைனருக்கு ஆட்டோமன் துருக்கியர்கள் குடி பெயர்ந்து சென்றனர். என்ற கூற்று பல வரலாற்ருசிரியர்களால் மறுக்கப் படுகிறது. 14 ம் நூற்ருண்டில், புர்சாவைச் சுற்றியுள்ள பிரதே சத்தில் ஆட்டோமன் துருக்கியர்கள் அதிகாரத்துக்கு வந்தனர்; இங்கிருந்து, பக்கத்திலிருந்த நிலப்பரப்பின் மீது தங்களது அதி காரத்தைப் பரப்பினுர்கள். ஐந்தாவதாக, உஸ்பெக்குகளைப் பற்றிக் கூறும்பொழுது, தங்கமயமான கூட்டத்தினரின் (Goeden Hovole-மொர்) மீது 1313 முதல் 1340 வரை ஆட்சி செலுத்திய உஸ்பெக்கானைக் குறிப்பிடுகிருர் சிவெல். உஸ்பெக் என்ற பெயரை அவரது பெயரிலிருந்து பெற்று, அவரது தூண்டு தலின் பேரில் இஸ்லாம் மதத்தைத் தழுவிய, யூச்சி குலங்களில் ஒரு பிரிவினர் தங்களுக்கு வைக்குக் கொண்டனர்.

எர்ஸ்கினும் மொழி பெயர்த்திருக்கின்றனர். (1826) பிறப்பு 1483, மரணம் 1530.

..............................................................................

## (1) பாபரது வருகையின் பொழுது இந்தியாவிலிருந்த அரசுகள்

**1351.** முகம்மது துக்ளக்கின் டெல்லி அரசு சிதைந்த பொழுது, பல்வேறு புதிய அரசுகள் தோன்றின. **1398** ன் பொழுது (தைமூரின் படையெடுப்பின் சமயம்) இந்தியா முழுதும், டெல்லியைச் சுற்றியுள்ள சில மைல்கள் நீங்கலாக, முகம்மதியர் ஆதிக்கத்தினின்றும் விடுதலை பெற்று இருந்தது; முக்கிய இந்திய அரசுகளானவை :

(1) தக்காணத்தில் பாமனி அரசர்கள்; குல்பர்காவில் சுதந்திர ஆட்சியை ஏற்படுத்திய கங்குபாமனி என்ற ஒரு ஏழையால் நிறுவப்பட்டது.

**1421.** பாமனி மன்னர் வாரங்கலிலிருந்து தெலிங்கானு [ராஜா] இந்து வை விரட்டிவிட்டு (வட சர்க்கார்கள், ஹைதராபாத் பாலகாட், கர்னுடிக் ஆகிய மாகாணங்களைக் கொண்டது தெலிங்கானு. கஞ்சத்துக்கும் புலிக் காட்டுக்கும் இடையில் இன்னும் தெலிங்கா மொழி* பேசப்படுகிறது.) பிறகு ராஜமகேந்திரபுரம், மசூலிப் பட்டினம், காஞ்சிபுரம் ஆகியவற்றைப் பிடித்தார். இதன் பிறகு விரைவில், ஷியாக்கள், சுன்னிகள் என்ற இரு மத வகுப்புகளுக்கு இடையில் [இருந்த பகை] காரணமாக உள்நாட்டுக்கலவரங்கள்; இதில் [முதல் வகுப்பு], யூசுப் ஆதிலின் தலைமையின் கீழ் பீஜப்பூருக்குச் சென்று, ஒரு அரசை நிறுவி, தங்களது தலைவரை ஆதில் ஷா மன்னர் என அழைத்தது.

---

* தெலிங்கா, அல்லது தெலுங்கு, மொழி.

## (2) பீஜப்பூர்— அகமது நகர்

**1489-1579** *, அவ்வம்சத்தின் ஆட்சிக் காலம். இச்சிறு அரசில் இந்து தான் மகாராஷ்டிரர்கள் எழுச்சியுற்றனர்; மேலும், ஒரு பிரசித்தி பெற்ற பிராமணர், தனது சீடர்களுடன் இங்கிருந்து வெளியேறி, அகமது நகர் அரசை நிறுவினர்.

(3) கோல்கொண்டா ** பேரார்—பீடார். இம் மூன்று சிறு அரசுகளும் கிட்டதட்ட ஒரே முறையில் தோன்றி, **16** ம் நூற்றுண்டின் கடைசி பகுதிவரை நிலைத்திருந்தன.

(4) குஜராத் (**1351-1388**.) பிரூஸ் துக்ளக்கின் கீழ், முசபர்ஷா என்ற ஒரு ராஜபுத்திரர், அதன் கவர்னராக நியமிக்கப்பட்டார்; அவர் அதை ஒரு சுதந்திர அரசாக ஆக்கினர். இந்து பின்னர் அவரதுபின் வந்த மன்னர்கள் கடும் போருக்குப் பிறகு மாளவத்தைச் சேர்த்துக் கொண்டனர் (1531). இவ்வரசு 1396 முதல் 1561 வரை நீடித்திருந்தது. *

(5) மாளவமும், குஜராத்துடன் ஒரே காலத்தில் சுதந்திரம் பெற்றது; ஒரு கோரிக் குடும்பம் அதை **1531** வரை

---

* இவ்வம்சத்தின் கடைசி மன்னர் ஆளத்தொடங்கிய காலத்தை இங்கு மார்க்ஸ் குறிக்கிருர். இவரது ஆட்சி 1595 ல் முடிவுற்றது.

** 16-ம் நூற்றுண்டின் கடைசி பகுதியிலிருந்து, தன அரசியல் முக்கியத்துவத்தில் பெரும்பகுதியை இழந்து, பீஜபூரின் மீது உண்மையில் சார்ந்திருந்தது கோல்கொண்டா. 1636 தான் அது மொகலாயப்பேரரசின் கீழ் ஒரு சிற்றரசாக ஆயிற்று பிறகு, 1687 ல் முடிவாக அப்பேரரசுடன் இணைத்துக் கொள்ளப்பட்டது.

* இவ்வம்சத்தின் கடைசி மன்னர் ஆளத்தொடங்கிய ஆண்டை மார்க்ஸ் இங்கு குறிப்பிடுகிருர். அவரது ஆட்சி 1572-ல் முடிவுற்றது.

ஆண்டது; அவ்வாண்டில், குஜராத் மன்னர் **பகதூர் ஷா** அதை நிரந்தரமாகத் தன்னுட்டுடன் இணைத்துக் கொண்டார்.

(6) **காந்தேஷ்; 1399 ல்** சுதந்திர அரசாயிற்று; **1599 ல் அக்**பரால் டெல்லியுடன் இணைத்துக் கொள்ளப்பட்டது.

(7) **ராஜ புத்திர அரசுகள்.** மத்திய இந்தியாவில் பல்வேறு **இந்து** ராஜபுத்திர அரசுகள்; பொதுவாக, நாகரிகமற்ற மலைக் குலங்களைக் கொண்டு அமைந்தவை; சிறந்த போர் வீரர்கள்; அவைகளில் முக்கியமானவை: **சித்தூர், மார்வார்** (அல்லது **ஜோத்பூர்,**) **பிகானீர், ஜெய்சால்மீர், ஜெய்ப்பூர்.**

# இந்தியாவில் மொகலாயப் பேரரசு
# 1526—1761 *

## (235 ஆண்டுகள் நிலைபெற்றிருந்தது)

### (1) பாபரின் ஆட்சி

**1526—1530.** பாபரின் ஆட்சி.

**1526.** *பாபரின் மூத்த மகன் ஹுமாயூன் இப்ராஹிம் லோடியால் ஆளப்பட்ட நிலப் பகுதி முழுவதையும் சில மாதங்களுக்குள் அடிமைப்படுத்தினர்.*

**1527.** சங்கராம் என்ற மேவார் நாட்டு மன்னர் அஜ்மீரையும் மாளவத்தையும் *தனது ஆளுகையின் கீழ்க்கொண்டு*

---

* மொகலாயப் பேரரசு *என்று அழைக்கப்படுகின்ற அப் பேரரசு 1526ல் பாபரால் நிறுவப்பட்டு, 1761 வரை நீடித்தது. பாபர் தன்னை "மொகல்" ('மங்கோல்' என்பதன் திரிபு) என்று, கீர்த்தி பெற்ற தேமர்லேனின் சந்ததியில் (ஆருவது தலைமுறையில்) பிறந்ததாகவும், தன் தாய் வழியில் ஜெங்கிஸ் கானின் சந்ததியில் பிறந்ததாகவும் கருதப்பட்ட ஒருவர் என்று அழைத்துக்கொண்டார். ஆனால் உண்மையில் பாரசீகத்திலிருந்து வந்த அவரோ, அல்லது துருக்கியர்கள், பாரசீகர்கள், ஆப்கானியர்களைக் கொண்டிருந்த அவரது சேனையோ, யாருமே மங்கோலியர்கள் அல்ல. மொகலாயப் பேரரசின் அரசியல் மொழி பாரசீக மொழி. 1707ல் அவுரங்கசீப் இறந்ததும், அப்பேரரசு உண்மையில் சீர்குலையத் தொடங்கியது. ஆயினும் பெரிய மொகலாய மன்னர் அல்லது பேரரசர், தனது அதிகாரம் அனைத்தும் இழந்து, டெல்லி அரியணையில் 1857 வரை அமர்ந்திருந்தார்.*

வந்திருந்த **ராஜபுத்திரச் சிற்றரசர்; மார்வார், ஜெய்ப்பூர் ஆகிய அரசுகளுக்கு மேல் தலைவர் என்று அங்கீகரிக்கப் பட்ட** அவர், டெல்லி அரசுக்கு எதிராகப் பெரும் படை ஒன்றை நடத்திச் சென்றார்; **ஆக்ராவுக்கு** அருகில் **பியானவை** [அவர்] பிடித்து, பின் பாபரின் சேனையின் ஒரு பிரிவைத் தோற்கடித்தார். **சிக்ரிப் போர் ("இந்தியா வின் ஹேஸ்டிங்க்ஸ் போர்")***. பாபருக்குப் பெரும் வெற்றி; அவர் தனது அதிகாரத்தை இந்தியாவில் நிறுவினர். (பாபர் தனது பிந்தையப் போர்களில் அம்புகளுடன் வெடி மருந்தையும் உபயோகித்தார்; தனது **சிறு பீரங்கிகளையும் துப்பாக்கி வீரர்களையும்** தனது **வில் வீரர்களையும்** அவர் குறிப்பிடுகிறார்; தானே வில்லும் அம்பும் கொண்டு குறி தவருமல் எய்யக் கூடியவர்.)

**1528. சந்தேரி (செந்தேரி; சிந்தியா)**; ஒரு ராஜபுத்திரச் சிற்றர சருக்குச் சொந்தமானது; அது பெரும் சேதத்துடன் கோட்டைக் காவல் படை ஒரு ஆள்கூட மிச்சமின்றி முழுதும் கொல்லப்பட்டு, பிடிக்கப்பட்டது. அதே சமயத்தில், ஔதில் ஹுமாயூன் ஆப்கானியர்களால் தோற்கடிக்கப்பட்டார்; அவருடைய உதவிக்கு, சந் தேரியிலிருந்து பாபர் வந்து, எதிரியைத் தோற்கடித்து, டெல்லி திரும்பினர். சிறிது காலத்திற்கெல்லாம், **சங்கராம்** [அவரது மகன்] **ராந்தம்பூர்** கோட்டையைச் சரண் செய்தார்,

**1529. மாமூது லோடி பீஹாரைக்** கைப்பற்றிக்கொண்டதாகக் கேள்வியுற்று, பாபர் படையுடன் சென்று, அவரை முறியடித்து, **அவரது பிரதேசங்களைத்** தான் **இணைத்துக் கொண்டார்;** பிறகு அவர் (வட பீஹாரைப் பெற்றிருந்த)

---

* அப்போரில் முஸ்லீம்களாகிய மொகலாயத் துருப்புகள் இந்துத் துருப்புகளைத் தோற்கடித்து இந்தியாவை வென்றன.

வங்காள மன்னனை, கோக்ரா ஆற்றின் துறைகளில் தோற்க டித்து, லாகூரைக் கைப்பற்றியிருந்த அரை அநாகரீக ஆப்கானியக் குலம் ஒன்றை அழித்து, இப்போர் நடவ டிக்கையை முடித்துக்கொண்டார்.

டிசம்பர் 26, 1530. பாபர் காய்ச்சல் கண்டு டெல்லியில் இறந் தார்; தனது விருப்பத்திற்கிணங்க காபூலில் இதற்கா கத் தன்னாலேயே தேர்ந்தெடுக்கப்பட்ட ஓரிடத்தில் அடக்கம் செய்யப்பட்டார்; இவ்விடம் இன்றும் காபூல் மக்களுக்கு ஒரு உல்லாசப் போக்கிடமாக உள்ளது. (பர்ன்ஸ்ஸைப் பார்க்க)

## (2) ஹுமாயூனின் முதலாவது, இரண்டாவது ஆட்சி,—இடையில் வந்த சூர் அரச குடும்பத்தினரின் ஆட்சியுடன், 1530—1556

1530. பாபர் நான்கு புதல்வர்களை விட்டு இறந்தார். ஹுமாயூன் பேரரசர் (அவருக்குப் பின் பதவியேறியவர்); காம்ரான் அப்பொழுது காபூலின் கவர்னராக இருந்தார்; தனது தந்தையின் மரணத்தின் பின் தன்னைச் சுதந்திர அர சராகப் பிரகடனப்படுத்திக் கொண்டார்; ஹிண்டால், ஸம்பலின் கவர்னராக இருந்தார்; கடைசியாக மிர்சா அஸ்காரி என்ற அஞ்சாத வீரர், மேவாட்டின் கவர்னராக இருந்தார். ஹுமா யூனின் முதல் நடவடிக்கையானது ஜான்பூரில் (சான்பூரில்) கலகத்தை ஒடுக்குதல்; அடுத்த படியாக பாபரின் மரணத்தைப் பற்றிய செய்தி யறிந்து மொகலாயர்களுடன் போர் தொடுத்திருந்த பகதுர் ஷா மன்னரின் நாடாகிய குஜராத்துடன் போரிட் டார். ஐந்து ஆண்டு காலத்தில், அதாவது—

**1535** க்குள் **ஹுமாயூன் குஜராத்தின் படையை** அழித்துவிட்டார்; அதன் பிறகு **சாம்பானிரைப்** பிடித்தார்; ஏனெனில் அக்கோட்டைக்குத்தான் **பகதூர்** பின்வாங்கிச் சென்றிருந்தார்.

**1536.** அக்கோட்டை சீக்கிரமே பிடிக்கப்பட்டது; பிறகு அவருடன் சமரசம் அடைந்துவிட்டதாக பகதூர் பாசாங்கு செய்தார்.

**1537. வங்காளத்துக்கு** எதிராகப் போர் நடவடிக்கையில் ஈடுபட்டிருந்த **ஷேர்கானை** எதிர்த்து **ஹுமாயூன்** தீவிரமாகப் போரிட்டுக்கொண்டிருந்த வேளையில், **பகதூர் ஷா** குஜராத்தை மீண்டும் பிடித்து, **மாளவத்தைத் தாக்கினர்.**

**1537—1540. ஷேர்கானுக்கு எதிராக ஹுமாயூனின் போர் நடவடிக்கைகள். ஷேர்ஷா** எனப்படுகின்ற **ஷேர்கான் டெல்லியை ஆண்ட கோரி அரசர்களின் சந்ததியாவார்.**

**1527.** லோடிகளைக் கவிழ்த்துவிட்டு, அவர் **பாபரின் படையில்** ஒரு அதிகாரியாகச் சேர்ந்து, பிரபல மடைந்தார்; பீஹாரில் படைத்தலைமை ஒன்றை அவரிடம் பாபர் ஒப்படைத்தார்.

**1529. மாமூது லோடி** பீஹாரைப் பிடித்தார்; ஷேர்கான் அவருடன் சேர்ந்துகொண்டார்; மாமூது மரணமடைந்ததும் தான் பீஹாரின் எஜமானராக ஆனர்.

**1532.** ஹுமாயூன் குஜராத்தில் இருந்த பொழுது, **ஷேர்ஷா** வங்காளத்துக்குள் படையுடன் முன்னேறினர்; ஆகவே—

**1537—ஹுமாயூன்** படையுடன் அவருக்கெதிராகக் கிளம்பினர்; அங்கு, இருவரும் போர்த் தந்திர நடவடிக்கைகள் செய்தாலும்—

**1539**—கங்கையாற்றின் கரையிலிருந்த தனது முகாமில் **ஹுமாயூன் திடீரென ஷேர்ஷாவால் தாக்கப்பட்டு, முழுதும்**

முறியடிக்கப்பட்டு, ஓடவேண்டியதாயிற்று; ஷேர்கான் எனப்படும் ஷேர்ஷா வங்காளத்தைக் கைப்பற்றினார்.

**1540.** ஹுமாயூன் தானே முந்திக் கொண்டு கனோஜின் மீது படையெடுத்துச் சென்றார்; மீண்டும் தோற்கடிக்கப் பட்டு, தான் ஓட்டம் பிடித்தபொழுது கங்கையில் கிட்டத்தட்ட முழுகிப் போனார்; ஷேர்கான் அவரை லாகூருக்குப் பின் தொடர்ந்து சென்றார்; ஹுமாயூன் சிந்துவுக்குத் தப்பி ஓடினார்; ஓரிரண்டு பயனற்ற முற்றுகைகளுக்குப் பிறகு, அவர் மார்வாருக்கு (ஜோத் பூருக்கு) ஓடினார்; ஆனால், அந்த ராஜா அவரை அனு மதிக்க மறுத்தார்; பிறகு அவர் ஜெய்சால்மீர் பாலைவனங் களில் கால் நடையாக அலைந்து திரிந்தார்; அங்கு அவருடையவும், அவரைப் பின் பற்றிச் சென்ற சில சகாக்களுடையவுமான முகாம்கள் தொடர்ந்து தாக்கப் பட்டன; அங்கு—

**அக்டோபர் 14, 1542**—அவரது அந்தப் புரத்திலிருந்த, ஹமீதா என்ற பேரழகு வாய்ந்த ஒரு நாட்டியக்காரி புகழ் பெற்ற அக்பரை ஈன்றாள்; பாலைவனத்தில் 18 மாதங்கள் சுற்றி யலைந்த பின்னர், அவர்கள் அமர்கோட்டை (உமர் கோட்டை)க்கு வந்து சேர்ந்தனர்; அங்கே அவர்கள் அன்புடன் வரவேற்கப் பட்டனர்.

சிந்துவைக் கைப்பற்ற மீண்டும் ஒரு வீண் முயற்சி செய்த பின்னர், காண்டகார் செல்ல ஹுமாயூன் அனுமதிக்கப் பட்டார்; தனது சகோதரர் மிர்சா அஸ்காரியின் கையில் அம் மாகாணம் இருந்ததைக் கண்டார்; அவருக்கு அஸ் காரி உதவி புரிய மறுத்தார். ஹுமாயூன் ஹீரட் (பார சீகம்) டுக்கு ஓடினார். பாரசீகத்தில் அவர் ஒரு கைதி போல் நடத்தப்பட்டார்; ஷா தமாஸ்ப் ஹுமாயூனை சபாவி மதத்தைத் தழுவும்படி வற்புறுத்தினார். (சபாவி, அல்லது சூபி, மன்னர்கள் ஷியா பிரிவைச் சேர்ந்த முகம்

மதிய முனித் துறவிகளது ஒரு குடும்பத்தின் வழி வந்தவர்கள்; இவர்கள் சுதந்திர ஆட்சியுரிமை பெற்று, தங்களது பெயரை ஒட்டி ஒரு மதத் திட்டத்தை நிறுவினர்; இது பாரசீகத்தின் மதமாக ஆயிற்று.) ஆயினும்—

**1545**—தமாஸ்ப் **14,000** குதிரைகளைக்கொடுத்து ஹுமாயூனுக்கு உதவினர். ஹுமாயூன் ஆப்கானிஸ்தானத்தில் நுழைந்து தனது சகோதரர் **மிர்சா** அஸ்காரியிடமிருந்து **காண்டகாரைப்** பறித்துக் கொண்டார்; தனது அதிகாரிகளின் ஆலோசனைகளையும் மீறித் தனது சகோதரரைக் கொல்லாமல் விட்டார். பிறகு அவர் **காபூலைப்** பிடித்தார்; இங்கு, பாபரின் மூன்றும் மகன் **ஹிண்டால்** அவருடன் சேர்ந்து கொண்டார்.

**1548**. [அவருக்கு எதிராக] முன்பு கலகம் செய்த **காம்ரான்** [இப்பொழுது] அவருடன் சேர்ந்து கொண்டார். (ஆயினும், **1551**ல் புரட்சி செய்த பின் அவர் மீண்டும் ஒடுக்கப்பட்டார்; மேலும் தொந்திரவுகள் கொடுத்ததால், **1553** ல் அவர் கைது செய்யப்பட்டு, அவரது **கண்கள் குருடாக்கப் பட்டன**.)
ஹுமாயூன், இவ்வாறாக மீண்டும் தன் குடும்பத்தின் தலைவரானர்; **காபூலில்** வசித்தார்.

## டெல்லியில் சூர் அரச குடும்பம் ஆண்ட இடைக்காலம், 1540-1555

**1540—1545. டெல்லியில் ஷெர்ஷா.**

**1540**. **டெல்லி** அரசை [அவர்] தனக்குச் சொந்தமாக்கி **ஷெர்கான்** என்பதற்குப் பதிலாக **ஷெர்ஷா** என்று தனக்கு வேறு பெயர் இட்டுக் கொண்டார்; ஹுமாயூனுடைய பிரதேசங்கள் அனைத்தையும் கைப்பற்றினர்.

**1541**. மாளவத்தை வென்றார்; **1543** ல் ரெய்சின் (கோட்டையை) ஐயும், **1544** ல் மார்வாரையும் வென்றார்.

**1545**. சித்தூரை முற்றுகை யிட்டார்; நகர்ப் பீரங்கிகள் ஒன்றிலிருந்து தற்செயலாக வந்த ஒரு குண்டுக்கு இறையானார். அவரை யடுத்து அவரது இளைய மகன்—

**1545—1553**—ஜலால் கான் பதவியேறினார்; இவர் சலீம் ஷா சூர் என்ற பெயரில் டெல்லியின் ஷாவாக ஆனார். ஷெர் ஷாவின் மூத்த மகன் ஆதில் தனது உரிமையை நிலை நாட்ட முயன்றார்; தோற்கடிக்கப்பட்டு ஓடினார். சலீம் ஷா சூரின் ஆட்சியின் கீழ் நல்ல பொதுப் பணிகள் செய்யப்பட்டன.

**1553**. சலீம் ஷா சூர் இறந்தார்; அவரது சகோதரர் ஆதில் அரியணையைக் கைப்பற்றினார்.

**1553—1554**. முகம்மது ஷா சூர் ஆதில்; தனது சகோதரர் சலீம் ஷாவின் இளைய வயதுடைய மகனைக் கொன்றார்; கேளிக்கைகளில் மூழ்கினார்; சீக்கிரமே, தன் குடும்பத்தையே சேர்ந்த இப்ராஹிம் சூர் என்பவரின் தலைமையில் கலகம் மூண்டது. இப்ராஹிம் சூர், முகம்மது ஷா சூர் ஆதிலை விரட்டி விட்டு, டெல்லியையும் ஆக்ராவையும் பிடித்தார். பஞ்சாபும் வங்காளமும் மாளவமும் உடனே எல்லா அடிமைத்தளைகளையும் உதறி எறிந்தன. இந்தக் குழப்பங்களைக் கேள்வியுற்று—

**1554**—ஹுமாயூன் படை திரட்டிக் கொண்டு, தனது அரியணையைப் பெறுவதற்காகக் காபூலிலிருந்து வந்தார்.

**ஜனவரி 1555**. ஹுமாயூன் காபூலிலிருந்து புறப்பட்டு, பஞ்சாபின் மீது படையெடுத்து, லாகூர், டெல்லி, ஆக்ராவை எளிதாகப் பிடித்தார்.

**ஜுலை 1555**. ஹுமாயூன் தனது முந்தைய சிறந்த நிலையை எல்லாம் மீண்டும் எய்தினார்.

**ஜனவரி 1556.** ஹுமாயூன் வழவழப்பான சலவைக் கல்லி லிருந்து விழுந்து இறந்தார்; அப்பொழுது அவரது மகன் அக்பர் (13 வயது) பஞ்சாபில் தனது தந்தையின் அமைச்சர் பைராம் கானுடன் இறந்தார்; அவர் உடனே பைராம் கானுல் டெல்லிக்கு அழைத்து வரப்பட்டார்.

## (3) அக்பரின் ஆட்சி, 1556—1605

**1556.** முதலில் பைராம் கானே இயற்கையில் உண்மையாக ஆட்சிபுரிபவராக இருந்தார். ஆனால், டெல்லியில் உள் நாட்டு அரசாங்கத்தைச் சீரமைக்கும் வேலையில் அவர் ஈடுபட்டிருந்த பொழுது, பதாக்ஷானின் மன்னர் மிர்சா சுலைமான் காபூலைப் பிடித்துக்கொண்டார்; அதே சமயம் ஆதில் ஷாவின் அமைச்சராக இருந்த ஹெமு ஒரு கல கத்தைத் துவக்கினார்.

**இரண்டாம் பானிப் பட்டுப்போர்.** ஹெமு ஆக்ராவைப் பிடித் தார்; அவரை எதிர்ப்பதற்குப் பைராம் புறப்பட்டுச் சென்றார்; இரு படைகளும் பானிப் பட்டில் சந்தித்தன. ஹெமுவின் தோல்வி; அவரைத் தன் கையாலேயே பைராம் கொன்றார்; இவ்வாறாக ஷேர் கானின் குடும்பம் ஒழிக்கப் பட்டது.

பைராம் தலைக் கனத்துடன் டெல்லிக்குத் திரும்பி, தன்னை எதிர்ப்பதாகத் தான் நினைத்த பல பேர்களை, குறிப்பாக அக்பரின் நண்பர்களைக் கூடத் "தீர்த்துக் கட்டினார்"; ஆகையால்—

**1560—** அக்பர் அரசாங்க அதிகாரத்தைத் தானே மேற் கொண் டார்; பைராம் ராஜபுதனத்தில் நாகருக்குச் சென்று, தன்னுடைய பதவியிலிருந்து தன்னை முறைப்படி அக்பர் விலக்கியதும், கலகம் செய்தார். அக்பர் அவருக் கெதிராகப் படையை அனுப்பினார்; அவர் தோற்கடிக்க பட்டு, மன்னிக்கப்பட்டார்; ஆனால் அவரால் வஞ்சக

மாகக் கொலை செய்யப்பட்ட பிரபுக்களில் ஒருவர் [மகன்] அவரைக் கொன்றார். அக்பருக்கு 18 வயது; டெல்லி, ஆக்ராவைச் சுற்றியிருந்த நிலப்பகுதியும் பஞ்சாபும் மட்டுமே அவரது சிறிய பிரதேசமாக இருந்தன.

கிட்டத்தட்ட அரியணை ஏறிய உடனேயே அவர் அஜ்மீர், குவாலியர், லக்னோ ஆகியவற்றை வென்றார்; பிறகு அவர்—

**1561**—மாளவத்தின் கவர்னர் அப்துல்லாகான் கலகம் செய்ததால், மாளவத்தை மீண்டும் வென்று, அப்துல்லா கானை நாடு கடத்தினார். அந்த கான் ஒரு உஸ்பெக்; ஆகவே—

**1564**—அவரை நாடு கடத்தியது, உஸ்பெக் குலத்தினரின் கிளர்ச்சி ஒன்றைத் தோற்றுவித்தது; இக் கிளர்ச்சி அக்பரால் நேராகவே 1567 ல் அடக்கப்பட்டது.

**1566.** ஹகீம் என்ற அக்பரின் சகோதரர் காபூலைக் கைப்பற்றி, அதன் தலைவராக நீண்ட காலம் இருந்தார்.

**1568—1570.** ராஜபுத்திர அரசுகள்.

**1568.** அக்பர் சித்தூரை முற்றுகை யிட்டார்; அது வீரத்துடன் காக்கப்பட்டு, அதன் தலைவர் ஒரு அம்பினால் கொல்லப்பட்ட பின் வீழ்ந்தது. உயிருடன் எஞ்சியவர்கள் [பிரபுக்கள்] உதயபூருக்கு [ஓடிச் சென்று], அங்கு அவர்களது தலைவரின் குடும்பத்தினர் ஒரு புதிய இந்து அரசை நிறுவினர்; அங்கு அவர்கள் இன்றுவரை [நீடித்திருக்கின்றனர்]. அதன் பிறகு, ஜெய்பூருடனும் மார்வாருடனும் சமாதான உறவு கொண்டிருக்க எண்ணி அக்பர் இரு இராஜபுத்திர இராணிகளை மணந்து கொண்டார்.

**1570.*** ராந்தம்பூர், காலிஞ்சர் என்ற மேலும் இரண்டு ராஜபுத்திர[க் கோட்டைகளை] அக்பர் தன்னுட்டுடன் இணைத்துக் கொண்டார்.

---

* 1569 என்கிறார் பர்கஸ், நவீன இந்தியாவின் காலக் குறியீடுகள், எடின்பரோ, 1913.

**1572—1573.** குஜராத். அங்கு குழப்பங்கள் (மூன்று கட்சிகள் இருந்தன. மிகப் பலம் வாய்ந்தது **மிர்சாக்கள்*** கட்சி; இவர்கள் தேமர்லேனின் சந்ததியினர்; எனவே அக்பரின் உறவினர்கள்; **1566**-ல் ஸம்பலில் அவர்கள் புரட்சி செய்து, தோற்கடிக்கப்பட்டு, குஜராத்துக்கு ஓடிப் போயிருந்தனர்). கவர்னர் **எதேமாத்கான்** அக்பரே வரவேண்டுமென்று வற்புறுத்தினர்.

**1573.** அக்பர் குஜராத்துக்கு[ச் சென்று], **நேரான பேரதிகாரத்தின் கீழ் அதைக் கொண்டுவந்து,** மிர்சாக்களைத் தோற்கடித்து, **ஆக்ராவுக்கு** மீண்டார். மிர்சாக்கள் மீண்டும் கலகம் செய்தனர்; அக்பர் அவர்களை முடிவாக நசுக்கினர்.

**1575.** வங்காளம். அங்கு **சிற்றரசர் தௌத், அக்பரின் மேலதிகாரத்தை உதறித் தள்ளினர் (கப்பம் கட்டுவதை நிறுத்தி விட்டார், இப்படிப் பல.).** அக்பர் வங்காளத்துக்கு[ச் சென்று], தௌதை **ஒரிசாவுக்கு** விரட்டினர்; அவர் திரும்பிய உடனேயே, மிர்சா மீண்டும் முன்னேறி வந்து, தனது பிரதேசத்தை மீட்டுக் கொண்டார்; அக்பர் அவரை எதிர் எதிரான போரில் தோற்கடித்தார்; தௌது போரிட்டு இறந்தார்.

**1575—1592.** **பீஹார்; 1530**-க்குப் பிறகு **ஷேர்கான் குடும்பத்தினரால்** ஆளப்பட்டு வந்தது; **1575**-ல் [அக்பரால்] மீண்டும் இணைத்துக் கொள்ளப்பட்டது.—உடனே சிறிது காலத்துக்குப் பிறகு, பீஹாரிலும் வங்காளத்திலும் பேரரசின் துருப்புக்களிடையில் கலகம் தோன்றியது; மூன்று ஆண்டுகளாக சரிவர ஒடுக்கப்பட

---

* பாபருடன் இந்தியாவுக்கு வந்த **மிர்சா** (இளவரசன்) **முகம்மது சுல்தானின்** சந்ததியினரும் உறவினரும் ஆவர். இவர்கள் உலுக் மிர்சா, ஷா மிர்சா, இப்ராஹிம் ஹுசைன் மிர்சா என்பவர்கள்; அரியணையைக் கைப்பற்ற இவர்கள் முயன்றனர்.

வில்லை. எனவே, பீஹாரிலிருந்து விரட்டப்பட்ட **ஆப்கானியர்கள் ஒரிசா மாகாணத்தைக்** கைப்பற்றி, சிறிது காலம் அதைத் தம்வசம் வைத்திருந்தனர்.

**1592.** **ஒரிசாவில் ஆப்கானியர்கள், அக்பரின் தளகர்த்தர்களில் ஒருவரால் இறுதியாக நசுக்கப்பட்டனர்.**

**1582.** **இளவரசர் ஹகீம்** காபூலிலிருந்து **பஞ்சாப்** மீது படையெடுத்தார்; அக்பர் அவரைத் துரத்தியடித்து, காபூலைக் கைப்பற்றி, தனது சகோதரர் ஹகீமை மன்னித்து, டெல்லிப் பேரரசராகிய தனக்குக் **கீழ்ப்பட்ட** காபூல் மாகாணத்தின் கவர்னர் ஜெனரலாக அவரை நியமித்தார்.

**1582—1585.** அமைதி. **அக்பர் பேரரசைச் சீரமைத்தார்.** மத விஷயங்களில் சிரத்தையின்றி யிருந்ததால், சகிப்புத் தன்மை யுடையவரானர்; அவரது தலைமையான மத, இலக்கிய ஆலோசகர்கள் **பெய்சியும் அபுல் பசலும்.** பண்டை சமஸ்கிருதக் கவிதைகளை, **இராமாயணத்தையும், மகாபாரதத்தையும்** கூட, பெய்சி மொழி பெயர்த்தார். (பின்னர், கோவாவிலிருந்து ரோமன் கத்தோலிக்கப் போர்ச்சுகீசியப் பாதிரி ஒருவரை அக்பர் அழைத்துவந்த பிறகு, கிருத்துவ மத நூலையும் கூட பெய்சி மொழி பெயர்த்தார்.) **இந்துக்களுக்குச் சலுகைகள்; சதி** (கணவனின் சிதையின் மீது விதவைகளைக் கொளுத்துதல்) **விலக்கு** முதலிய சிலவற்றை மட்டும் அக்பர் வற்புறுத்தினர். **ஜெசியா,** அதாவது **தலைவரியை** அவர் **நீக்கினர்;** ஒவ்வொரு இந்துவும் **முஸ்லிம் அரசாங்கத்துக்கு** இவ்வரியைச் **செலுத்தும்படி கட்டாயப்படுத்தப்பட்டிருந்தார்.**

**அக்பரின் வருவாய்த் திட்டம்** (இதன் கர்த்தா, நிதி அமைச்சர் **ராஜா தோடர்மால்**); **விவசாயிகளிடமிருந்து வரி வசூலிப்பதற்கு—**

(1) முதலாவதாக, ஒரே விதமான நில அளவு முறை ஒன்று அமைக்கப்பட்டது; பின்னர் ஒழுங்கான சர்வே திட்டம் ஒன்று பயன்படுத்தப்பட்டது.

(2) ஒவ்வொரு தனித்தனி பிகாவின் உற்பத்தியையும், ஆகையால் அது அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய தொகையையும் நிர்ணயிப்பதற்காக, அவைகளது செழுமையின் அளவு வேறுபாடுகளைக் கொண்டு நிலம் மூன்று வெவ்வேறு தரங்களாகப் பிரிக்கப்பட்டது. பிறகு, ஒவ்வொரு பிகாவுக்கும், அந்தத் தரத்து நிலத்தின் சராசரி விளைச்சலைக் கணக்கிட்டு, இந்த விளைச்சல் அளவில் மூன்றில் ஒரு பங்கு அரசனின் பங்காக நிர்ணயிக்கப்பட்டது.

(3) இந்த பங்குக்குச் சமமான பண மதிப்பை நிர்ணயிப்பதற்கு, 19 ஆண்டுகளாக நாடு முழுதும் நிலவிவந்த விலைகளின் ஒழுங்கான பட்டியல்கள் சேகரிக்கப்பட்டன; இதன் சராசரித் தொகைதான் பணமாகச் செலுத்தும்படி கோரப்பட்டது.

அதிகாரத்தைச் சிறு அதிகாரிகள் தவருன வழிகளில் உபயோகிப்பது ஒடுக்கப்பட்டது; வருவாயின் தொகை குறைந்தது; ஆனால் வரி திரட்டும் செலவுகள் குறைந்தன; ஆகவே, நிகர வருவாயில் மாற்றம் இல்லை. வரி வசூலிப்பதை ஏலத்துக்கு விடும் பழக்கம் பெரும் கொடுமைக்கும், பொருள் பறித்தலுக்கும் மூல காரணமா யிருந்தது; இதை அக்பர் ஒழித்தார்.

பேரரசை 15 மாகாணங்களாகப் பிரித்தார்; ஒவ்வொரு மாகாணத்திலும் தலைமை அதிகாரி அரசப் பிரதிநிதி யாவர்.

நீதி பரிபாலனம்: சட்டத்தை விளக்குபவராக காசி இருந்தார்; முழு விசாரணையும் முடிந்த பின்னர் வழக்குகளை உரைப்பார்; மீர்-ஏ-அதல் (தலைமை நீதிபதி) அரசனின் விருப்பத்தை உணர்த்தும் அதிகாரியாக, முடிவுரையைக் கேட்டு தண்டனை வழங்குவார். தண்டனைச் சட்டத் தொகுதியை அக்பர் திருத்தி யமைத்தார்; ஒரு பகுதி முகம்

மதியப் பழக்கங்களை யொட்டியும், ஒரு பகுதி மனு தர்மத்தை யொட்டியும் அவைகளை அமைத்தார்.

**சேனை:** சேனையில் சம்பள முறை பெரிதும் தாறுமாருக இருந்தது; கருவூலத்திலிருந்து துருப்புக்களுக்கு ஒழுங்காகச் சம்பளம் கொடுத்தல், ஒவ்வொரு ரெஜிமென்டிலும் சேர்க்கப்பட்ட சிப்பாய்கள் அனைவரையும் கொண்ட பட்டியல்களைத் தயாரித்து வைத்தல் ஆகிய முறைகளினால் இத் தாறுமாறுகளை அக்பர் ஒழித்தார்.

அப்பொழுது உலகிலிருந்த நகரங்களிலெல்லாம் மிகவும் பெரியதும் அழகியதுமாக டெல்லியை அவர் ஆக்கினர்.

**1585—1587.** காஷ்மீரம்; உஸ்பெக்குகள் படை யெடுப்பார்கள் என்ற பயத்தினல், 1585-ல் காபூலில் குழப்பங்கள்; மிகவும் கொடிய வகையில் அக்பர் அவைகளை அடக்கினர்.

**1586.** காஷ்மீரத்தின் மேல் செய்த தாக்குதலில் தோல்வியுற்ருர்; 1587-ல் அவர் வெற்றியுற்று, காஷ்மீரத்தை இணைத்துக் கொண்டார்.

**1587.** பெஷாவரும், அண்டையிலிருந்த வட மேற்கு மாவட்டங்களும். இப்பிரதேசத்தை, தீவிர மதப்பற்று கொண்ட ரௌஷனிய மதவகுப்பைச் சேர்ந்தவர்களும், பலமிக்க ஒரு ஆப்கானியக் குலமுமாகிய யூசுப்சாய்கள் வைத்திருந்தனர்; அவர்கள் காபூலுக்கு மிகவும் தொந்தரவு கொடுத்ததால், அவர்களுக்கு எதிராக இரு டிவிஷன் படைகளை, ராஜா பீர் பாலின் தலைமையில் ஒன்றும், சைன் கானின் தலைமையில் மற்ருென்றுமாக, அக்பர் அனுப்பினர். இரு படைகளும் கிட்டத்தட்ட நிர்மூலமாக்கப்பட்டன; எஞ்சி யிருந்தவர்கள் அட்டாக்குக்கு ஓடிப் போயினர். இன்னெரு படையை அனுப்பி, இந்த ஆப்கானியர்களைத் தங்களது மலைகளுக்கிடையில் அக்பர் மீண்டும் விரட்டினர்; அவர்களை எதிர்த்துக்

கடைசிவரை இவ்வளவு வெற்றி மட்டுமே அவரால் அடைய முடிந்தது.

**1591.** சிந்து: சில உள்நாட்டுக் குழப்பங்கள் என்ற சாக்கைக் கொண்டு அக்பர் அதன்மீது படையெடுத்து, இணைத்துக் கொண்டார்.

**1594.** காண்டகார், ஹுமாயூன் இறந்தபின் அதை மீண்டும் கைப்பற்றிக் கொண்ட பாரசீகர்களிடமிருந்து, [அக்பரால்] மீண்டும் வெல்லப்பட்டது. இவ்வாறாக, 1594-ல், வட இந்தியா முழுதும் மொகலாய ஆட்சியின் கீழ் வந்து விட்டது.

**தக்காணத்தில் போர்கள், 1596—1600**

**1596.** புகழ் பெற்ற சுல்தானா சாந்த்பீபியின் ஆதிக்கத்தின் கீழிருந்த அகமது நகரின் மீது, இளவரசர் மூராத் (அக்பரின் இரண்டாவது மகன்) மிர்சா கான் ஆகியோரின் தலைமையின் கீழ் இரு சேனைகளின் தாக்குதல்; அந்நகரின் முற்றுகையும் தாக்குதலும் தோல்வியுற்றன; பேரார் மட்டுமே அக்பர் இணைத்துக் கொள்ளும்படி விடப்பட்டார்.

**1597.** புதிய போர்கள்; அக்பருக்குப் பணிந்து அவரது படைகளுடன் காந்தேஷ் ராஜா சேர்ந்து கொண்டதால் அக்பரது படை வலுப்பெற்றது. கோதாவரி ஆற்றங்கரையில் மூராத்தின் போர் நடவடிக்கைகள் பயனளிக்கவில்லை; நர்மதைக் கரையில் தனது படையுடன் அக்பர் சேர்ந்துகொண்டார்.

**1600.** தனது இளைய மகன் தானியாலை, அகமது நகரை முற்றுகையிடுவதற்காகத் தனக்கு முன்னதாகவே அனுப்பி பிறகு அவருடன் தானும் சேர்ந்து கொண்டார்; கோட்டைக் காவற்படை வீரமிக்க சுல்தானாவைக் கொலை செய்து விட்டு, நகரத்தை மொகலாயர்கள் கொள்ளும்படி கைவிட்டு விட்டது.

**சலீமின் புரட்சி** அக்பரை மீண்டும் இந்துஸ்தானத்துக்கு வரச் செய்தது; தனது தந்தை இல்லாத நேரத்தில், **ஔத்தையும் பீஹாரையும்** சலீம் பிடித்துக் கொண்டு விட்டார்; அக்பர் அவரை மன்னித்து, **வங்காளத்தையும் ஒரிசாவையும்** அவருக்குக் கொடுத்தார்; சலீமின் கொடுமையான நிர்வாகம்; அக்பர் அவரை எதிர்த்துப் படையுடன் போக இருந்தார்; சலீம் ஆக்ராவில் அவரது மன்னிப்பைக் கோரினுர்.

**1605.** **முராத், தானியால்** ஆகிய தனது குமாரர்களின் திடீர மரணம் **அக்பரது மரணத்தையும்,** அவரது 63-வது வயதில், **துரிதப்படுத்தியது.** உயிருடனிருந்த அவரது ஒரே மகன் சலீம், **ஜஹாங்கீர்** ("உலகை வென்றவர்") என்ற பட்டத்துடன் பேரரசரானுர்.

## (4) ஜஹாங்கீரின் ஆட்சி, 1605—1627

**1605.** ஜஹாங்கீர் அரியணை ஏறியபொழுது இந்துஸ்தானத்தில் அமைதி; ஆனுல் **தக்காணத்தில்** குழப்பங்களும், **உதயபூருடன் ஒரு போரும்** நடந்து கொண்டிருந்தன. தனது தந்தையின் தலைமை அதிகாரிகளை எல்லாம் அவரவர்கள் பதவியிலேயே ஜஹாங்கீர்வைத்திருந்தார்; **முகம்மதிய மதத்தை** அரசாங்கத்தினுல் ஏற்றுக் கொள்ளப்பட்ட மதமாக **மீண்டும் ஆக்கினுர்; சட்டத்தை முன்பு போலவே பாதுகாக்கப்** போவதாக அறிவித்தார். ஜஹாங்கீர் ஆக்ராவில் இருந்தபொழுது, டெல்லியிலும் லாகூரிலும் புரட்சிக் கொடியை உயர்த்திய தன் மகன் இளவரசர் **குஸ்ருவைத் தோற்கடித்துச்சிறையிலிட்டார்;** அவரது சகாக்களில் 700 பேர்களை ஈட்டி முனையில் கழுவிலேற்றி அந்தக் கோரமான இருவரிசைகளின் நடுவில் குஸ்ருவை ஊர்வலம் கொண்டு சென்ருர்.

**1610.** ஜஹாங்கீர் இரண்டு படைகளை, ஒன்றைத் **தக்காணத்துக்கும்,** மற்றொன்றை **உதயபூருக்கும்** அனுப்பினார். தக்காணத்துக்கு அனுப்பப்பட்ட அந்தப் படையைப் பொருத்தவரை: **அகமது நகரின் இளம் மன்னரது—** இவரது தலைநகர் **அவுரங்காபாத்துக்கு** மாற்றப்பட்டிருந்தது—அமைச்சர் **மாலிக் ஆம்பர் அகமது நகரை** *1610-ல்* திரும்பக் கைப்பற்றியிருந்தார் (அக்பரால் அங்கு வைக்கப்பட்டிருந்த மொகலாயக் கோட்டைக் காவற்படை தோற்கடிக்கப்பட்டது); எனவே—

**1617** வரையில் மாலிக் ஆம்பருக்கு எதிராக அனுப்பப்பட்ட படைகள் அவரைத் **தோற்கடிப்பதில் வெற்றி** பெறவில்லை; அவ்வெற்றிகூட நேருக்கு நேரான சண்டையில் அல்ல; அவரது கூட்டாளிகள் அவரைக் கைவிட்டுப் பிரிந்து போனதால்தான்.

**1611.** **ஜஹாங்கீர் நூர்ஜஹானை** (பாரசீகத்திலிருந்து வந்து குடியேறிய ஒருவரின் மகளை) மணந்தார்; **அவரை** இப் பெண்மணி முழுதும் அடக்கியாண்டு, முந்தையத் திருமணத்தின் மூலம் பிறந்த அவரது குமாரர்களுக்கு எதிராகச் சதி செய்தார்.

**1612.** இளவரசர் **குர்ரம்** (பிற்காலத்து **ஷாஜஹான்**) **உதய பூரை** வென்று, **மார்வாரையும் அடிபணியச் செய்தார்.**

**1615.** **சர் தாமஸ் ரோ**—டெல்லி அரசவையில் முதல் ஆங்கிலேயர்—ஆரம்ப நிலையிலிருந்த **கிழக்கிந்தியக் கம்பெனி** விஷயமாக **முதலாம் ஜேம்ஸ்** மன்னரால் தூது அனுப்பப்பட்டு டெல்லி சென்றார். **ஜஹாங்கீர் குர்ரத்தை** (தனது மூன்றாவது மகன்) **பட்டத்து வாரிசாக** நியமித்து (மூத்த மகன் குஸ்ரூ சிறையிலிருந்தார்; சிறையிலேயே **1621-ல்** இறந்தார்; இரண்டாவது மகன் **பர்வீஸ்** தகுதியற்றவரென்று அவர் கருதினார்), **குஜராத்தின் அரசப்பிரதிநிதி**

**யாக** அவரை நியமித்து, மீண்டும் புரட்சி செய்திருந்த **மாலிக் ஆம்பருக்கு** எதிராக அவரை அனுப்பினர்.

**1621.** **நூர்ஜஹான்**, குர்ரத்தை டெல்லியிலிருந்து அப்பால் அனுப்பிவிட்டு, தனக்குப் பிடித்த மகன் **பர்வீசை** அரியணையில் ஏற்றுவதற்காக வேண்டி, குர்ரத்தை (ஷாஜஹானை) காண்டஹாருக்கு அனுப்புவதற்கு ஜஹாங்கீரை இசையச் செய்தார். இதனால், **ஷாஜஹானின்** பயனற்ற கலக முயற்சிகள்; பிறகு அவர்—

**1624**—தனது தவறுகளுக்கு மன்னிப்புக் கோரி டெல்லிக்குத் திரும்பி வந்தார். சிறிது காலத்திற்கெல்லாம், ஷாஜஹானை எதிர்த்து அனுப்பப்பட்ட **மகபத்கான்** நூர்ஜஹானுடைய அதிருப்திக்கு ஆளாகவே, அவர் தக்காணத்திலிருந்து திரும்பி அழைக்கப்பட்டு, டெல்லியில் மரியாதையின்றி நடத்தப்பட்டார். காபூலுக்குப் புறப்பட்டிருந்த **ஜஹாங்கீர்**, மகபத்கானையும் தன்னுடன் வரச்செய்து, அவரை மிகவும் கடுமையாக நடத்தினர்; பேரரசுத் துருப்புகள் **ஹைடாஸ்பஸ்** (பஞ்சாபியின் ஐந்து நதிகளில், மேற்கிலிருந்து கிழக்காகப் பார்த்தால் இரண்டாவதாகிய **ஜீலம்**) நதியை கடந்ததும், அவர் அச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஜஹாங்கீரைப் பிடித்துக் கைதியாகத் தனது முகாமுக்குக் கடத்திச் சென்றார். **நூர்ஜஹான்** நதியைக் கடந்து, மகபத்கானை உடனே தாக்கி, பெரும் சேதத்துடன் தோற்கடிக்கப்பட்டார்; அதன் பிறகு நூர்ஜஹான் பணிந்து, ஜஹாங்கீருடன் கைதியாகச் சேர்ந்தார். அரசக் கைதிகளைத் தன்னுடன் மகபத்கான் கொண்டு சென்று, அவர்களை மதிப்புடன் நடத்தினர்; அதே சமயம் மகபத்கானின் சேனையிலிருந்து நூர்ஜஹான் தனக்குச் சகாக்களைத் திரட்டினர்.

**1627.** ராணுவ அணிவகுப்பு விழாவின் பொழுது, மகபத் கானைச் சுற்றியிருந்த பணியாளர்களிடமிருந்து, **நூர்ஜஹானின்** அறிவுரையின் பேரில், ஜஹாங்கீர் மெதுவாக அப்பால் ஓடிச் சென்று, தன்னிடம் முழுதும் விசுவாசமுள்ள ஒரு படை வகுப்பை நெருங்கியதும், **அதனல் காப்பாற்றப்பட்டார். மகபத்** மன்னிக்கப்பட்டு, **ஷாஜஹானுக்கு எதிராக அனுப்பப்பட்டார்;** ஆனல், ஷாஜஹானுடன் அவர் உடனே அன்னியோன்னியமாகி விட்டார்.

**அக்டோபர் 28, 1627. ஜஹாங்கீர்** லாகூர் செல்லும் வழியில் இறந்தார். டெல்லியின் கவர்னர் **ஆசப் கான்** உடனே ஷாஜஹானை அழைத்து வர ஆள் விடுத்தார்; சீக்கிரமே ஷாஜஹான் மகபத்கானுடன் வந்து சேர்ந்து, ஆக்ராவில் சிறப்புடன் முடிசூட்டப்பட்டார்; அரசியலிலிருந்து ஒதுங்கி வாழும்படி **நூர்ஜஹான்** நிர்ப்பந்திக்கப்பட்டார்.

## 5. ஷாஜஹானின் ஆட்சி, 1627—1658

**1627. *கான் ஜஹான் லோடியின் கலகம். இளவரசர் பர்வீஸின்** தளகர்த்தர்களில் ஒருவரான இவர், இறந்துபோன மாலிக் ஆம்பரின் குமாரருடைய சேனையுடன் சேர்ந்து கொண்டார்; மன்னிப்புத் தருவதாகச் செய்யப்பட்ட உறுதி மொழியின் பேரில் இவர் பிறகு டெல்லி சென்றார்; ஆனல் சந்தேகப்பட்டு, **சம்பல் நதிக்கு** ஓடிச் சென்று, அங்கு அரசரின் படைகளுடன் போரிட்டுத் தோற்கடிக்கப்பட்டு, நதியைக் கடந்து, பண்டேல் கண்டு வழியாக **அகமது நகருக்கு** ஓடிப்போனார்.

**1629.** அவருக்கு எதிராக **ஷாஜஹானே தக்காணத்துக்குச்** சென்றார்; **பர்ஹான்பூரில்** அவரைச் சந்தித்து, **அகமது**

---

*1628 என்கிறார் பர்கஸ்.

நகருக்குத் திருப்பியோட்டினார்; பீஜப்பூரில் தனது நண்பர் முகம்மது ஆதில்ஷாவின் பாதுகாவலில் தான் ஆபத்தின்றி இருக்கலாம் என்று கான் ஜஹான் நம்பினார்; ஆனால் அந் நண்பர் அவரை நுழைய அனுமதிக்க மறுத்து விட்டார்; அவர் மாளவத்துக்கு ஓடி, பண்டேல் கண்டுக்குள் வலிந்து புக முயன்றார்; ஆனால் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். பேரரசர் பிறகு அகமது நகருக்குப் படையெடுத்துச் சென்றார்.

**1630.** * அந்நகர் பேரரசுப் படையினால் முற்றுகையிடப்பட்டபொழுது, அகமது நகர் அரசரின் அமைச்சர் பதே கான் என்பவர் மன்னரைக்கொன்று அவ்வூரை ஷாஜஹானுக்குச் சரண் செய்தார். பிறகு ஷாஜஹான் பீஜப்பூர் நகரைப் பிடிப்பதற்கு வீண் முயற்சி செய்தார்; பீஜப்பூரை முற்றுகை யிடுவதற்கும், தக்காணத்தில் தளபதியாகப் பணிபுரியவும் மகபத் கானை விட்டுவிட்டு, டெல்லி திரும்பினார்.

**1634.** பீஜப்பூரின் பயனற்ற முற்றுகைக்குப் பிறகு, மகபத் கான் திருப்பி யழைக்கப்பட்டார்.

**1635.** பீஜப்பூர் ஷாஜஹானாலேயே முற்றுகையிடப்பட்டது—பயனில்லை.

**1636.** ஆகவே பீஜப்பூர் மன்னர் முகம்மது ஆதில் ஷாவுடன் ஷாஜஹான் சமாதானம் செய்துகொண்டு, அகமது நகரின் பிரதேசங்களை அவருக்குக் கொடுத்தார்; இதனால் அகமது நகர் அரசு சுதந்திர அரசாக இல்லாதொழிந்தது. மொகலாயப் படை முழுவதையும் ஆறு ஆண்டுகளாக வெற்றி பெறாமல் ஆதில் செய்துவிட்டார்.

---

* 1631 என்கிறார் பர்கஸ்.

**1637.** * ஷாஜஹான் காபூலுக்கு[ச் சென்றார்]; அங்கிருந்து அலிமர்தான் கான் (1594-ல் அக்பரால் பாரசீகர்களிடமிருந்து பறித்துக்கொள்ளப்பட்ட காண்டகார் என்ற புதிய மொகலாய மாகாணத்தின் கவர்னர்), தனது மகன் மூராத் ஆகியோரின் தலைமையில் படையை பல்க்குக்கு எதிராக அனுப்பினார்.

**1646.** இருவரும் வெற்றி பெறவே, பல்க் இணைத்துக் கொள்ளப்பட்டு, பேரரசரின் மூன்றாம் புதல்வர் அவுரங்கசீப்பிடம் ஒப்படைக்கப்பட்டது.

**1647.** அவுரங்கசீப் பல்கில் உஸ்பெக்குகளால் முற்றுகையிடப்பட்டார்; பெரும் சேதத்துடன் இந்தியாவுக்கு ஓடினார்.

**1648.** ஷா அப்பாஸின் கீழ் பாரசீகர்கள் காண்டகாரை மீண்டும் பிடித்தனர்; அதைத் திரும்பப் பெற அவுரங்கசீப் அனுப்பப் பட்டார்; அவருக்கு உணவு, தளவாடங்கள் முதலிய உதவிகள் வராமல் எதிரிகள் தடுத்தனர்; அவர் காபூலுக்குப் பின்வாங்க வேண்டியதாயிற்று.

**1652.** காண்டகாரைப் பிடிக்கும் மறு முயற்சி தோற்றது; **1653**-ல் பேரரசரின் மூத்த குமாரர் தாரா ஷிகோ அந்நகரின்மீது தாக்குதல் தொடுத்த பொழுதும் அதேதான். மொகலாயர்கள் பின் வாங்கினர்; காண்டகார் மீண்டும் பாரசீகருக்குச் சொந்தமாயிற்று.

**1655.** கோல்கொண்டா அரசர் ராஜா அப்துல்லா கானுல் கொலை செய்யப்படப் போவதாகப் பயமுறுத்தப்பட்டிருந்த அவரது முதலமைச்சர் மீர் ஜும்லாவின் வரவேற்புக்கிணங்க மொகலாயப் படைகள் மீண்டும் தக்காணத்துக்கு வந்தன. உடனே அவுரங்கசீப் ஹைதராபாத்தைக் கைப்பற்றி—

**1657**—கோல்கொண்டா மீது முற்றுகை யிட்டார்; அப்துல்லா கான் பணிவதாகவும், ஆண்டுதோறும் £ 10,00,000 திறை

* 1644 என்கிறார் எல்பின்ஸ்டன்.

செலுத்துவதாகவும் வாக்களித்தார். **ஷாஜஹான் நோயுற்றிருப்பது**பற்றி யறிந்து அவுரங்கசீப் டெல்லிக்கு விரைந்து திரும்பினார். ஷாஜஹானுக்கு நான்கு குமாரர்கள் இருந்தனர்: **தாரர ஷிகோ, ஷுஜா, அவுரங்கசீப், மூராத். தாரா** இப்பொழுது அரசப் பிரதிநிதியாக இருந்தார்; **ஷுஜா**, வங்காளக் கவர்னர்; **மூராத்** (இளையவர்), **குஜராத் கவர்னர்.** தந்திரமும் இரக்கமின்மையும் கொண்ட மூன்றும் குமாரர் **அவுரங்கசீப்** பதவியைக் கைப்பற்ற ஆசை கொண்டார்; பேரரசை இயக்கும் பெரும் சக்தி மதமாக இருப்பதைக் கண்டு, **இஸ்லாம் மதத்தின் காவலர்** என அவர் மக்களது ஆதரவைப் பெற முயன்றார்.

தான் நோய்வாய்ப் பட்டதால் **ஷாஜஹான்** அரசாங்கத்தைத் **தாராவிடம்** ஒப்படைத்தார்; **ஷுஜா** புரட்சி செய்து, பீஹார்மீது படையுடன் சென்றார்; **மூராதும்** புரட்சி செய்து **சூரத்தைப்** பிடித்தார். **தாராஷிகோவை**யும் **ஷுஜாவை**யும் தம்முள் சண்டையிட்டுப் பலவீனமடையும்படி விட்டுவிட்டு, தான் துறவு பூண்டு உலக வாழ்விலிருந்து விலக விரும்புவதால், தனது இளைய சகோதரன் அரியணை ஏற முதலில் தான் உதவ விரும்புவதாகச் சொல்லி நடித்து அவுரங்கசீப் தனது படையை **மூராத்**திடம் கொண்டு சென்றார். **தாரா ஷிகோ, ஷுஜா**வைத் தோற்கடித்து, பிறகு மூராத்தின்மீதும் அவுரங்கசீப்பின்மீதும் படையெடுத்து வந்து தோற்றார்.

**1658. ஷாஜஹானது** தெளிவாகக் கூறப்பட்ட விருப்பத்திற்கு மாறாக **தாரா ஷிகோ** மீண்டும் போரில் இறங்கினார்; ஆக்ராவுக்கு அருகில் **சமாகார்** என்னுமிடத்தில் சேனைகள் சந்தித்தன; மூராத்தின் தைரியத்தினால் தோற்கடிக்கப்பட்டு, [தாரா ஷிகோ] ஆக்ராவுக்குத் தனது
[illegible] அவுரங்கசீப் அங்கு சென்று, அவர்

களிருவரையும் அரண்மனையில் ஒரு பாதுகாவலான இடத்தில் சிறை வைத்து, நயவஞ்சகமாக மூராத்தைப் பிடித்து டெல்லிக்கு எதிராக நதியின் அக்கரையிலிருந்த சலீம்காரில் சிறையிலிட்டு, பிறகு அவரைச் சங்கிலியால் பிணைத்துக் குவாலியர் கோட்டைக்கு அகற்றினார்; தான் அரியணையிலிருந்து இறக்கிய ஷாஜஹானுக்குப் பதிலாகத் தன்னையே பேரரசராக அவுரங்கசீப் அறிவித்துக் கொண்டார்; ஆலம் கீர் என்ற பட்டத்தை வைத்துக் கொண்டார்.

## (6) அவுரங்கசீப்பின் ஆட்சியும், மகாராஷ்டிரர்களின் எழுச்சியும், 1658—1707

**1658.** தாரா ஷிகோ சிறையிலிருந்து தப்பித்து லாகூருக்கு ஓடினார். (அங்கு சென்று தனது தந்தையுடன் சேர்ந்து கொள்ள அவரது மகன் சுலைமான் முயன்றார்; ஆனால் வழியில் தடுக்கப்பட்டு, காஷ்மீரத்தின் தலைநகர் ஸ்ரீ நகரில் சிறை வைக்கப்பட்டார்.) தாரா பின்னர் சிந்துவுக்கு[ச் சென்றார்]; அதே சமயம் ஷுஜா டெல்லி மீது படையெடுத்துச் சென்று, ராஜா ஜஸ்வந்த் சிங்கின் தலைமையிலான பேரரசுத் துருப்புகள் சில போரின் சமயம் அவுரங்கசீப்பைக் கைவிட்டு விட்ட போதிலும் கூட காஜ்வா என்னுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டார்; ஷுஜாவின் தோல்விக்குப் பிறகு, பிரிந்து சென்ற அத்துருப்புக்கள் ஜோத்பூருக்கு ஓடின.

உடனே தாரா ஷிகோ மீண்டும் போரில் இறங்கி [தோற்கடிக்கப்பட்டு], ஆகமதாபாத், கட்ச், காண்டகார், கடைசியாக சிந்துவில் ஜூன் ஆகிய இடங்களுக்கு ஓடினார்; ஜூனிலிருந்து நயவஞ்சகமாக அவர் டெல்லியில் அவுரங்கசீப்பிடம் ஒப்படைக்கப்பட்டு சிரச்சேதம்

செய்யப்பட்டார்; டெல்லி மக்கள் கலகம், ஆயுத பலத்தால் ஒடுக்கப்பட்டது.

**1660.** (அவுரங்கசீப்பின் குமாரர்) இளவரசர் முகம்மது சுல்தானும், கோல்கொண்டாவின் முன்னாள் அமைச்சர் மீர்ஜும்லாவும் வங்காளத்தில் ஷுஜாவை எதிர்த்து வென்றனர். ஷுஜா அரக்கானு*க்குத் தப்பியோடிப்போனார்; அதன் பிறகு அவரைப்பற்றி ஒரு தகவலும் தெரியவில்லை. முகம்மது சுல்தான், மீர்ஜும்லாவை எதிர்த்துப் புரட்சி செய்து [ஷுஜாவுடன் சேர்ந்து], பிறகு தன் பணிக்குத் திரும்பினார். சிறையில் அவர் சாகும் வரை பல ஆண்டுகள் அவுரங்கசீப் அவரைக் கைதியாக வைத்தார். தாரா ஷிகோவின் குமாரர் சுலைமானை, ஸ்ரீ நகர் ராஜா ஆக்ராவில் அவுரங்கசீப்பிடம் கைதியாக ஒப்படைத்தார்; சீக்கிரமே அவுரங்கசீப்பால் நஞ்சூட்டப்பட்டு ஆக்ராவில் அவர் இறந்தார். அதேசமயம் மூராத்தும் கொலை செய்யப்பட்டார். இப்பொழுதிலிருந்து எதிர்ப்பற்ற முழுத் தலைவராக அவுரங்கசீப் ஆனார் (ஷாஜஹான் இன்னும் "கம்பி எண்ணிக் கொண்டிருந்தார்").

முதலமைச்சராக்கப்பட்ட மீர்ஜும்லா, [1663-ல்] அஸ்ஸாமை எதிர்த்துப் போரிடும் வேலையில் ஈடுபட்டிருக்கும்பொழுது டாக்காவில் இறந்தார்; அவரது மூத்த மகன் முகம்மது அமீன் அவருடைய பதவியைப் பெற்றார்.

**1660—1670.** மகாராஷ்டிரர்களின் எழுச்சி

மாலிக் ஆம்பரின் அதிகாரிகளில் ஒருவரான மாலோஜி பான்ஸ்லே என்பவருக்கு ஷாஜி என்ற ஒரு குமாரர் இருந்தார்; இவர், ராணுவத்தில் உயர் பதவியிலிருந்த

---

* பர்மாவின் பழைய பெயர்.

ஒரு அதிகாரியான ஜாது ராவின் மகளை மணந்து கொண்டார்; இத்திருமணத்தின் மூலம் பிறந்த மகன்தான் சிவாஜி என்பவர்; தனது தந்தையின் ஜாகீரிலிருந்த (ஒரு நபரின் தனித் திறமையைப் போற்றும் வகையில் அரசரால் அவருக்குக் கொடுக்கப்பட்ட நிலப்பகுதியே ஜாகீர் என்பது) முரட்டுச் சிப்பாய்களுடன் சதா தொடர்பு கொண்டிருந்ததால், அவர் ஒரு கொள்ளைக் காரரின் பழக்கவழக்கங்களைப் பெற்ருர்; இவைகளை அவர் இளம் வயதிலேயே தனது ஏவலாளர்களின் கூட்டத்தில் கையாண்டு பார்த்தார். தனது தந்தையின் நிலப் பகுதியையே கைப்பற்றிக் கொண்டு, பல கோட்டைகளையும் பிடித்தார்; பிறகு பாதுகாவலுடன் சென்ற பேரரசின் பொக்கிஷத்தையே பிடித்து, அவர் பகிரங்கமாகக் கலகத்தைத் துவக்கினுர்; அவரது சேனையின் துணைத் தலைவர் கொங்கணத்தின் கவர்னரைச் சிறைப்பிடித்து, அம்மாகாண முழுவதையும், அதன் தலைநகர் கல்யாண் உட்பட, கைப்பற்றினுர். இவ்வெற்றிக்குப் பிறகு சிவாஜி ஷாஜஹானுடன் பேச்சு வார்த்தைகள் தொடங்கினுர்; இவைகள் ஷாஜஹானுல் ஓரளவு வரவேற்கப்பட்டன. பிறகுஅவர் தென் கொங்கணத்தைக் கைப்பற்றி—

**1655**— தனது அதிகாரத்தை விரிவாக்கிக் கொண்டே போனுர். மகாராஷ்டிரர்களின் கொட்டத்தை அடக்க அவுரங்கசீப் அனுப்பப்பட்டார். சிவாஜி சதி செய்தார், பசப்புக் காட்டினுர்; மன்னிக்கப்பட்டார். பேரரசுப் படை திரும்பிச் சென்ற உடனே, பீஜப்பூர்மீது அவர் மீண்டும் தாக்குதல்கள் நடத்தினுர். பீஜப்பூர் [துருப்புக்களை நடத்திய] அப்சல் கான் துணை ஏதும் இன்றித் தனியாக சிவாஜியைப் பேட்டி காண ஒப்புக் கொண்டார்; சிவாஜி அவரைத் தன் கையாலேயே கொன்று

பிறகு கானின் கலவரமுற்றிருந்த படையைத் தோற் கடித்தார்.

இப்பொழுது பல்கியிருந்த சிவாஜியின் துணைவர்களுக்கு எதிராகப் படை அனுப்பப்பட்ட பின்னர், பீஜப்பூரின் புதிய படைத் தலைவர்—

**1660**— மகாராஷ்டிர நாட்டுக்குப் படையுடன் சென்று, சிவாஜி யைத் தோற்கடித்து—

**1662**— அவருடன் தனக்குச் சாதகமான ஒரு சமாதானத் தைச் செய்து, அக்கிளர்ச்சிக்காரரைக் கொங்கணத்தில் ஒரு ஜாகீரில் பாதுகாப்பாக வைத்தார்.

**1662.** சிவாஜி மீண்டும் மொகலாயப் பிரதேசத்தைக் கொள்ளையிட ஆரம்பித்தார். அவுரங்கசீப் அவருக்கு எதிராக ஷாயிஸ்த கானை அனுப்பினார்; இவர் அவுரங்கா பாத்திலிருந்து பூனவுக்குப் படையெடுத்து வந்து அதைப் பிடித்தார்; குளிர்கால முழுவதும் இவர் அங்கேயே குளிர்கால விடுதிகளில் தங்கினார்; ஓரிரவு அவரைக் கொல்வதற்காக சிவாஜி திருட்டுத்தனமாக அவர் அறையில் நுழைந்தார்; ஆயினும், கான் தப்பித்துக் கொண்டார். மழைக் காலத்துக்குப் பிறகு ஷாயிஸ்தகான் அவுரங்காபாத் சென்றார்; சிவாஜி உடனே சூரத்தைச் சூறையிட்டார்.

**1664.** சிவாஜியின் தந்தை ஷாஜி இறந்தார்; தன் தந்தைக்கு உரிமையான [ஷாஜியின் ஜாகீர்], சென்னை[க்கு அருகி லுள்ள பிரதேசம்], மேலும் தானே வென்றிருந்த கொங்கணம் ஆகியவற்றை அவர் பெற்றார். மகாராஷ்டிரர் களின் ராஜா என்ற பட்டத்தை இப்பொழுது அவர் வைத்துக்கொண்டு, எட்டிய வரைக்கும் நாட்டைக் கொள்ளையடித்தார்.

**1665.** அவுரங்கசீப் கடுங்கோபங் கொண்டு இரு பகுதிகளாக ஒரு சேனையை அவருக்கு எதிராக அனுப்பினார். சிவாஜி பணிந்தார்; ஆயினும், தான் வென்றிருந்த 32 கோட்டை

களில் 12-ஐயும். அவைகளின் பிரதேசத்தையும் கொண்ட இன்னொரு ஜாகீரையும் இத் தந்திரமுள்ள மனிதர் உடன்படிக்கையின் மூலம் பெற்றார். அதுமட்டுமின்றி சௌத்தையும்—தக்காணத்திலிருந்த மொகலாயப் பிரதேச முழுவதிலும் வசூலிக்கப்படும் ஒருவித பணம் பறித்தல் முறை—பெற்றார்; இது பின்னர், தங்களைச் சுற்றியிருந்த எல்லாத் தேசங்களுடனும் சண்டை பிடிப்பதற்கும், அவைகளின் பிரதேசத்தை அத்துமீறிக் கைப்பற்றுவதற்கும் ஒரு சாக்குப்போக்கை மகாராஷ்ட்டிரர்களுக்கு[க் கொடுத்தது.]

**1666.** சிவாஜி டெல்லிக்கு விருந்தினராகச் சென்றார்; கொஞ்சமும் மரியாதை யின்றிதான் வரவேற்கப்படவே ("தான் சூழ்ச்சித் திற"த்தில் மிக்கவர் ஆயினும், அவுரங்கசீப் அவரைக் கொல்லவில்லை; பொதுவாக ஆரம்பத்திலிருந்தே அவர் மகாராஷ்டிரர்களிடம் "மடைய"னைப் போல நடந்து கொண்டார்.) அவர் சீக்கிரமே காபத்துடன் தக்காணத்துக்குத் திரும்பினார். அதே ஆண்டில் ஷாஜஹான் சிறைச்சாலையில் இறந்தார்.

**1667.** சாமர்த்தியமான தந்திரத்தினால், உடன்படிக்கையில் சிவாஜி ராஜாவாக அங்கீகரிக்கப்பட்டார்; பிறகு அவர் பீஜப்பூரையும் கோல்கொண்டாவையும் பயமுறுத்தி, அவைகள்மீது கப்பம் விதித்தார்.

**1668-ம் 1669-ம்.** சிவாஜி தனது ராஜ்யத்தைச் சீரமைத்தார்; ராஜபுத்திரர்களுடனும், அண்டையிலிருந்த மற்றைய நாடுகளுடனும் தனக்கு அனுகூலமான உடன்படிக்கைகளைச் செய்து கொண்டார்.

**1669.** இவ்வாறாக, ஒரு சுதந்திரமான அரசரால் ஆளப்படும் ஒரு தேசமாக மகாராஷ்டிரர்கள் ஆயினர்.

**1670.** அவுரங்கசீப் உடன்படிக்கையை மீறினார்; பூனாவைப் பிடித்தும், சூரத்தையும் காந்தேஷ்ஷையும் சூறையாடி

யும் போர் நடவடிக்கைகளை சிவாஜி முதலில் தொடங்கினர்; அச்சமயம் அவுரங்கசீப்பின் குமாரர் முவாசம் அவுரங்காபாத்தில் ஒரு நடவடிக்கையும் மேற்கொள்ளாமல் சும்மா இருந்தார். மகபத் கான் அனுப்பப்பட்டு, சிவாஜியால் பயங்கரமாகத் தோற்கடிக்கப்பட்டார். அவுரங்கசீப் தனது படைகளைத் திருப்பி அழைத்துப் போர் நடவடிக்கைகளை நிறுத்தி வைத்தார். அப்பொழுதிலிருந்து அவுரங்கசீப்பின் செல்வாக்குக் குறைய ஆரம்பித்தது; எல்லோருக்கும் அவர்மீது எரிச்சல்; அவரது பயனற்ற மகாராஷ்ட்டிரப் போர்களால் அவரது முஸ்லீம் சிப்பாய்களும், அவர் ஜெஸியாவை மீண்டும் புகுத்தி யிருந்ததாலும், தங்களை எல்லா வழிகளிலும் துன்புறுத்தியதாலும் இந்துக்களும் ஆத்திரங் கொண்டனர்.

**1678.** 1678-ல் இறந்த, ராஜபுத்திரர்களின் பெருந் தலைவரான ராஜா ஜஸ்வந்த் சிங்கின் விதவை மனைவியிடமும் பிள்ளைகளிடமும் தான் நடந்துகொண்ட விதத்தினல், தனது சேனையிலிருந்த சிறந்த வீரர்களாகிய ராஜபுத்திரர்களின் அன்பையும் அவர் இறுதியாக இழந்தார். அந்த ராஜாவின் மகன் துர்காதாஸ் அவுரங்கசீப்பின் குமாரர் இளவரசர் அக்பருடன் சேர்ந்து சதிசெய்து, 70,000 ராஜபுத்திரர்களுடன் டெல்லிமீது படையெடுத்து வந்தார். இந்தக் கூட்டணியானது சதித்திட்டம், கைவிட்டுப் பிரிதல் ஆகியவைகளினல் உடைக்கப்பட்டு, போர் நடவடிக்கை ஏதும் ஆரம்பமாவதற்கு முன்னரே சேனை கலைந்தது; அக்பரும் துர்காதாசும், கீர்த்தி பெற்ற சிவாஜியின் குமாரர் சாம்பாஜியின் தலைமையிலான மகாராஷ்ட்டிரர்களிடம் ஓடிப் போயினர்.

**1681.** இரு கட்சிகளுக்குமிடையில் இடைவிட்டுவிட்டுச் சண்டை நடந்த பின்னர், மேவாரிலும் மார்வாரிலும் அமைதி. அச்சமயம்—

**1673**— சிவாஜி கொங்கணத்தைக் கைப்பற்றி யிருந்தார்; 1674-ல் அவர் மொகலாய மாகாணங்களாகிய காந்தேஷ்ஷையும் பேராரையும் நாசப்படுத்தினர்; அதே சிவாஜி—

**1677**— கர்னூல், கட்ப்பை (சென்னைக்குப் பக்கமாக அவர் சென்றார்; அப்பொழுது இங்கிலீஷ் பண்டசாலைகளிலிருந்த அதிகாரிகள் பயத்தினல் செத்துக் கொண்டிருந்தனர்—மே 1677, சென்னை தஸ்தாவேஜுகள்), செஞ்சி, வேலூர் ஆகியவைகளை ஒன்றன்பின் ஒன்ருகக் கைப்பற்றினர்.

**1678**. சிவாஜி மைசூரையும் தஞ்சாவூரையும் பிடித்தார்; 1680 ல் அவர், மொகலாயப் படையின் சப்ளைகளைத் துண்டித்து, பீஜப்பூர்மீது பாய்ந்து—

**1680**— இப்படையெடுப்பின் பொழுது சிவாஜி இறந்தார்; அவரது மகன் சாம்பாஜி மகாராஷ்ட்டிரப் படைகளின் தலைமையை மேற்கொண்டார். சாம்பாஜி கொடுமையும் தீயொழுக்கமும் நிறைந்த ஒரு அரசர்; அவரது அதிகாரம் உடனேயே குன்றியது; மொகலாயர்கள் ஒரு நல்ல தளபதியைப் பெற்றிருந்தால், மகாராஷ்ட்டிரர்களுடைய அதிகாரத்தை முறித்திருப்பார்கள்; ஆனல் அவுரங்கசீப் ஒரு "எருமை"யைப் போலவே தொடர்ந்து நடந்து கொண்டார்.

**1683**. கொங்கணத்துக்குள் அனுப்பப்பட்டிருந்த இளவரசர் முவாசத்தை சாம்பாஜி தோற்கடித்தார்; மொகலாயப் படையின் பின்னிருந்த பிரதேசத்தை மகாராஷ்ட்டிரர்கள் சூறையாடி, பர்ஹான்பூர் பட்டணத்தைத் தீக்கிரையாக்கினர்; அதன் பிறகு முவாசம் ஹைதராபாத்தைக் கொள்ளையிட்டு, கோல்கொண்டா மன்னருடன் உடன்படிக்கை செய்து கொண்டார்; அதேசமயம் மகாராஷ்ட்டிரர்கள் வடக்கு நோக்கிச் சென்று பரோச்சைச் சூறையிட்டனர்.

அதன் பிறகு, இன்னொரு படையுடன் **அவுரங்கசீப்** சென்று, **பீஜப்பூர்** நகரத்தையும் ராஜ்யத்தையும் அழித்து, **கோல்கொண்டாவுடன்** செய்திருந்த உடன் படிக்கையை வேண்டுமென்றே மீறி அந்நகரையும் கைப்பற்றினார்.

அப்பொழுதிலிருந்து **அவுரங்கசீப் தனது குமாரர்களைக் கண்டே பயந்து,** ஒவ்வொருவரையும் சந்தேகித்தார்; அவரது பயமானது—

**1687**— பாதி பைத்தியமாக ஆகிவிட்டது; **முவாசத்தை,** அவர் தனது தந்தைக்குச் சினமூட்டும் செயலொன்றையும் செய்யாதிருந்தும், சிறையிலிட்டார்; அவர் அங்கு ஏழு ஆண்டுகள் [கழித்தார்].

**அக்காலத்திலிருந்து மொகலாயப் பேரரசின் வீழ்ச்சி** ஆரம்பமாகிறது; **தக்காணத்தில்** குழப்பம், **சுதேச அரசுகள் உடைந்துபட்டன,** கொள்ளைக்காரக் கூட்டங்கள் நாடு முழுவதும் திரிந்தன; **மகாராஷ்ட்டிரர்கள்** பெரும் சக்தியாக விளங்கினர்; **வடக்குப் பகுதியிலிருந்த குலங்கள்— ராஜபுத்திரர்களும் சீக்கியர்களும்**—நிரந்தரமாக மொகலாயர்மீது வெறுப்புக் கொண்டனர்.

**1689. தொக்ராப் கான்** என்ற மொகலாய அதிகாரி ஒருவர் **(மேற்கு மலைத்தொடர்ச்சிக்கு அருகிலுள்ள கோல்ஹாப்பூரின் கவர்னர்), சாம்பாஜியானவர்** வேட்டை மேற்கொண்டு சமீபத்தில் இருக்கிறார் எனக் கேள்வியுற்று, அவரைப் பிடிக்கும் முயற்சியில் வெற்றிபெற்று, அவரைக் கைதியாக **அவுரங்கசீப்பிடம்** அனுப்பிவைத்தார்; பேரரசர் உடனே அவரைச் சிரச்சேதம் செய்தார்.

**சாம்பாஜியின்** ஆண் குழந்தை **சாஹோ (அல்லது சாஹு)** தனது தந்தையின் பின் பட்டம் சூடினார்; அஞ்சாமையும் அறிவு கூர்மையும் படைத்த **ராஜாராம்** ரீஜென்ட் ஆனார்.

**1692.** ரீஜென்ட்டான **ராஜாராம்** மகாராஷ்ட்டிரக் கொள்ளைக் கூட்டங்களைத் திருத்தியமைத்து, தலைவர்களாகிய **சாந்தாஜியையும் தானுஜியையும்** தளபதிகளாக நியமித்து, பல சிறு போர்களில் மொகலாயப் படைகளுக்கு எதிராக அவர்களை அனுப்பினுர்; அப்போர் சுமார் ஐந்து ஆண்டுகள்—*1694—1699*—நீடித்தது; இவைகளில் மூன்ருண்டுகள் **செஞ்சி முற்றுகையில்** கழிந்து இறுதியில் அது மகாராஷ்ட்டிரர்களால் கைக்கொள்ளப்பட்டது.

**1694.** **அவுரங்கசீப்** தனது தளபதி **சுல்பிகார் கான்** என்பவரை செஞ்சியை முற்றுகையிட அனுப்பினுர்; கான் அதிக துருப்புகள் வேண்டுமென்று கேட்டார்; இது மறுக்கப்பட்டது; அதற்குப் பதிலாக, உயர் தலைமையை மேற்கொள்வதற்கு **இளவரசர் காம்பக்ஷ்** அனுப்பப்பட்டார்; மனம் புண்பட்ட கான் முற்றுகையை நீட்டித் தாமதப்படுத்தினுர்; மகாராஷ்ட்டிரர்களுடன் சதா தொடர்புகள் கொண்டார்; ஆகவே அவ்வூரைப் பிடிப்பதற்கு **காம்பக்ஷ்** செய்த முயற்சிகள் மூன்ருண்டுகள் பயனற்றுப் போயின.

**1697.** **சாந்தாஜி** முற்றுகையை விலக்கினுர்; இறுதியாக—

**1698**— இல்லாவிட்டால் தான் தண்டிக்கப்படுவோம் என்பதை **சுல்பிகார் கான்** உணர்ந்ததால், அவர் **மகாராஷ்ட்டிரத் தலைவரைத் தப்பித்துப் போக விட்டு,** பிறகு சிரமமின்றிக் கோட்டையைத் தாக்கினுர். அதன் பிறகு மகாராஷ்ட்டிரர்களிடையிலேயே பிளவுகள்; **தானுஜி** தன் கையாலேயே **சாந்தாஜியைக்** கொலை செய்தார். **சண்டை மீண்டும் மூண்டது; ராஜாராமே** ஒரு பெரும் படைக்குத் தலைமை தாங்கினுர்; தனது பக்கத்தில் **அவுரங்கசீப்** மொகலாயர்களைத் தலைமை தாங்கி நடத்தினுர்.

**1700.** அவுரங்கசீப் சதாராவைப் பிடித்து—

**1704**—வரை மிகப் பல மகாராஷ்ட்டிரக் கோட்டைகளைக் கைப்பற்றினர். ராஜாராம் அதே ஆண்டில் [1700] இறந்தார். அவுரங்கசீப்புக்கு அப்பொழுது [1704] 86 வயது. அவரது வாழ்வின் கடைசி நான்கு ஆண்டுகளில் அரசாங்கம் முழுவதும் சீர்குலைந்திருந்தது. மகாராஷ்ட்டிரர்கள் தங்களது கோட்டைகளை மீண்டும் கைப்பற்றிப் பலம் பெற ஆரம்பித்தனர்; ஒரு பயங்கரப் பஞ்சத்தினால் துருப்புக்களின் உணவுப் பொருட்கள் காலியாயின; பொக்கிஷமும் காலியாயிற்று; சம்பளம் போதாமையினால் சிப்பாய்கள் கலகம்; மகாராஷ்ட்டிரர்களால் அதிகமாக நெருக்கப்பட்டு, மிகத் தாறுமாறாக அவுரங்கசீப் அகமது நகருக்குப் பின் வாங்கினார்; நோய்வாய்ப்பட்டு—

பிப்ரவரி **21, 1707**—அவுரங்கசீப் 89-வது வயதில் காலமானார் ("தனது படுக்கையருகில் நெருங்குவதற்குத் தன் குமாரர்களில் ஒருவரையும் அனுமதிக்க மறுத்தார்").

## [இந்தியாவுக்குள் ஐரோப்பிய வியாபாரிகளின் ஊடுருவல்.]

**1497.** டிசம்பரில், போர்ச்சுக்கீசியராகிய வாஸ்கோடகாமா நன்னம்பிக்கை முனையைச் சுற்றி—

மே **1498**—கள்ளிக் கோட்டையில் நங்கூரம் பாய்ச்சினார். அதன் பிறகு கோவா, பம்பாய், இலங்கையில் கல்முனை ஆகிய இடங்களில் போர்ச்சுக்கீசிய வியாபாரிகளின் காலனிகள் அமைக்கப்பட்டன.

**1595.** (ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு இன்றைய கல்கத்தா நகருக்கு அருகில் டச்சுக்காரர்கள் ஒரு குடியேற்றத்தைப் பெற்றனர்.

**1600.** லண்டன் கிழக்கிந்தியக் கம்பெனி—*நகர வியாபாரிகள் கம்பெனி—[நிறுவப்பட்டது].*

**டிசம்பர் 30, 1600,** பட்டு, பருத்திப் பொருட்கள், விலையுயர்ந்த கற்கள் ஆகியவைகளில் *கிழக்கு நாடுகளுடன்* வர்த்தகம் செய்வதற்காக *எலிசபெத்திடமிருந்து* சாசனம். "ஒரு கவர்னராலும் 24 கமிட்டிகளாலும்" *கம்பெனி நிர்வகிக்கப் படவேண்டும்.*

**1601.** *அவர்களின் முதல் கப்பல்கள் [இந்தியாவுக்குப்] புறப்பட்டன.*— மொகலாயப் பேரரசர் ஜஹாங்கீர்—

**1613***—*ஒரு ஆணைப் பத்திரத்தின்படி* சூரத்தில் *அவ்வியா பாரிகளுக்கு ஒரு வர்த்தகத் துறைமுகத்தை அளித் தார்; பிறகு—*

**1615**—சர் தாமஸ் ரோவைத் தூது மேற்கொண்டு டெல்லி வர *அனுமதித்தார்.*

**1624.** கம்பெனியானது *பார்லிமென்ட்டின் தலையீடு ஏது மின் மின்றியே,* ஜேம்ஸ்I *இடமிருந்து, [இந்தியாவில்]* தங்க ளது ஊழியர்களை இராணுவச் சட்டத்தின்படியும் முனிசிபல் சட்டத்தின்படியும் தண்டிக்கும் அதிகாரத்தை—ஆகவே, *உண்மையில்,* "குடிகளின் உயிர்மீதும் செல்வத்தின்மீதும் எல்லையற்ற அதிகாரத்தை" (ஜேம்ஸ் மில் * *)—வேண்டிப் பெற்றது. அரசரால் கம்பெனிக்குக் கொடுக்கப்பட்ட முதல் நீதித்துறை அதிகாரம் *இதுதான்;* ஐரோப்பிய பிரிட்டிஷ் குடிகளின் மீது *மட்டுமே* இது *செல்லும்.*

**1634.** ஷாஜஹானின் ஆணைப் பத்திரத்தின்படி வங்காளத்தில் முதல் பண்டசாலை நிறுவப்பட்டது.

---

* *1612, என்கிறார் பார்க்ஸ்.*

** *மில்,* பிரிட்டிஷ் இந்திய வரலாறு, *தொகுதி* I, *லண்டன், 1858.*

**1639.** ஆங்கிலேயர்கள் சென்னையில் வாணிபம் செய்ய அனுமதிக்கப்பட்டனர்.

**1654.** 50 ஆண்டுகள் போட்டியற்ற வர்த்தகத்தை அனுபவித்த பிறகு, இக் கம்பெனியின் ஏகபோகமானது, "வியாபார வேட்டைக்காரர்கள்" என்ற பெயரில் இணைந்தமைந்த ஒரு புதிய சங்கம் நிறுவப்பட்டதால் ஆபத்துக்குள்ளாயிற்று.

**1661.** இந்திய மார்க்கெட்டில் போட்டியொன்றும் இல்லாதிருக்கும் பொருட்டு, பழைய கம்பெனியானது "வேட்டைக்காரர்களை"த்தன்னுடன் இணைந்துவிடுவதற்கு அனுமதித்தது.

**1662.** சார்லஸ் II, போர்ச்சுகல் அரசரின் மகளை மணந்தார்; அப்பெண் தனது ஸ்ரீதனத்தின் ஒரு பகுதியாக வர்த்தகத் துறைமுகமான பம்பாயைக் கொண்டு வந்தார்; இது காரணமாக, அத்துறைமுகம் அரச சொத்தாக ஆயிற்று; ஆனால்—

**1668**— "அக்களி கொண்ட அரசர்" பம்பாய்த் துறைமுகத்தைக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு வழங்கினர். இவ்வாண்டில் தேயிலைக்கான (அப்பொழுது சீன வார்த்தையை யொட்டி ட்சே என அழைக்கப்பட்டது) முதல் ஆர்டர் இங்கிலாந்திலிருந்து சென்னைக்கு அனுப்பப்பட்டது. அதே சமயத்தில், எவ்வித லைசென்சும் இன்றித் தன் சொந்த சார்பில் அங்கு வியாபாரம் செய்யும் எந்த ஒரு நபரையும் கைது செய்து இங்கிலாந்துக்கு அனுப்புதல் முதலிய பல அதிகாரங்களைக் கிழக் கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த வியாபாரிகளுக்கு வழங்கும் ஒரு சாசனத்தை, ஏகபோகக் கோட்பாடுகளுக்கெல்லாம் சிகரமான ஒரு சாசனத்தை சார்லஸ்II அவர்களுக்குக் கொடுத்தார்.

**1682.** தாய் நாட்டிலிருந்த இயக்குநர் குழு வங்காளத்தை ஒரு தனி ராஜதானியாக (ஒரு மாகாணத்தில் சிதறிக் கிடந்த சில பண்டசாலைகளையும் வியாபாரக் கிடங்குகளையும் ராஜதானி என்பது அப்பொழுது குறித்தது) அமைத்தது; அதற்குஒரு கவர்னரும், கவுன்சிலும் இருக்கும்; அவை, கல்கத்தாவில் இருக்கும்.

**1688.** *கல்கத்தாவின் தாபகரான சார்னுக், மொகலாயர்களால் வங்காளத்திலிருந்து விரட்டப்பட்டு, பயத்தால் செத்துப் போய், துரத்தப்பட்ட வியாபாரிகளுடன் நதி வழியாக ஓடினர்.

**1690.** அவுரங்கசீப்பின் அனுமதி பெற்று இந்த "நாய்கள்" நாடு கடத்தலிலிருந்து திரும்பி வந்தனர்; கோட்டைகளை எழுப்பியும் கோட்டைப் படைகளை நிறுவியும், கல்கத்தாவில் நிரந்தரக் குடியேற்றத்தை இப்பொழுது சார்னுக் நிறுவினர்.

**1698.** கல்கத்தா, சுட்டர்நட்டி, கோவிந்த்பூர் என்ற மூன்று கிராமங்களை வாங்கிக் கொள்வதற்கு அந்த "நாய்களை", அதாவது கம்பெனியை அவுரங்கசீப் அனுமதித்தார்; இவ்வூர்கள் பிறகு அரண்களமைத்துப் பலப்படுத்தப் பட்டன. சர் சார்லஸ் அயர் இந்தப் புதிய அரண்களுக்கு "டச்சுக்கார விடுதலை வீர"ரைப் போற்றும் வகையில், வில்லியம் கோட்டை எனப் பெயர் சூட்டினர்; இப்பொழுதுங்கூட எல்லா அரசாங்க தஸ்தாவேஜுகளும் "வில்லியம் கோட்டை, வங்காளம்" என்றே குறியிடப்படு

அதே ஆண்டில், வில்லியம் மேரி சாசனம், 9வது 10-வதின் படி ஒரு புதிய கம்பெனி இங்கிலாந்தில் நிறுவப்

---

* 1687 என்கிறார் பர்கஸ்.

பட்டது; 8% விதம் 20,00,000 பவுன்கள் கடன்கொடுத்தால் எத்தனை நபர்களும் இணைவதற்கும் கிழக்கிந்தியாவுடன் வாணிபம் தொடங்குவதற்கும் அவர்களுக்கு அது அதிகாரம் அளித்தது; கடன் பங்குதாரர்கள் வியாபாரம் செய்ய அனுமதிக்கப்பட்டனர்; ஆனால், அக் கடனில் தனித் தனியாக அவர்களின் பங்குகள் எவ்வளவோ, அவைகளுக்கு மேல் அவர்கள் ஒவ்வொருவரது ஏற்றுமதியும் அதிகரிக்கக் கூடாது. இக் கம்பெனியின் பெயர் : இங்கிலீஷ் கிழக் கிந்தியக் கம்பெனி.

**1700.** சர் வில்லியம் நாரிஸின் தலைமையில் (அவுரங்கசீப்பிடம்) அனுப்பப்பட்ட மிகச் செலவுமிக்கதும் சுத்தப் பயனற்றதுமான தூதினால் அந்தப் புதிய கம்பெனி கிட்டத்தட்ட குலைந்தே போய்விட்டது.

**1702.** "பழைய லண்டன் கம்பெனி" யானது "புதியது"டன் இணைக்கப்பட்டது; இப்பொழுதிலிருந்து, கிழக் கிந்தியாவுடன் வர்த்தகம் செய்யும் வியாபாரிகளின் ஐக்கியக் கம்பெனி என்ற பெயருடன் ஒரே ஒரு கம்பெனிதான் அங்கு இருந்தது.

அதே ஆண்டில், * மீர்ஜாபர் என்ற ஒருவரை முர்ஷித் குலி கான் என்ற பட்டப் பெயருடன் அவுரங்கசீப் திவானாக நியமித்தார். (ஒரு மாகாணத்தின் திவான் என்பவர் மொகலாயக் கவர்னரின் ஒரு அதிகாரி; வரிவசூலை மேற்பார்வை செய்தல், தனது மகாணத்தின் எல்லைகளுக்குள் எழும் எல்லா சிவில் வழக்குகளையும் விசாரித்தல் ஆகியவற்றை அவர் செய்ய வேண்டும்.) [பிறகு மீர் ஜாபர்] வங்காளம், பீஹார், ஒரிசா ஆகியவற்றின் சுபாதார் ஆனார்.

---

* 1704 என்று வங்காள நிலவரி வரலாற்றில் ஆராய்ச்சிகள். கல்கத்தா, 1926, என்ற தனது நூலில் ராம்ஸ் பாத்தம் கூறுகிறார்;

சுபாதார் என்பவர் ஒரு ஜில்லாவின் அரசப் பிரதி நிதி; இவ்விரு அதிகாரிகளாகவும் ஒரே நபர் பல சமயங் களில் நியமிக்கப்பட்டார்.)

'மனதுக் கொவ்வும் ஆங்கிலேயர்களை' இந்தக் கனவான் வெறுத்து, அவர்களது வர்த்தகத்தில் தலையிட்டு. தொடர்ந்து அவர்களுக்கு இடர் விளைத்தார். (1715 ல் அவருக்கு எதிராக பரூக்ஷெரிட்ம் அவர்கள் புகார் செய் தனர்; இவர் ஆங்கிலேயர்களுக்கு நன்கொடையாக 38 நகரங்களையும்! ஒவ்வொரு சரக்குப் பொதியின் மீதும் விதிக்கப்படும் வரியிலிருந்து விலக்கை ஒரு தஸ்தக்-அல்லது அதிகார பூர்வமான அனுமதிச் சீட்டு மூலமாகவும் தந்தார்; இவ்வனுமதிச் சீட்டு, அதிகாரிகள் சரக்குப் பொதிகளைச் சோதனை செய்வதை நீக்கியது.)

முர்ஷித்குலிகான் பிரசித்தி பெற்ற ரெவின்யூ அதிகாரி; கொடுமையான வசூல் முறை, அடக்கு முறை ஆகிய எதற்கும் தயங்காத முறைகளினுல், வங்காள வருவா யில் ஒரு பெரும் உபரியை அவர் உண்டாக்கினுர்; இவ் வுபரி ஒழுங்காக டெல்லிக்கு அனுப்பப்பட்டது. இவர் மாகாணத்தை சக்லாக்களாகப் பிரித்தார்; அவை ஒவ் வொன்றிலும் முர்ஷித்குலிகானுல் நியமிக்கப்பட்ட ஒரு தலைமை வசூல் அதிகாரி இருந்தார்; அவர் வரிவசூலித்தலை ஏலத்துக்கு விட்டார். பிறகு இந்த அதிகாரிகள் தங்களுடைய பதவிகளை வழிவழி வருபவையாகச் சாமர்த்தியமாகச் செய்து விட்டனர்; "ஜமீன்தாரி ராஜாக்கள்" என்ற பட்டத்தையும் வைத்துக்கொண்டனர்.

---

பட்டத்து வாரிசாக முவாசம் அவுரங்கசீப்புக்குப் பின் பட்ட மேறினுர்.

## (7) பானிப்பட்டுப் பெரும் போர்வரை அவுரங்கசீப்புக்குப் பின் ஆண்டவர்கள் ; மொகலாய அதிகாரத்தின் அழிவு, 1707—1761

(1) **1707—1712.** பகதுர்ஷா (இப்பட்டத்தை முவாசம் மேற்கொண்டார்.)--[அவுரங்கசீப்பின்] இரண்டாவது உயிருடனிருந்த குமாரர் **இளவரசர்** அசீம் என்பவரும், மூன்றுமவரான இளவரசர் **காம்பக்ஷ்** என்பவரும் கலகம் செய்தனர் ; இருவரும்—ஒவ்வொருவரும் தான் முவாசத்துடன் இட்ட போரில்—தோற்கடிக்கப்பட்டு, கொல்லப்பட்டனர். **மகாராஷ்ட்டிரர்களுக்கு** எதிராக **பகதூர்** தனது சக்தியைத் திரட்டி, அவர்களது தலைவர்களுக்கிடையில் உட் பிளவுகளைத் தூண்டிவிட்டு, இறுதியில் அவர்களுக்குப் பாதகமான ஒரு உடன்படிக்கையை அவர்களின்மேல் சுமத்தினர்.

**1709.** தனக்குச் சாதகமான உடன்படிக்கைகளை அவர் உதயபூர், மார்வார், ஜெய்பூர் ஆகிய ராஜபுத்திர அரசுகளுடன் செய்து கொண்டார்.

**1711.** அவர் சீக்கியர்களுக்கு எதிராகப் படையெடுப்பை மேற்கொண்டு, அவர்களை பஞ்சாபிலிருந்து குன்றுகளுக்கிடையில் விரட்டியடித்தார்.—வேறுயே நிற்கும் தெய்வக்கொள்கையுடைய இந்துக்கள் (deistical Hindus-மொ.ர்.) அடங்கிய ஒரு மதக் குழுவினர் தான் சீக்கியர்கள்; அக்பர் காலத்தில் தோன்றினர் ; "ஸ்தாபகரின்" பெயர் நானக் ; வகுப்புக்களாக அமைந்து, தங்களது குருக்களால் (ஆன் மீகத் தலைவர்களால்) இயக்கப்பட்டு, முஸ்லீம்கள் தங்களைத் துன்புறுத்தத் தொடங்கி, **1606**-ல் தங்களது தலைவரைக் கொலை செய்தவரை அமைதியாக இருந்தனர். பிறகு முகம்மதியர்களைச் சேர்ந்த எதையும் வெறியுடன் வெறுப்பவர்களாக அவர்கள் ஆயினர் ;

புகழ் பெற்ற **குருகோவிந்தின்** கீழ் அவர்கள் ராணுவ பலத்தை உண்டாக்கி, பஞ்சாபைத் தம் வசப்படுத்தினர்.

**1712.** பகதூர் 71-வது வயதில் **இறந்தார்;** நிறைய சண்டைகள், பல கொலைகள் ஆகியவைகளுக்குப் பின்னர், முழு அறிவு முதிர்ச்சி பெறாத அவரது குமாரர்—

(2) **1712—1713—ஜெகாந்தர்** ஷா அரியணை யேறினார்; அவர் **சுல்பிகார் கானைத்** தனது அமைச்சராக்கினார் ; முன்னர் பிரபுக்களால் வகிக்கப்பட்ட பதவிகளுக்கு அடிமைகளை உயர்த்தினார். அவரது **உடன் பிறந்தார் பரூக்ஷேர்—**

**1713**—வங்காளத்தில் புரட்சி செய்து, பேரரசுப் படையை ஆக்ராவுக்கருகில் தோற்கடித்து, பிறகு ஜெகாந்தர் ஷாவையும் சுல்பிகார்கானையும் கொன்றார்.

(3) **1713—1719.** **பரூக் ஷேர்.** பிரபுக்களில் அவருக்கு முக்கிய உடந்தைகளாக இருந்த **சையது அப்துல்லா, சையது ஹுசைன்** என்ற இருவர், தங்களுக்கு அரசவையில் உயர்ந்த பதவிகளைத் தரும்படி அவரை நிர்ப்பந்தப் படுத்தினர் ; அவர்களைக் கண்டு அவர் உள்ளுக்குள் பயந்தார். ஹுசைன் தக்காணத்துக்குச் சென்றார்; அங்கு **கவர்னர் தௌத்,** பேரரசரால் இரகசியமாகத் தூண்டப்பட்டு அவரை எதிர்த்தார் ; ஆனால் வெற்றி கிட்டும் வேளையில் அவரால் கொல்லப்பட்டார். ஹுசைன் பிறகு மகாராஷ்ட்டிரர்களுக்கு எதிராக[ப் போருக்குச் சென்று], எதையும் சாதிக்காமல் தோற்று. இறுதியில் இளைஞரான **ராஜா சாஹுவுடன்** சமாதானம் செய்து கொண்டார்; இச்சமாதானம் இழிவானது என்று கருதி, அதை பரூக்ஷேர் ஏற்க மறுத்துவிட்டார்.

**1715.** (பக். 56 *ஐப் பார்க்க) **கல்கத்தாவிலிருந்த இங்கிலீஷ் வியாபாரிகள், அரசப் பிரதிநிதியாகிய முர்ஷித் குலிகானை** எதிர்த்து டெல்லிக்குத் தூது அனுப்பினர்; தூதுவர்களில் ஒருவர் ஹாமில்டன்: இவர் மொகலாயப் பேரரசரின் நோயைக் குணப்படுத்தி, அதன் பயனாக, **இத்யாதி, இத்யாதி, பக். 56-ஐப் பார்க்க.**

**1719.** **ஹுசைன்** "பயமுறுத்தப்பட்ட" சையது **அப்துல்லா** வால் தக்காணத்திலிருந்து அழைக்கப்பட்டு, **பரூக்ஷேரை** அந்தப்புரத்தில் தனது கையாலேயே கொலை செய்தார். அவரது மரணத்திற்குப் பின் முதலிரண்டு மாதங்களில், இக்கலகக்காரப் பிரபுக்கள் வயதுக்கு வராத இரு அரச குமாரர்களைப் பதவியிலமர்த்தி, பின் விலக்கினர்; கடைசியாக **முகம்மது ஷா** என்ற ஆளும் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு அரச குமாரரை நியமித்தனர்.

(4) **1719—1748. முகம்மது ஷா,** உடனே பற்பல கிளர்ச்சிகள் தோன்றின.

**1720.** **ஆசப் ஜா** என்ற **மாளவத்தின் கவர்னர்** தன்னைச் சுதந்திர அரசராக அறிவித்துக் கொண்டார்.

(அவரது உண்மைப் பெயர்: **சீன் கிலிச் கான்**; அவுரங்கசீப்புக்குப் பிடித்தமான ஒரு அதிகாரியான **காசியுதீன்** என்ற ஒரு **துருக்கியப்** பிரபுவின் குமாரர்; இவர் முதலில் தக்காணத்துக்கும் பின்னர் மாளவத்துக்கும் கவர்னரானார்; **நைசாம்—உல்—முல்க்** எனவும் அழைக்கப்பட்டார்; இவரது பின்தோன்றல்கள் **தக்காணத்து நைசாம்களாக** ஆயினர்.) **சையதுகளால்** தலைமை தாங்கப்பட்ட பேரரசுப் படைகளை **பர்ஹான்பூர், பாலபூர்**

* இப் பதிப்பில் பக். 82

என்ற இடங்களில் இவர் தோற்கடித்தார்; இவை களினுல் அச்சமுற்று, பிறகு சீக்கிரமே தனது முதலமைச்சராக **ஆசப் ஜாவை** மொகலாயப் பேரரசர் நியமித்தார்; ஆனுல் பின்னர் அவரைத் தொல்லையாகக் எனவே—

**1723**—* [ஆசப் ஜா] **தக்காணத்துக்கு** விலகிச் சென்ருர்.—**சையது ஹுசைன்** ஒரு கல்முக்கால் (பேரரசரின் ஆணைகளின்படி, என்று தோன்றுகிறது) கொலை செய்யப்பட்டார்; (சையது) **அப்துல்லா** ஒரு புதிய பேரரசரை நியமிக்க முயன்ருர்; தோற்கடிக்கப்பட்டு, சிறை வைக்கப்பட்டார்.—**அச் சமயத்தில் ராஜபுத்திரர்கள் குஜராத்தைப் பேரரசிலிருந்து பறித்துக் கொண்டனர்.**

**1725.** **முகம்மது ஷா, ஹைதராபாத்தின் கவர்னரான** முபரிஸ் என்பவரை ஆசப் ஜாவுக்கு எதிராகச் செல்லும்படி தூண்டி விட்டார்; அவரை ஆசப் ஜா தோற்கடித்துக் கொன்று, அவரது தலையை டெல்லிக்கு அனுப்பினுர்.

**1720.** **பாலாஜி விஸ்வநாத்தின்** மரணம்; இவர் **ராஜா சாஹு**வின் அமைச்சராயிருந்து அவரது பேரரசைப் பலப்படுத்தியவர்; **முதல் "பேஷ்வா"** இவர்தான்; மகாராஷ்ட்டிர ராஜாவின் அமைச்சர் வைத்துக்கொண்ட பட்டம் இது. (பின்னர் உண்மை அதிகாரம் அனைத்தையும் பேஷ்வாக்கள் பிடித்துக் கொண்டனர்; **ஆனுல் அரச** குடும்பமோ, முக்கியத்துவத்தை இழந்து, நாளடைவில் **வெறும் "சதாரா ராஜாக்கள்"** ஆகி, **சதாராவில் அமைதியாக வசித்து வந்தது.**) இவருக்குப் பிறகு ஆற்றலும் சுறுசுறுப்பும் மிகுந்த இவரது குமாரர் **பாஜி ராவ்** (இவர் பேஷ்வாக்களில் தலை சிறந்தவரும், சிவாஜியைத் தவிர மகாராஷ்ட்டிரர்களிலேயே மிகத் திறமை மிக்கவரும்

---

* *1724 என்கிருர் எல்பின்ஸ்டன்.*

ஆவார்) இப்பதவிக்கு வந்தார்; மொகலாயப் பேரரசையே தாக்கும்படி சாஹுவுக்கு இவர் அறிவுறுத்தினர். எல்லா அதிகாரத்தையும் சாஹு இவரிடமே விட்டு விட்டார். பாஜி ராவ் மாளவத்தைச் சூறையிட்டார்.

**1722.** * ஹைதராபாத்தில் (அப்பொழுது மொகலாயப் பேரரசரின் கவர்னராக) இருந்த ஆசப் ஜாவைத் தாக்கி, அவரைக் குறிப்பிடத் தக்க வகையில் தோற்கடித்தார்.—அதற்கு மேலும், குஜராத்தைக் கொள்ளையிட்டார்.

அக்காலத்தில் மகாராஷ்ட்டிரச் சேனைகளின் தலைவர்கள்தான், மூன்று பெரிய தக்காணத்து அரச குடும்பங்களை ஸ்தாபித்தவர்கள்: உதாஜி புவார், மல்ஹார் ஹோல்கார், ராணுஜி சிந்தியா.

**1733.** **பரஸ்பர உதவிபற்றி பாஜிராவுக்கும் ஆசப் ஜாவுக்குமிடையில் இரகசிய ஒப்பந்தம்.

**1734.** மாளவமும் பண்டேல்கந்தும் மகாராஷ்ட்டிரர்களால் கைப்பற்றப்பட்டன. இந்த வெல்லப்பட்ட ஜில்லாக்களை அவர்களுக்கே பேரரசர் கொடுத்தார்; மேலும் ஆசப் ஜாவின் பிரதேசங்களின் மீது சௌத் வசூலிக்கும் உரிமையை அவர்களுக்குத் தந்தார்; இது [ஆசப் ஜாவுக்கும் பாஜி ராவுக்குமிடையிலான] நேச உடன்படிக்கையை முறித்து விட்டது; பிறகு அவருடைய விசுவாசத்திற்கே ஆசப் திரும்பி வந்துவிட்டார்.

**1737.** பாஜி ராவ் யமுனைக்கப்பாலுள்ள பிரதேசம் முழுவதையும் நாசப்படுத்தி, திடீரென டெல்லிக்கு முன் தோன்றினார்; ஆனால் தாக்காமல் திரும்பிச் சென்று விட்டார்.

* 1727 என்கிறார் எல்பின்ஸ்டன்.

** 1731 என்கிறார் பர்கஸ்.

ஆசப் ஜா அவருக்கெதிராகப் படைநடத்திச் சென்று, போபால் [கோட்டைக்கு] அருகில் தோற்கடிக்கப்பட்டு, நர்மதைக்கும் சம்பலுக்கும் இடையிலுள்ள பிரதேசம் முழுவதையும் மகாராஷ்ட்டிரர்களுக்குக் கொடுக்கும்படி நிர்ப்பந்தப் படுத்தப்பட்டார். அதன் மூலமாக மகாராஷ்ட்டிரர்கள் வடக்கில் தங்களது அதிகாரத்தை நிறுவி விட்டார்கள்.

**1739—1740.** இந்தியாவை நாதிர்ஷா படையெடுத்தார். (இவர் ஆதியில் ஒரு கொள்ளைக்காரர்; தமாஸ்ப் என்ற பாரசீக ஷா மன்னனை கில்ஜிக்கள் நாட்டிலிருந்து விரட்டிய பொழுது, துரத்தப்பட்ட அவருடன் இவர் சில சகாக்களுடன் சேர்ந்து கொண்டார். தமாஸ்ப் தனது அரியணையை மீண்டும் பெற நாதிர் உதவி செய்து, பிறகு அவரை விலக்கி விட்டு, தன்னையே ஷாவாக ஆக்கிக் கொண்டார். இவர் காண்டகாரையும் காபூலையும் தன் கீழ்க் கொணர்ந்து, பிறகு இந்தியாமீது படை யெடுத்தார்.)

**1739.** நாதிர் ஷா லாகூரைப் பிடித்து, பிறகு கர்னல் என்ற இடத்தில் முகம்மது ஷாவைத் தோற்கடித்தார். பேரரசர் பணிந்து, நாதிரைப் பின்பற்றி டெல்லிக்கு வந்தார். பல பாரசீகர்களை டெல்லியில் இந்துக்கள் கொன்றனர்; இதன் மேல் இந்துக்கள் பெருவாரியாகப் படுகொலை; நாதிரின் கொடுங் கொள்ளையும் பலாத்காரமும்.

**1740.** நாதிர், செல்வங்களைச் சுமந்துகொண்டு, மொகலாயப் பேரரசை ஆட்டங் கண்டு வீழ்ச்சியுறும்படி விட்டு விட்டுத் தாயகம் [திரும்பினார்]. அதே ஆண்டில், மகாராஷ்ட்டிரர்கள் தாக்குதலை மீண்டும் தொடங்கினார்கள்; பேஷ்வா பாஜி ராவ் இறந்தார்; அவருக்குப் பிறகு அவரது குமாரர் பாலாஜி ராவ் பதவி ஏற்றார்.

**1743.** பாலாஜி ராவ் மாளவத்தின் மீது படை யெடுத்துச் சென்று, டெல்லி அரசவையிடம் தன் கோரிக்கைகளை மீண்டும் விடுத்தார்; கிளர்ச்சி செய்திருந்த ரகுஜி கானுக்கு உரிய மாளவத்தைப் பாலாஜி ராவுக்குப் பேரரசர் கொடுத்தார்.

**1744.** பாலாஜி ரகுஜியைத் தோற்கடித்து, விரட்டி யடித்து விட்டுப் பிறகு சதாராவுக்குத் திரும்பி வந்தார்.

**1744.** * அகமது கான் துரானியின் முதல் படையெடுப்பு. நாதிர் ஷா கொலை செய்யப் பட்டார்; அப்தாலி அல்லது (அது பின்னர் அழைக்கப்பட்டபடி) துரானி என்ற ஆப்கானி யக் குலம் அகமது கானின் தலைமையில் பஞ்சாபைக் கைப் பற்றியது; முகம்மதுவின் குமாரர் அகமது ஷாவால் அவர் தோற்கடிக்கப்பட்டார்.

**1748.** ஆசப் ஜா இறந்தார்; முகம்மது ஷாவும் தான்; அவரது குமாரர் அகமது ஷா அரியணை ஏறினர்.

**1749.** ராஜா சாஹு காலமானர்; மூத்த ராஜா ராம், அவரது மனைவி தாராபாய் ஆகியோரது பேரனை ராஜா ராமை பாலாஜி அரியணையில் அமர்த்தினர்.

(5) **1748—1754.** அகமது ஷா. ஔதிலிருந்த [ஔதுக்கு அருகிலிருந்த] ஆப்கானியர்களாகிய ரோகில்லர்களுடன் அவர் சீக்கிரம் விரோதம் கொண்டார். (ஆப்கானியக் குலத்தினரான ரோகில்லர்கள் காபூலிலிருந்து குடி பெயர்ந்து வந்து—ரோகில்லா இமய மலைகள் எனப் படுகின்ற வடமேற்கு இமய மலைகளுக்கு முதலில் வந் திருக்க வேண்டும்—17-ம் நூற்றுண்டின் பின் பகுதியில் டெல்லிக்கு வடகிழக்குப் பகுதியில், கோக்ராவுக்கும் கங்கைக்கு மிடையில், தாங்கள் ரோகில் கந்து என்று

* 1748 என்கிறுர் எல்பின்ஸ்டன்.

அழைத்த பகுதியில் தங்கினர்.) அவரால் அவர்களைச் சமாளிக்க முடியவில்லை; அவர்கள் அலகாபாத்துள் வலிந்து நுழைந்தனர்; எனவே முதலமைச்சர் சப்தர் ஜங், அவர்களுக்கு எதிராகத் தனக்கு உதவும்படி மகாராஷ்ட்டிரர்களை அழைத்தார்; மகாராஷ்ட்டிரர்கள் [ரோகில்லர்களை] எதிர்த்து அப்பால் விரட்டினர்; அவர்களது உதவிக்குக் கைம்மாறாக சிந்தியா, ஹோல்கார் என்ற மகாராஷ்ட்டிரத் தலைவர்களுக்கு ஜாகீர்கள் பரிசளிக்கப்பட்டன.

**1753.** * பஞ்சாபின்மீது அகமது கான் துரானியின் இரண்டாவது படையெடுப்பு; அது அவருக்கு அமைதியாகக் கொடுக்கப்பட்டது. அவர் ஷா என்ற பட்டமேற்றார்.

**1754.** காசியுதீன்—ஆசப் ஜாவின் மூத்த [மகனுடைய] மகன்—என்பாருடன் மொகலாயப் பேரரசர் விரோதங் கொண்டிருந்ததால், அவர் பேரரசைப் பிடித்து, பேரரசரின் கண்களைக் குருடாக்கி, பதவியிலிருந்து விலக்கிவிட்டு, ஆளும் குடும்பத்தைச் சேர்ந்த அரச குமாரர்களில் ஒருவரை—

*(6)* **1754—1759**—ஆலம்கீர் II (அவுரங்கசீப், ஆலம்கீர் I என்று தன்னை அழைத்துக் கொண்டார்) என்ற பட்டத்துடன் [பேரரசராக] அறிவித்து, தன்னையே அவரது அமைச்சராக்கிக் கொண்டார்; காசியுதீன் வெறுக்கத்தக்க முறையில் ஆண்டார்; அவரைக் கொல்ல மக்கள் பல முயற்சிகள் செய்தனர்; இதே முதலமைச்சர்—

**1756**—அகமது ஷா துரானி [யால் நியமிக்கப்பட்ட பஞ்சாப் கவர்னர்] அவர்களின் குமாரர் ஒருவரை நயவஞ்சகமாகப் பிடித்துக் கொண்டார்; அகமது ஷா துரானி

* *1751 என்கிறார் எல்பின்ஸ்டன்.*

டெல்லிக்கு வந்து, அதைச் சூறையிட்டு, **லாகூருக்குத்** திரும்பியதும்—

**1757—காசி, மகாராஷ்ட்டிரர்களை அழைத்து, அவர்களது உதவி யுடன் டெல்லியை மீண்டும் பிடித்துக் கொண்டார்.**

**1758. ரகோபா** என்ற மகாராஷ்ட்டிரத் தலைவர் பஞ்சாபை அகமது ஷா துரானியிடமிருந்து பிடித்து, **இந்துஸ் தானம் முழுவதையும்** மகாராஷ்ட்டிரர்களின் ஆட்சி யின் கீழ்க் கொண்டு வருவதற்குக் காசியுதீனுடன் சதி செய்தார்.

**1759. காசியுதீன் ஆலம்கீர் II-**ஐக் கொலை செய்தார். **உண்** மையில் ஏதோ சிறிதளவாவது அதிகாரத்தைப் பெற் றிருந்த கடைசி மொகலாயப் பேரரசர் இவர்தான்.

**1760. பேஷ்வாவின்** படைகளை அப்பொழுது தலைமை தாங்கி நடத்தி வந்த **சதாசிவ பாவோ** என்ற மகாராஷ்ட்டிரத் தலைவர் ஒருவர் (டெல்லியை வெல்வதற்காகப் பெரும் தயாரிப்புகளைச் செய்து, பின் வடக்கு நோக்கிப் படை யுடன் வந்து) **டெல்லியைப் பிடித்தார். உடனே ஆப்கா னிய** [ரோகில்லா]த்—**தலைவர்கள் அகமது ஷா துரானி** யின் தலைமையில், பெரு மழைக் காலத்தில் யமுனை யைக் கடந்தனர்; அச்சமயம் **சதாசிவ பாவோவும் பானிப்பட்டில்** பெரும் படையுடன் வந்து நின்றார்; இந்தியாவின் தலைநகரை வெல்லுவதில் ஒவ்வொன்றும் முனைந்து, 'படையெடுப்பாளர்களின் இரண்டு பிரம் மாண்டமான சேனைகளும் அங்கு ஒன்றை ஒன்று எதிர்ந்தன.

**ஜனவரி 6, 1761. மூன்றும் பானிப்பட்டு யுத்தம். சதாசிவ பாவோ** உடனே **போர்**செய்யவேண்டுமென்றும், இல்லை யேல் மகாராஷ்டிரர்கள் கலைந்து சென்று விடுவர் என்றும் அந்த நாளில் மகாராஷ்டிரத் தலைவர்கள்

அவரிடம் கூறினர். (அப்பொழுது வரை இரண்டு சேனைகளும் அரண் அமைந்த முகாம்களிலிருந்து ஒன்றை ஒன்று எதிர்த்து, சதா ஒன்றை ஒன்று தொந்திரவு செய்து கொண்டும், சப்ளைகளைத் துண்டித்துக் கொண்டும் இருந்தன; பட்டினியாலும் நோயாலும் மகாராஷ்டிரர்கள் கடுந் துன்பப்பட்டார்கள்.) சதாசிவா படையுடன் வெளியே வந்தார்; **கடும் போர்;** மகாராஷ்டிரர்கள் அந்நாள் போரில் கிட்டத்தட்ட வெற்றி பெற்றுவிட்டார்கள்; ஆனால் அப்பொழுது தாக்கும்படி **தனது மைய அணிக்கு அகமதுஷா** துரானி உத்தரவிட்டு, அதே சமயத்தில் தனது இடது பாரிசம் மகாராஷ்டிரர்களின் வலது பாரிசத்தைக் கடந்து சென்று, அதைத் தாக்கும்படி செய்தார். இப் படை இயக்கமானது இறுதியான பயன் [தந்தது]. தங்களது படை கிட்டத்தட்ட அழிக்கப்பட்டு, மகாராஷ்டிரர்கள் அணிகுலைந்து ஓடினர்; அவர்கள் சுமார் 2,00,000 பேர்களைப் போர்க்களத்தில் இழந்தனர் (என்று தோன்றுகிறது): அவர்களது துருப்புக்களில் எஞ்சியிருந்தவர்கள் நர்மதைக்கு அப்பால் பின் வாங்கினர்.—**அகமதுஷா**வின் படையும் கூடப் போரில் மிகவும் சின்னாபின்னப் பட்டுப்போனதால், வெற்றியின் பயன்களைப் பெறாமல் அவரும் பஞ்சாபுக்குத் திரும்பினார்.

**டெல்லிஆளற்றுக்** கிடந்தது; அதை ஆள அங்கு ஒருவருமில்லை; சுற்றியிருந்த அரசாங்கங்கள் அனைத்தும் சிதைந்து கிடந்தன; **இந்த அடியிலிருந்து மகாராஷ்டிரர்கள் எப்பொழுதும் மீளவேஇல்லை.**

**பானிப்பட்டுப் போருக்குப் பிறகு நாட்டின் நிலை :**

மொகலாயப் பேரரசு முடிந்தது; பெயரளவிலான் பேரரசர் **அலிகௌகர் பீஹாரில்** அலைந்து கொண்டிருந்தார்.—மகாராஷ்டிரர்களின் **பேஷ்வா பாலாஜிராவ்** துயரத்தால்

மடிந்தார்; அவரது அதிகாரம் நான்கு பெரிய தலைவர்களிடையில் பங்கிடப்பட்டது; குஜராத்தில் கெய்க்குவார்; நாகபுரிராஜா (பான்ஸ்லே), ஹோல்கார், கடைசியில் சிந்தியா. ஹைதராபாத்தில் நைசாம் சுதந்திர அரசராக ஆனார்; ஆனால் அவரது அதிகாரமானது இழப்புக்களினால் குறைவுற்றும், பிரெஞ்சுக்காரர்கள் அவருக்காகக் கையாண்ட பாதுகாப்புக் கொள்கையினால் பலவீனமுற்றும் இருந்தது.

1761-ல் பானிப் பட்டு யுத்தம் நடந்த அந்த ஆண்டில், தென்னிந்தியாவிலிருந்து பிரெஞ்சுக்காரர்களை ஆங்கிலேயர்கள் விரட்டி விட்டனர். கூட் முற்றுகை யிட்டிருந்த புதுச்சேரியை ஜனவரி16, 1761ல் பிரெஞ்சுக்காரர்கள் கைவிட்டனர்; கூட் அந்நகரின் கோட்டையை இடித்துத் தள்ளினார்; இவ்வாருக அடிச் சுவடு ஒன்றுமின்றி இந்தியாவில் பிரெஞ்சு அதிகாரம் அழிக்கப்பட்டது.

கர்னாடக நாவாப் சென்னையின் ஆங்கிலேயக் கவர்னரது தயவிலேயே முழுதும் வாழ்ந்தார். ஔத்நவாப், பரந்த பிரேதசங்களுடனும் சிறந்த சேனையுடனும், சுதந்திரமானவராகி விட்டார்; ராஜபுத்திரர்கள் சிறந்த வீரர்கள். ஆனால் சிதறிக்கிடந்தனர். ஒரு ஐக்கிய ராஜ புத்திரஅரசு என்பது கேள்விப்படாத தொன்ருயிருந்தது; ஜாட்களும் ரோகில்லர்களும் ஓரளவு முக்கியத்துவம் வாய்ந்த சக்திகளாயினர்; இவர்கள் பின்பு இந்திய வரலாற்றில் பிரதான பாத்திரம் வகித்தார்கள்.—மைசூரில் ஹைதர் அலி பெரும் அதிகாரம் வகித்தார்; சீக்கிரமே இவருடன் ஆங்கிலேயர்கள் தொடர்பு கொண்டனர். ஆங்கிலேயர்கள் அப்பொழுது இந்தியாவிலேயே மிகப் பெரிய சக்தியாக ஏற்கெனவே ஆகியிருந்தனர் எனலாம். இரு பெரும் பிரதேசங்களின் அரசர்களை— வங்காளம், பீஹார், ஒரிசாவின் சுபாதாரையும், கர்னாடக நவாபையும்—அவர்கள்

நியமித்திருந்தனர்; பிறகு சீக்கிரத்திலேயே, அவர்களது கூட்டாளியான நைசாம் அலி தனது சகோதரராகிய தக்காணத்து சுபாதாரைச் சிறை செய்து, அவரது அரியணையைக் கவர்ந்து கொண்டு, தென்னிந்தியா முழுவதையும் பிரிட்டிஷ் செல்வாக்கின் கீழ் வைத்தார். (பக். 68-ஐப் பார்க்க)* (தொடர்ச்சி, பக்84. ) **

## [இந்தியாவின் மீது செய்யப்பட்ட அந்நியப் படையெடுப்புகளின் கணக்கீடு]

**331.** கி. மு .மா அலெக்சாந்தரால் குர்திஸ் தானத்து மலைகளுக்கருகில் அர்பெலாப் போரில் டேரியஸ் கோடோமனஸ் இறுதியாகத் தோற்கடிக்கப்பட்டார்.

**327.** கி. மு. அலெக்சாந்தர் ஆப்கானிஸ்தானத்தை வென்று, பிறகு சிந்துவைக் கடந்து தட்சசீலம் என்ற நாட்டினுள் நுழைந்தார்; இந்துஸ்தானம் முழுவதையும் கனோஜிலிருந்து

---

* இங்கு குறிப்பிடப்படுகிற பகுதி பின்னால் வருகிறது.

** இங்கு தனது தேதிவாரியான குறிப்புகளைத் தொடர்ந்து கோவலேவ்ஸ்கியின் நூலிலிருந்து ஒரு சுருக்கத்தை மார்க்ஸ் தருகிறார்; அதன் அத்தியாயங்களுக்குக் கீழ்வரும் தலைப்புகளைத் தருகிறார்; (ச) முஸ்லீம் ஆட்சியின்கீழ் இந்தியாவில் விவசாயம் நிலப்பிரபுத்துவமயமாகும் போக்கு (பக். 62—67); (உ) பிரிட்டிஷ் ஆதிக்கமும், இந்தியச் சமுதாயச் சொத்தின்மீது அதனால் ஏற்பட்ட விளைவுகளும் (பக். 63—76). இந்த இரண்டு அத்தியாயங்களுக்கும் பிறகு, கோவலேவ்ஸ்கியின் நூலின் கடைசியில் உள்ள, அல்ஜீரியாவைப்பற்றிய இரண்டு அத்தியாயங்களின் சுருக்கம் தரப்படுகிறது. மார்க்ஸினுடைய நோட்டுப் புத்தகத்தின் 84ம் பக்கத்தில் இத் தேதிவாரியான குறிப்புகள் தொடரப் படுகின்றன.

ஆண்ட சிறந்த ராஜா **போரஸ்,** அல்லது புரு என்பவருக்கு எதிராக, தட்சசிலத்தின் மன்னர் அலெக்சாந்தருடன் ஒரு நேச உடன்படிக்கை செய்துகொண்டார்.

**326.** கி. மு. ஜீலம் அல்லது ஹைடாஸ்பஸ் நதியின் கிழக்குக் கரையில் அலெக்சாந்தரைப் போரஸ் எதிர்த்தார். எதிர் எதிரான ஒரு போரில் இந்துக்கள் தோற்கடிக்கப் பட்டனர்; ஆனால் இந்தியாவினுள் மேலும் முன்னேற அலெக்சாந்தரின் படை மறுத்தது; ஆகவே, பெரு எண்ணிக்கையான கப்பல்களில் தனது சேனை முழுவதையும் ஏற்றிக் கொண்டு, ஹைடாஸ்பஸ்ஸில் மிதந்து அலெக்சாந்தர் சிந்து நதிக்கு வந்தார்; அவர்—வழியில் கடும் சண்டைக்குப் பிறகு—சிந்து நதியின் முகத்துவாரத்தை அடைந்து, தனது படையை இரண்டு பகுதிகளாகப் பிரித்தார்; நியார்கஸின் தலைமையிலான ஒரு பிரிவு பாரசீக வளைகுடா வரை நீர் வழியாக வரும்படி உத்திர விடப்பட்டது; அலெக்சாந்தரோ மற்ற பிரிவுடன் நில வழியாகத் திரும்பினார்; முகம்மதியர்கள் வருமுன் இது தான் இந்தியாவின்மீதான கடைசிபடையெடுப்பாகும்.*

இந்துஸ்தானத்திலிருந்த பழைய அரசுகளில் வங்காள அரசு **1203** கி. பி. யில், 6-வது அல்லது சேன வம்சத்தின் ஆட்சியின் கீழ், முகம்மதியர். களால் (கோர் வம்சம், ஷெகாபுதீன்) அழிக்கப்பட்டது.

**1231.** மாளவ அரசு முகம்மதியர்களால் (டெல்லியின் அடிமை அரசர்களில் ஒருவரான ஷம்சுதீன் அல்டமிஷ்ஷால்) அழிக்கப்பட்டது.

*இக் கூற்று எல்பின்ஸ்டனின் நூலிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது; கி. மு. 4 ம் நூற்றாண்டுக்கும் கி. பி. 7 ம் நூற்றாண்டுக்குமிடையில் யூச்சிகள், சகர்கள், ஹூணர்கள், மற்றும் பல குலங்கள் இந்தியாவின் மீது படையெடுத்தது பற்றி எல்பின்ஸ்டனுக்குத் ஒன்றும் தெரியாது போல் தோன்றுகிறது.

**1297.** குஜராத் அரசு முகம்மதியர்களால் (அலாவுதீன் கில்ஜியால்) அழிக்கப்பட்டது; இதன் அரசர்கள் ராஜபுத்திரர்கள்; இவ்வரசு கிருஷ்ணனுல் நிறுவப்பட்டது என்கிறது புராணம்.

**1193.** கனேஜ் அரசு (1017ல், இதன் தலைநகரை மாமூது கசினி கைப்பற்றிய பொழுது, இவ்வரசு மிக்கச் செல்வமுற்றிருந்தது), (கியாசுதீனின்—கோர் வம்சம்—சகோதரர் ஷெகாப் என்பவரால்) அழிக்கப்பட்டு, இதன் தலைநகர் சூறையாடப்பட்டது. ஆண்டு கொண்டிருந்த அரசர் சிவாஜ் என்பவர் மார்வாரில் ஜோத்பூருக்கு ஓடிச் சென்று, இப்பொழுது மிக்கச் செல்வம் படைத்தவைகளில் ஒன்றுக இருக்கும், ஒரு ராஜபுத்திர அரசை நிறுவினுர்.

**1050.** டெல்லிச் சிற்றரசு; அப்பொழுது மிகவும் சிறுமையுற்றிருந்தது; அஜ்மீரத்து மன்னர் விசால் என்பவரால் வெல்லப்பட்டது.

**1192.** சிறுமையுற்றிருந்த அஜ்மீர் அரசும், அதன் மீது சார்ந்திருந்த டெல்லியும் முஸ்லீம்களால் (கோர்வம்சத்தைச் சேர்ந்த கியாசுதீனின் தலைமையில்) கவிழ்க்கப்பட்டன. பழைய அரசுகள்—மேவார், ஜெய்சால்மீர், ஜெய்பூர்—இன்னும் நிலைத்திருக்கின்றன; மேவார் அரசகுடும்பம் இந்தியாவிலேயே மிகப் பழமையானது.

**1205.** சிந்து, ஷெகாபுதீன் கோரியால் வெல்லப்பட்டு முஸ்லீம்களின் கையில் சிக்கியது. (325 [கி. மு.] ல், மா அலெக்சாந்தரின் காலத்தில், இது ஒரு சுதந்திர அரசு; பின்னர் பிரிக்கப்பட்டு, மீண்டும் ஐக்கியமடைந்தது; 711ல் முகம்மதியர்களால் படையெடுக்கப் பட்டது; இவர்கள், சுமேராக் குலத்தின் தலைமையிலிருந்த ராஜபுத்திரத்தலைவரால் தோற்கடித்துவிரட்டப்பட்டனர்.)

**1015. காஷ்மீரம் மாமூது கசினியின்** *கையில் சிக்கியது.* *(***மகத அரசு** *மிகமிகச் சுவாரசியமான ஒன்று. அதன்* **பௌத்த அரசர்கள் விரிந்த** *அதிகாரம் பெற்றிருந்தனர்; பல* **ஆண்டுகள்** *அவர்கள்* **க்ஷத்திரிய ஜாதியைச்** *சேர்ந்திருந்தனர்; ஆனால் கடைசியில்* **சூத்திர** *ஜாதி—மனுவின் நான்கு* **ஜாதிகளில்** *நான்காவதும் மிகவும் தாழ்ந்தது மானது—யைச் சேர்ந்த* **ஒருவர், சந்திரகுப்தர்** *என்றவர்—சந்திர கோட்டஸ் என்று கிரேக்கர்களால் கூறப்பட்டவர்—மன்னனைக் கொன்று, தன்னையே மன்னனாக்கிக் கொண்டார்; அவர்* **மா அலெக்சாந்தரின்** *காலத்தில் வாழ்ந்தார். பின்பு* **மேலும் மூன்று சூத்திரவம்சங்களை** *நாம் காண்கிறோம்; இவை* **கி. பி. 436ல் ஆந்திர வம்சம்** *என்ற ஒன்றுடன் முடிவுற்றன.* **மாளவத்து அரசர்களில்** *ஒருவர்* **விக்கிரமாதித்யர்;** *இந்துக்களின் பஞ்சாங்கம் இன்னும் அவரது சகாப்தத்தின் தேதியைத் தான் கொண்டிருக்கிறது; அவர் கி. மு. 58ல் ஆண்டார்.)*

.................................................................

**பண்டைத்தக்காண அரசுகள். தக்காணத்தில்** *ஐந்து மொழிகள் உள்ளன: (1)* **தமிழ்; திராவிரப்** *பிரதேசத்தில், அதாவது* **தென்கோடியில்,** *பெங்களூர் வழியாக மேற்கு மலைத் தொடர்ச்சி நெடுகிலும்* **கோயம்புத்தூருக்கும் கள்ளிக்** *கோட்டைக்கும் கோடிட்டால் அவ்வெல்லைக்குள் அடங்கும் பகுதியில், பேசப்படுகிறது; (2)* **கன்னடம்** *தெலுங்கிலிருந்து தோன்றிய திசை மொழி;* **வடகன்னடத்திலும் தென்கன்னடத்திலும் பேசப்படுகிறது.** *(3)* **தெலுங்கு; மைசூரிலும்** *அதற்கு வடக்கிலுள்ள நாடுகளிலும் பேசப்படுகிறது; (4)* **மராட்டி; தேவநகரி லிபியில்** *எழுதப்பட்டு, கீழ்க்கண்ட எல்லைகளைக் கொண்டது;* **வடக்கில் சாத்பூராக்குன்றுகள்; தெற்கில்** *தெலிங்*

காறு எனப்படும் தெலுங்குநாடு; கிழக்கில் வர்தாநதி மேற்கில் குன்றுகள்; (5) ஒரியா; ஒரிசாவில் பேசப்படும் திருத்தமற்ற ஒரு திசைமொழி. ஒரிசாவுக்கும் மகாராஷ்டிர நாட்டுக்கு மிடையில் கரடுமுரடான ஒரு பிதற்றல் மொழி பேசும் கோண்டுகள் இருக்கின்றனர்.

ராமாயணம் அயோத்தி மன்னன் ராமனின் வீரச் செயல்களைப் புகழ்ந்து பாடுகிறது ; இவர் கி. மு. 1400 வாக்கில் வாழ்ந்ததாகக் கருதப்படுகிறது; காவியத்தின்படி, தக்காணத்தின் மீதும் இலங்கையின் மீதும் படையெடுத்துச்சென்ற இந்துக்களின் வெற்றித் தலைவர் இவராகும்; புராணத்தில் கூறப்படும் அப்படையெடுப்பின் பொழுது, தக்காணத்தில் பல நாகரிக முற்றிருந்த தேசங்களை இந்துக்கள் கண்டனர்: தமிழ் மொழி பேசிய தமிழர்களையும், தங்களது தாய் மொழியாகிய தெலுங்கு பேசிய, தெலிங்க நாட்டில் வசித்த மற்றவர்களையும் கண்டனர். மிக்கத் தொன்மை வாய்ந்தவை தமிழ் அரசுகளே.

கி. மு. 5-ஆம் நூற்றாண்டு வாக்கில் பாண்டிய அரசானது அப்பெயருடைய ஒரு இடையர் குல அரசரால் நிறுவப்பட்டது ; சிறு நாடு ; தலைநகர், பண்டை நகரமாகிய மதுரை ; பிரதேசம், கர்னாடகத்தின் தென் கோடியில் உள்ள இன்றைய மதுரை, திருநெல்வேலி மாவட்டங்கள்; கி. பி. 1736ல் அது ஆர்காட்டு நவாப்பால் வெல்லப்படும் வரை சுதந்திர அரசாக நிலைத்திருந்தது.

சோழ அரசு ; அங்கு தமிழ் மோழி பேசப்பட்டது; தலைநகர் காஞ்சீபுரம் ; 1678ல் வெங்கோஜி என்ற ஒரு மகராஷ்ட்டிரத் தலைவர், சோழ மன்னனை வென்று இன்றைய தஞ்சாவூர் ராஜாக்களுக்கு முதல்வராக ஆனார்.

சேர அரசு என்பது திருவாங்கூர், கோயம்புத்தூர், மலபாரின் ஒரு பகுதி ஆகியவை அடங்கிய ஒரு சிறு அரசு.

**கேரளம் :** **இந்துஸ்தானத்துப் பிராமணர்கள்** அங்கு **குடியேறி,** *அச்சாதியைச் சேர்ந்த சில பிரபுக்களால் ஆளப்பட்டது;* **மலபாரும் கன்னடமும்** *உள்ளடங்கியது; உட்குழுக்களாகச் சிறிது சிறிதாகப் பிளவுற்று, துண்டுகளாகச் சிதறியது;* **மலபார் சமோரின்களுக்கு (கள்ளிக் கோட்டை ராஜாக்களுக்கு)** *உரியதாயிற்று; கன்னடத்தை* **விஜயநகர ராஜாக்கள்** *கைப்பற்றினர்.*

**கன்னடம் : பாண்டிய, சேர** *அரசர்களிடையில் [பிரிக்கப்பட்டிருந்தது என்று] பண்டைய செய்திகள் கூறுகின்றன.* **பல்லாள ராஜாக்கள்** *என்ற சிறப்பும் வலிமையும் மிக்க ஒரு அரசகுடும்பம் அங்கு இருந்தது;* **அது** *முகம்மதியர்களால்* **(அலாவுதீன் கில்ஜி** *யின் தலைமையில்)* **1310**ல் *கவிழ்க்கப்பட்டது.*

**யாதவர்கள்** *கூறப்படுகின்றனர்; அவர்கள் வாழ்ந்த பகுதி தெளிவாகப் புலப்படவில்லை; அவர்களைப்பற்றி ஒரு தகவலும் தெரியவில்லை.*

**கன்னடத்துச் சாளுக்கியர்கள்;** **பீடாருக்கு மேற்கில் கல்யாணி** *யில் வாழ்ந்த ஒரு ராஜ புத்திரக் குடும்பம்;* **அதே** *குடும்பத்தின் இன்னொரு கிளை—*

**கலிங்கத்துச் சாளுக்கியர்கள் — கிழக்குத் தெலிங்கானா** *வில் ஒரு பிரதேசத்தை ஆண்டனர்; இது கடற்கரை ஓரமாக* **ஒரிசாவின் எல்லை** *வரை பரந்திருந்தது; இவர்கள்* **கட்டாக் ராஜாக்களால்** *கவிழ்க்கப்பட்டனர்.*

**ஆந்திரம்** *: தலைநகர்* **வாரங்கல்; பற்பல வம்சங்கள்** *(அவைகளில் ஒன்றாகிய* **கணபதி ராஜாக்கள்** *பெரும் பிரசித்தி பெற்றனர்) 400 ஆண்டுகளுக்கும் அதிகமாக ஆண்டன; பிறகு* **1332**ல் *முகம்மதியர்களால்* **(முகம்மது துக்ளக்கின் தலைமையில்)** *கவிழ்க்கப்பட்டன.*

**ஒரிசா :** இந்த ராஜ்யத்தைப் பற்றி முதன்முதலில் **மகாபார தத்தில்** கூறப்படுகிறது; நம்பக பூர்வமான மிகப் பழைய தேதி **கி. பி. 473** (படையெடுத்து வந்த "யவனர்கள்"* அப்பொழுது ஆண்ட குடும்பத்தால் விரட்டப்படுதல்) **முப்பத்தைந்து "கேசரி"** ராஜாக்கள் ஒருவர்பின் ஒருவராக ஆண்டனர்; கடைசியில் **1131ல் இவ்வம்சமானது கங்க வம்சத்தால் கவிழ்க்கப்பட்டது;** இந்த வம்சம் **1550** வரை, முகம்மதியர்களால் (**சலீம் ஷா சூர்—ஜலால் கான், பக். 49ஐப் பார்க்க** ** — என்பவரின் தலைமையில்) இந்நாடு கைப்பற்றப்படும் வரை, அரியணையிலிருந்தது.

**கடைசியாக, பெரிப்ளுஸின்** கிரேக்க ஆசிரியர், **தகரா, பிளிதானு** என்ற இரு பெரு நகரங்களைக் கடற்கரையிலிருந்த முக்கிய வியாபாரத் தலங்களாகக் கூறுகிறார்; அவைகளைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை; **கோதாவரி நதியருகில்** எங்கோ அவைகள் இருந்திருக்க வேண்டும் என ஊகிக்கப் படுகிறது,

நில் "புராதன" அரசுக்கு

**புரத்தையும்** பார்க்க (இது ஒரு குட்டி அரசு;

குறித்து தான் இந்திய **இலியட்** ஆகிய **மகாபாரத்தில்** [விவரிக்கப்படும்] போர் புரியப்படுகிறது; பண்டைய

---

* இந்தியாவிலிருந்த எல்லா அந்நியர்களும் அக்காலத்தில் **யவனர்கள்** எனப்பட்டனர். இந்த குறிப்பிட்ட இடத்தில் யார் குறிப்பிடப் படுகின்றனர் என்பது தெளிவாகத் தெரியவில்லை. நம்பகமாகத் தெரிகிற முதல்தேதி அசோகர் ஒரிசாவை வென்றது பற்றியது. இவர் ஏறத்தாழ கி. மு. 270 முதல் 232 வரை ஆண்டார்.

** இப்பதிப்பில் பக். 52ஐப் பார்க்க.

மதச் சிறப்பு பெற்ற நககம் **மதுரா; பாஞ்சாலம்** (பக்கம், 6) *

* மார்க்ஸ் இங்கும் பின்னரும் குறிப்பிடுவன, ராபர்ட் ஒெவெலின் பகுப்பாய்வு ரீதியான இந்திய வரலாறு, லண்டன், 1780 என்ற நூலின் பக்கங்களாகும்.

## [பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவைக் கைப்பற்றுதல்]

### I. வங்காளத்தில் கிழக்கிந்தியக் கம்பெனி, 1725-1755

*(மொகலாயப் பேரரசர்கள் : முகம்மது ஷா, 1719-1748; அகமது ஷா, 1748-1754.)*

**1725.** வங்காளம், பீஹார், ஒரிசா ஆகியவைகளின் சுபாதாரும், *வங்காளத்தின்* திவானும் *(வரி வசூல் அதிகாரி)* ஆன முர்ஷித் குலி கானின் மரணம் ; வங்காளத்திலும் ஒரிசாவிலும் *அப்பதவிகளுக்கு அவரதுமகன் ஷுஜாவுதீன் வந்தார்.*

**1726.** ஹூக்ளி *வழியாக வியாபாரம் செய்துகொண்டிருந்தவர்கள் ;* கல்கத்தாவில் ஆங்கிலேயர்கள் ; சந்திரநாகூரில் பிரெஞ்சுக்காரர்கள் ; சின்சுராவில் டச்சுக்காரர்கள் ; *ஜெர்மானியப் பேரரசரால் நிறுவப்பட்ட* ஆஸ்டெண்ட் கிழக்கிந்தியக் கம்பெனி பங்கி சபார் என்ற கிராமத்தில் *[ஒரு வியாபாரத்தலத்தை] ஸ்தாபித்திருந்தது ; மற்றக் கம்பெனிகள் ஒன்றுதிரண்டு,* குறுக்கிட்டவர்களை* வங்காளத்திலிருந்து *வெளியேற்றின. அதே ஆண்டில் (ஜார்ஜ் I ன் ஆட்சியின்கீழ்),* ஒவ்வொரு ராஜதானிப் பட்டணத்திலும் மேயர் கோர்ட்டுகள் *அமைக்கப்பட்டன;* ஆங்கிலேயப் பொதுநீதியும் சட்டநீதியும் (English Common

---

** தனிப்பட்ட முறையில் ·இந்தியாவுடன் வியாபாரம் செய்து, அப்படிச் செய்ததன் மூலம் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஏகபோக உரிமையை மீறிய வியாபாரிகள்.*

and Statute Law - மொ. ர்.) இந்தியாவுக்கு — ஆங்கிலேயர்களைப் பொருத்தஅளவில்—இப்படி விஸ்தரிக்கப் பட்டதைப் பற்றி மேலும் தகவலுக்கு பக். ... ப் பார்க்க.

**1730.** இங்கிலாந்தில் தடையிலா வர்த்தகக் கோட்பாடுகளின்படி அமைக்கப்பட்ட புதிய சொசைடி ஒன்று **கிழக்கிந்திய வர்த்தகத்**துக்காக **ஒரு சாசனம் தரும்படி பார்லிமெண்டைக்** கெஞ்சியது. அதே சமயத்தில் **பழைய கிழக்கிந்தியக் கம்பெனி,** தனது **இணைப்புக்காலம்** அத்துடன் முடிந்து விட்டமையால், தனது **ஏகபோக உரிமைச் சாசனத்தின்** காலத்தை நீடித்துத் தரும்படி கோரியது; **வன்**மையான பார்லிமெண்ட் சண்டைகள்; பழைய ஏகபோகக் கம்பெனி வென்றது; **அதன் சாசனம் 1766 வரை நீடிக்கப்பட்டது.**

**1740.** ***சுபாதார் ஷுஜாவுதீன்** இறந்தார்; வங்காளக்கவர்னர் **அலிவர்திகான்** பதவி யேறினர்; இவ்வாருக இவர் **வங்காளம், பீஹார், ஒரிசா** ஆகிய மூன்று மாகாணங்களையும் **மீண்டும ஐக்கியப்படுத்தினர்**; இவர்—

**1741**—மகாராஷ்டிரர்களால் தாக்கப்பட்டார்; அவர்கள் **முர்ஷிதாபாத்** வியாபாரத் தலத்தைக் கொள்ளையிடுதல், முதலியவற்றைச் செய்தனர் (பக். ...., ...). இதன் விளைவாக ஆங்கிலேயர்கள் —

**1742**—புகழ்பெற்ற **மகராஷ்டிரப் பள்ளத்தைத்** தோண்டுவதற்கு **அலிவர்திகானிட**மிருந்து அனுமதி பெற்றனர்.

**1751.** அலிவர்திகாஞல் செல்வங்கள் தரப்பெற்று, மகராஷ்டிரர்கள் தக்காணத்துக்குத் திரும்பினர். அப்பொழுதிருந்து **1755 வரை, ஹுக்ளிக் கரையிலிருந்த ஆங்கிலேயக்**

---

* *1739 என்கிருர் பர்கஸ்.*

குடியேற்றங்கள் அமைதியுடன் காலங்கழித்தன (மகராஷ்டிர விவகாரத்திற்குப் பின்வரும் பகுதிகளைப் பார்க்க).

.............................................................................

## II கர்னடகத்தில் பிரெஞ்சுக்காரர்களுடன் போர், 1744—1760.

**1744.** ஐரோப்பாவில் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கு மிடையில் பெரும்போர் துவங்கியது ; சென்னைராஜதானியில் இருந்த ஆங்கிலேயத் துருப்புக்ககள் 600 தான் ; லபூர்தொன்னே யின் தலைமையில் புதுச்சேரியிலும் பிரெஞ்சுத் தீவி*லு மிருந்த பிரெஞ்சுத் துருப்புக்களின் எண்ணிக்கை இதை விட அதிகம்.

**செப்டம்பர் 20, 1746.** லபூர்தொன்னே சென்னையைக் கைப் பற்றினர் : அவர் ஆங்கிலேய வியாபாரிகளைக் கைது செய்யவோ, அல்லது அவர்களுக்கு உடற்றீங்கு செய்யவோ இல்லை ; அவரது எதிராளியான பாண்டிச் சேரியின் கவர்னர் ட்யூப்ளேயை இது ஆத்திர மூட்டி யது. (இந்த ஆசாமி, பிரெஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி டைரக்டர் ஒருவரின் குமாரர்); ஹூக்ளிக் கரையில் சந்திரநாகூர் என்ற இடத்திலிருந்த பெரிய பிரெஞ்சு வியாபாரத்தலம் ஒன்றின் கவர்னராக 1730-ல் இருந் தார் ; 1742-ல் புதுச்சேரியின் கவர்னராக்கப்பட் டார். லபூர்தொன்னேக்கு எதிரான அவரது போட்டி இந் தியாவில் பிரெஞ்சுக்காரர்களின் வீழ்ச்சியில் முடிந்தது.

லபூர்தொன்னேயின் தலைமையிலிருந்த கப்பற்படை புயலினல் அழிந்துபோக, ட்யூப்ளே ஒரு உதவியும் அவருக்கு அனுப்பவில்லை. லபூர்தொன்னே ஆங்கிலேயர்களால் கைதியாக்கப்பட்டார். பிரான்சுக்குத்திரும்பி, 1749ல்

* மரீஷியஸ் தீவின் பழைய பெயர்.

பஸ்டில் சிறையில் அவர் இறந்தார். (1735ல் அவர் பிரெஞ்சுத் தீவுக்கும் பூர்போனுக்*கும் கவர்னராக அனுப்பப்பட்டிருந்தார்; அவரது பதவிக்காலம் முடிவுற்று, இந்தியாவில் ஆங்கிலேயர்களின் வர்த்தகத்திற்கு ஊறு செய்வதற்காக, ஒன்பது கப்பல்களைக் கொண்ட ஒரு பயணத்தின் தலைவராக 1741ல் அனுப்பப்பட்டார்; 1744ல் போர்த்துவக்கம் அறிவிக்கப்பட்டதும், தெற்குப்பகுதியில் பிரெஞ்சுத் தலைமையை மேற்கொள்வதற்காக அவர் கப்பலில் புறப்பட்டார்.)

**1746.** தக்காணத்தில் கட்சிகளின் நிலைமை. மொகலாயப் பேரரசர் முகம்மது ஷா (1719—1748) வின் கீழ் இருந்தவர் தக்காணத்தின் சுபாதாரும், நைசாம்—உல்—முல்க் என்ற மறுபெயர் கொண்ட வருமான ஆசப்ஜா; இவர் நைசாம்களின் வம்சத்தை நிறுவியவர்; ஹைதராபாத்தில் வசித்தார். வழிவழி உரிமையில் கர்னுடகத்தின் நவாபாக இருந்த மைனர்** இறந்ததும், ஆசப்ஜாவின் உதவியால் 1740ல் அன்வாருதீன் கர்னுடக நவாப் ஆனார்; இதற்கு முன்பு இச்சிறுவனுக்குப் பாதுகாவலராக (கார்டியன், மொ. ர்.) இவரை ஆசப்ஜாவே நியமித்திருந்தார். முந்தைய கர்னுடக நவாப்பான தோஸ்த் அலியின் மகளை மணந்ததன் மூலம் சந்தர்சாகிப் திருச்சினுப்பள்ளியின் கவர்னராக ஆகியிருந்தார்; 1741ல் அங்கிருந்து மகாராஷ்டிரர்கள் அவரைத் துரத்தினார்கள்; அப்பொழுது அவர் சென்னையில் பிரெஞ்சுக்காரர்களிடம் ஓடிப் போனார்.

**1746.** அன்வாருதீன் (கர்னுடக நவாப்) 10,000 ஆட்களுடன் சென்னையைத்தாக்கினார்; அங்கு பிரெஞ்சுக்

* 'ரியூனியனின் பழைய பெயர்.

** சிறுவன்

காரர்களுக்குத் தலைமை தாங்கி **ட்யூப்ளே** இருந்தார்; ட்யூப்ளேயின் தலைமையில் 1,000 பிரெஞ்சுக்காரர்கள் நவாபைப் பின்தள்ளி, அந்நகரைக்கொள்ளையிட்டு, பல [ஆங்கில] வியாபாரத்தலங்களைக் கொளுத்தி, அங்கு வசித்த அதிகப் பிரபலமான ஆங்கிலேயர்களைப் புதுச்சேரிக்கு அனுப்பினர்.

**டிசம்பர் 19,** சென்னைக்குத் தெற்கில் 12 மைல் தொலைவில் இருந்த **செயின்ட் டேவிட் கோட்டையை** (அங்கு ஆங்கிலேயர்கள் 200 பேர்களைக் கொண்ட ஒரு கோட்டைப் படையை வைத்திருந்தனர்) 1700 ஆட்களுடன் ட்யூப்ளே தாக்கினர்; ஆனால், முற்றுகையிட்டுக் கொண்டிருந்த பிரெஞ்சுக்காரர்களுக்கெதிராக அன்வாருதீன் படையுடன் சென்று, அவர்களைப் **புதுச்சேரிக்குப் பின்வாங்கும்படி** செய்தார்.

**1747,** ட்யூப்ளே அன்வாருதீனைத் தன் கட்சிக்குக்கவர்ந்து கொண்டார்; அவர் **மார்ச்சில்** மீண்டும் **செயின்ட் டேவிட் கோட்டையைத்** தாக்கினர்; [ஆனால்] **காப்டன் பேடனின்** தலைமையில் ஒரு **ஆங்கிலக் கடற்படை** அணுகியதும் திரும்பிச் சென்றார்; இக்காப்டன் புதுத்துருப்புகளை இறக்கிச் சென்றார்.

**ஜூன் 1747. போஸ்காவென், கிரிப்பின் என்ற அட்மிரல்கள்** (கடற்படைத் தளபதிகள்—மொ. ர்) இங்கிலாந்திலிருந்து கடற்படையுடன் சென்னைக்கு வந்து சேர்ந்தனர்; இதனால் **தெற்கிலிருந்த பிரிட்டிஷ்படை 4000 ஆக** உயர்ந்தது; ஆங்கிலேயர்கள் புதுச்சேரியை முற்றுகையிட்டனர்; [ஆனால்] வெறுங்கையுடன் பின் வாங்கினர்.

**அக்டோபர் 4, 1748. ஆஹ்ஹன் சமாதான உடன்படிக்கையைப் பற்றி தகவல் வந்தது;** ட்யூப்ளே சென்னையை ஆங்கி

லேயர்களிடம் திருப்பி ஒப்படைத்துவிட்டார்.—தஞ்சாவூரின் மகாராஷ்டிரச் சிற்றரசரும், ஷாஜி (சிவாஜியின் தந்தை) யின் ஐந்தாவது வழித் தோன்றலுமான சாஹுஜி—இவரது ஜாகீர் தான் [தஞ்சாவூர்]—தனது இளைய சகோதரர் பிரதாப் சிங்குக்கு எதிராக ஆங்கிலேயர்களின் உதவியைக் கோரினுர்; பிரதாப் சிங், சாஹுஜியிடமிருந்து அதிகாரத்தைப் பறித்துக் கொண்டு விட்டிருந்தார்; அவரது புரட்சியின் [மையம்], கொள்ளிடத்தின் முகத்துவாரத்திலிருந்த தேவிக் கோட்டை என்ற அரணமைந்த இடம்.

**1747.** *அக்கோட்டையை ஆங்கிலேயர்கள் பிடித்தால் அதை அவர்களுக்கே தருவதாக சாஹுஜி ஆங்கிலேயர்களுக்கு உறுதி கூறினுர். மேஜர் லாரன்ஸ்—அவர் கீழ் ஒரு இளம் அதிகாரியாக கிளைவ் பணியாற்றினுர்—அதைப் பிடித்தார்; இவ்வாருகத் தேவிக் கோட்டை ஆங்கிலேயர்களுடையதாயிற்று. ஆனுல், பிரதாப்சிங்கோ ஆண்டுத்தொகை ரூ 50,000 தருவாக உறுதி கூறி சாஹுஜியைக் கடைசியில் பதவிதுறக்குமாறு செய்தார்.

**1748.** **தக்காண சுபாதார் நைசாம்—உல்—முல்க் மரணம்;** இவரது மகன் நசீர்ஜங் அடுத்து பதவிக்கு வந்தார்; இவரது உரிமையை, இவரது இறந்துபோன மூத்த சகோதரர் ஒருவரின் குமாரர் முசபர்ஜங் எதிர்த்தார். இருவருக்கும் போர் மூண்டது;

**1749.** **ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கு மிடையில் புதியதொரு போர்.** முசபர்ஜங் பிரெஞ்சுக்காரர்களின் உதவிகோரி அதையும், சந்தா சாகிப்பின் துணையையும் பெற்ருர்; சுபாதார் பதவியைப் பெறுவதற்குத் தனக்கு

* 1749 என்கிருர் பர்கஸ்.

சந்தர் சாகிப் உதவி செய்தால், அவரை ஆர்காட்டு நவாப் பாக்குவதாக முசபர்ஜங் உறுதி கூறினர்.—மறு பக்கத்தில், நசீர்ஜங் (நைசாம்) ஆங்கிலேயர்களையும் அன்வாருதீனையும் (கர்னுடக நவாப்) துணைகளாகப் பெற்றுர்.—முதற் கைகலப்பில் அன்வாருதீன் கொல்லப் பட்டு, அவரது துருப்புக்கள் திருச்சிறுப்பள்ளிக்கு ஓடின; ஆனுல் பிரெஞ்சுப் படையில் சம்பளம் குறித்து கலகம் மூண்டது;இது ட்யூப்ளேயை இக்கட்டான நிலை யில் வைத்தது; நசீர்ஜங் முன்னேறினர்; முசபர்ஜங் தோற்கடிக்கப்பட்டு சிறைபிடிக்கப்பட்டார்; அதே சமயம் சந்தர் சாகிப் வழியில் சிரமத்துடன் போரிட்டு புதுச்சேரி வந்து சேர்ந்தார். வெற்றிக்குப் பிறகு நசீர் ஜங் ஆர்காட்டில் மகிழ்ச்சியுடன் இருந்தார். ஆங்கிலே யர்கள் சென்னைக்குப் பின்வாங்கினர்.

**1750.** அன்வாருதீனின் குமாரர் முகம்மது அலி அடுத்தபடி யாகக் கர்னுடக நவாப் ஆனுர்; இந்த ஆசாமி தனது பதவியில் ஆங்கிலேயர்களால் காக்கப்பட்டு, அவர் களது கையாளாக விருப்பத்துடன் இருந்தார்;எனவே "கம்பெனி நவாப்" என்ற புனைபெயர் இவருக்கு ஏற் பட்டது.—செஞ்சி, மசூலிப்பட்டினம், திருவதி ஆகிய கோட்டைகளைப் பிடித்தும், முகம்மதலியைத் தோற் கடித்தும் ட்யூப்ளே அவ்வாண்டுப் போர் நடவடிக்கை யை வெற்றிகரமாகத் தொடக்கி வைத்தார். இவரால் தூண்டப்பட்டு, நைசாமின் (நசீர்ஜங்கின்) முகாமிலி ருந்த சில துரோகிகள்—பட்டாணிய நவாபுகள்—அவ ரை [நைசாமை]த் தீர்த்துக் கட்டிவிட்டனர்; இவருக் குப் பிறகு இவரது உடன் பிறந்தார் குமாரர் முசபர் ஜங் (பிரெஞ்சுக்காரர்களின் துணைவர்) தனது உரிமை யின்படி சுபாதாரானுர் இவர். ட்யூப்ளேயைக் கர்னுடக

நவாபாகவும், சந்தர் சாகிபை ஆர்காட்டு நவாபாகவும் ஆக்கினார்; ஆனால்—

**ஜனவரி 4, 1751**—பெரும் பரிவாரத்துடன் ஹைதராபாத் ராஜ்யத்தில் பயணஞ் செய்து கொண்டிருந்த பொழுது, நசீர் ஜங்கைத் தீர்த்துக் கட்டிய அதே பட்டாணிய நவாபுகளால் முசபர்ஜங் கொல்லப் பட்டார். முசபர் ஜங்குக்குக் குழந்தையில்லை; அடுத்த சட்ட பூர்வமான வார்சுகள் நசீர்ஜங்கின் குமாரர்கள்; பிரெஞ்சுப் படைக்குத் தலைமை தாங்கிய புஸ்ஸி, நசீர் ஜங்கின் கடைசி குமாரர் சலபத்ஜங்குக்குக் காலியாயிருந்த [சுபாதார்] பதவியை வழங்கினார்; முசபர் ஜங்கின் மரணத்தின் பொழுது சலபத்ஜங் கைதியாக முகாமில் இருந்தார்.

அவ்வேளையில் சந்தர்சாகிப் ஆர்காட்டிலிருந்து படையுடன் சென்று, தனது அரசாங்கத்தின் முந்தையத் தலை நகரான திருச்சினுப்பள்ளியைத் தாக்கினார்; ஆனால் எதிர் நடவடிக்கையாகக் காப்டன் கிளைவ் ஆர்க்காட்டின் மீது படையெடுத்துச் சென்று அதைப் பிடித்து, சந்தர் சாகிபை அவசர அவசரமாகப் பின்வாங்கும்படி செய்தார். ஆர்காட்டை ஏழுவாரங்கள் பயனின்றி முற்றுகை யிட்டபின், சந்தர் சாகிப் திருச்சினுப் பள்ளிக்குத் திரும்பினார்; அங்கு—

**1752**—கிளைவ் அவரைப் பின்தொடர்ந்தார்; அவர் அங்கு முகம்மதலியுடனும் மேஜர் லாரன்சுடனும் தங்கினார்; நாடோடியான சந்தர்சாகிப், ஆங்கிலேயர்களின் ஆதரவின் கீழிருந்த தஞ்சாவூர் ராஜாவால் துரோகமாகத் தொலைத்துக் கட்டப்பட்டார்.

**1753**. ஆங்கிலேயர்களின் துணையான முகம்மதலி, மைசூர் ராஜாவுக்குத் திருச்சினுப்பள்ளியைக் கொடுப்பதாக உறுதி கூறியிருந்தார்; ஆனால், அவ்விடம் இப்பொழுது

ஆங்கிலேயர்கள் வசமிருந்ததால், அவரால் தனது வாக்கைக் காப்பாற்ற முடியவில்லை. மைசூர் ராஜாவுடனும், அவர் மூலமாக மொரார்ிராவின் தலைமையிலிருந்த மகாராஷ்டிரர்களுடனும் நேச ஒப்பந்தம் ஒன்றை[ச் செய்து] கொள்வதற்கு ட்யூப்ளே இதைச் சாதமாகப் பயன் படுத்தினர்.

**மே 1753—அக்டோபர் 1754.** ட்யூப்ளே தனது துணைகளுடன் திருச்சினுப்பள்ளியை முற்றுகையிட்டார்; லாரன்ஸ், கிளைவ் ஆகியவர்களின் தலைமையில் அது வெற்றிகரமாகக் காக்கப்பட்டது.

அதே ஆண்டில் (ஜார்ஜ் II ன் ஆட்சியில்), 1746 - ல் லபூர்தொன்னே சென்னையைக் கைப்பற்றிய பிறகு வழக்கொழிந்து போன மேயர் கோர்ட்டுகள் சென்னையில் மீண்டும் தாபிக்கப்பட்டன. ஐரோப்பியர்களுக் கிடையிலான எல்லா விஷயங்களையும் விசாரிக்கும் அதிகாரத்தை அவைகள் பெற்றன; இந்துக்களுக்கிடையிலான எல்லா விஷயங்களையும்கூட அவைகள் விசாரிக்கும் அதிகாரத்தைப் பெற்றன ; ஆனால் இந்துக்களின் சம்மதத்தின் பேரில்தான் விசாரிக்க முடியும்; இம்மன்றத்துக்கு உட்பட மறுப்பவர்களுக்குத் தெளிவாக விலக்கு அளிக்கப்பட்டது. "அவர்களது சொந்த சட்டங்களை இந்திய மக்களுக்கு ஒதுக்கி வைப்பதற்கு நாம் காணும் முதல் எடுத்துக் காட்டு இச்சாசனம் ஆகும்." (கிராடியின் மரபுச் சொத்துரிமை பற்றிய இந்துக்களின் சட்டம், முன்னுரை, பக். X L I V.)

**1754.** சமாதானம்; ட்யூப்ளே திருப்பி அழைக்கப் படுதல் (இந்தியாவில் பிரெஞ்சு வீழ்ச்சிக்கு இது அறிகுறி). ஏனெனில் கர்னாடக நவாபாக யாரை, "கம்பெனி நவா"பான முகம்மதலியையா, அல்லது பரம்பரை சுபாதாரால் அதிகார பூர்வ

மாக நியமிக்கப்பட்ட ட்யூப்ளேயையா, அங்கீகரிக்க வேண்டும் என்பது பற்றி ஐரோப்பாவில் 1751 முதலே தகராறு இருந்து வந்தது; முந்தைய நவாபுக்கு வாரிசான முகம்மதலிதான் நவாபாக இருக்கவேண்டும் என்றும், இது ஏனெனில் பொம்மையாகிய மொகலாயப் பேரரசர் அகமது ஷா (மரணம் 1754; அவருக்குப்பின் ஆலம் கீர் II, 1754—1759, பட்டத்துக்கு வந்தார்) தவிர வேறு யாரும் தமது தெளிவான ஆணைப் பத்திரத்தின்படி இப் பதவியைப் பரம்பரை உரிமை யுடையவர்களிடமிருந்து வேறு யாருக்கும் மாற்ற முடியாது என்றும் ஆங்கிலேயே அரசாங்கம் வாதாடியது. "பெருஞ் செலவுகள்" அவர் செய்துவிட்டார் என்பதனுல், பிரான்சிலிருந்த ட்யூப்ளேயின் விரோதிகள் அவருக்கெதிராகச் சதிசெய்தனர். ட்யூப்ளேக்குப் பதிலாக காதியூ (1754) நியமிக்கப் பட்டார். (சில ஆண்டுகளுக்குப் பிறகு பிரான்சில் ட்யூப்ளே கொடியவறுமையில் இறந்தார்! அந்த பிரெஞ்சு நாய்களின் பொறுமை யானது திறமை வாய்ந்த மனிதர்களுக்கு எமனுக இருக்கிறது.)

டிசம்பர் 26, 1754. காதியூக்கும் சான்டர்ஸஊக்கும் (சென்னை கவர்னர்) இடையில் சமாதான ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது; அதன்படி முகம்மதலி கர்னுடக நவாபாக ஏற்றுக் கொள்ளப்பட்டார்.—இதற்கிடையில் இந்தியாவிலிருந்த அத்தனை பிரெஞ்சுத் தலைவர்களைக் காட்டிலும் மிகவும் திறமை வாய்ந்த புஸ்ஸி தக்காண நைசாமான சலபத் ஜங்குடன், சுபாவின் அலுவல்களை நிர்வகிப்பதில் அவருக்கு உதவி செய்து கொண்டு, அவுரங்காபாத்தில் [இருந்தார்.]—அதே ஆண்டில்—1754*—ஒரு பெரும் படையுடன் காசியுதீன் கான் (முந்தைய சுபாதாரான நசீர் ஜங்கின் மூத்த சகோதரர்), மகாராஷ்டிரர்களும்

*1752 என்கிருர் எல்பின்ஸ்டன்.

தன்னுடன் சேர்ந்துகொள்ள, சலபத் ஜங்கைத் தாக்கினுர். புஸ்ஸி மகாராஷ்டிரர்களைத் தோற்கடித்து, காசியுத்தீனுக்கு விஷமிட்ச் செய்தார்; வட சர்க்கார்ப் பகுதிகளைப்* பிரெஞ்சுக்காரர்களுக்குக் கொடுத்து நைசாம் ட்யூப்ளேக்கு நன்றி செலுத்தினுர்.

**1755.** தனக்குத் திறை செலுத்த மறுத்த மைசூர் ராஜா வை, புஸ்ஸியின் அறிவுரைக்கு மாருக சலபத் ஜங் தாக்கினுர் (அப்பொழுது பிரெஞ்சுத் துணையாக இருந்த மைசூர் ராஜா ஆங்கிலேயர்களுடன் துணை சேர்ந்துகொள்ளும் படி இதனுல் உந்தப்பட்டார்); படையெடுப்பு வெற்றி பெற்றது; சலபத் ஜங்குக்குப் பெருந்தொகையாகப் பணமும் வெகுமதிகளும் கொடுத்து மைசூர் ராஜா அவரைத் திருப்பி யனுப்பிவிட்டார். நைசாம் பிறகு பேஷ்வா பாலாஜி ராவின் தலைமையிலிருந்த மகராஷ்டிரர்களுடன் சேர்ந்துகொண்டு, மகராஷ்டிரக் கலகத்தலைவரான மொரராரி ராவைத் தோற்கடித்தார்.

**1749—1756.** மகாராஷ்டிர விவகாரங்கள். 1749ல் மகப்பேறு இன்றி ராஜா சாஹுஜி பூனுவில் இறந்தார்; பேஷ்வா பாலாஜி ராவ் உண்மை அரசரானுர்; ஆளும் வம்சத்தில் எஞ்சியிருந்த இளவரசர் ராஜாராமுக்கு வெறும் பட்டத்தை மட்டுமே விட்டுவைத்து, அவரை உண்மையில் கைதி போலவே நடத்தி வந்தார். அதேசமயம் அஞ்சாமையும் அடங்காத் தன்மையும் கொண்ட தன் குமாரர் ரகோபாவை, குஜராத் கெய்க்குவாரின் பிரதேசங்களைக் கொள்ளையிடும் பொய்க் காரணத்துடன் பூனுவிலிருந்து அப்பால் அனுப்பினுர்.

**1756.** நைசாம் சலபத் ஜங்கினுல் தனது அவையிலிருந்து அப்பால் செல்லும்படி உத்திரவிடப்பட்ட புஸ்ஸி மசூ

---

* சோழமண்டலக் கரையின் வடக்கிலுள்ள மாகாணம்; இது ஹைதராபாத் நைசாமுக்குச் சொந்தமாயிருந்தது.

லிப்பட்டினம் சென்ருர்; பிரெஞ்சுக்காரர்களைச் சுபாவி லிருந்து வெளியேற்றவேண்டி ஆங்கிலேயர்களுடன் துணை சேர்ந்துகொள்ள நைசாம் எண்ணியிருக்கிருர் என்பதை அவர் கேள்வியுற்ருர். உடனே போர்க் கோலம் பூண்டு ஹைதராபாத்துக்கு அருகில் சார்மால் என்ற இடத்தில் அகழ்அரண் அமைத்துத் தங்கினுர். சலபத்ஜங் வழிக்கு வந்து, ஆங்கிலேயர்களின் துணையை வேண்டாமென்று மறுத்தார்.

**1757.** நைசாம் புஸ்ஸியை மீண்டும் வட சர்க்கார்ப் பகுதிகளுக்கு அனுப்பினுர். ஆனுல் அவரைச் சீக்கிரம் திருப்பி அழைக்கவேண்டியதாயிற்று; தான் திரும்பியதும்—1757—ஹைதராபாத்தைச் சுற்றி நான்கு எதிர்ப் படைகள், நைசாமின் இரு மூத்த சகோதரர்களாகிய பசாலத்ஜங், நைசாம்அலி ஆகியவர்களின் தலைமையில் திரண்டிருப்பதைப் புஸ்ஸி கண்டார்; மேலும் நைசாம் அலியுடன் சலபத்ஜங்கின் அமைச்சர் சதி செய்தார்; தற்செயலாக நிகழ்ந்ததாகத் தோன்றிய ஒரு போராட்டத்தில் அவரைப் புஸ்ஸி கொல்வித்தார்; அதன்பிறகு நைசாம்அலி போர்க்களத்திலிருந்து ஓட்டம் பிடித்தார்; பசாலத்ஜங்கோ தௌலதாபாத் கோட்டை தனக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட்டு சமாதானப் படுத்தப் பட்டார்.

**1758.** புஸ்ஸி இப்பொழுது தக்காண முழுதுக்கும் சர்வாதிகாரி; இத்தருணம் பார்த்து லூயி XVன் பொருமைமிக்க மந்தபுத்தி படைத்த கும்பல் அவரை நீக்கி அவருக்குப் பதிலாக லாலி என்ற அயர்லாந்து தேசத்து பதவி வேட்டைக்காரரை நியமித்தது; இவர் நல்ல படை வீரர் ஆனுல் படைத் தலைவர் அல்ல.

**மே 1, 1758.** லாலி செயின்ட் டேவிட் கோட்டைக்கு அருகில் வந்திறங்கினுர்; உடனே தன் தலைமையின் கீழிருந்த

எல்லாப் பிரெஞ்சுப் படையுடனும் தெற்கு நோக்கி வரும்படி புஸ்ஸிக்கு உத்தரவிட்டார்; புஸ்ஸி கீழ்ப் படிந்தார்; லாலி செயின்ட் டேவிட் கோட்டையைப் பிடித்து, சென்னையைத் தாக்கப்போனார்; புதுச்சேரியி லிருந்த பிரெஞ்சு வியாபாரிகள் அவருக்குத் துரும்பளவு நிதி உதவிகூடச் செய்ய மறுத்தனர்; ஆகையால் தஞ்சா வூரைக் "கொள்ளை"யடிக்க—அது மிக்கச் செல்வம் படைத்ததாகப் புகழ் பெற்றிருந்தது—அவர் முடிவு செய்து, அதை நெருக்கமாக முற்றுகையிட்டார்; தஞ் சாவூர் ராஜா ஆங்கிலேயர்களுக்கு அறைகூவல் விடுத் தார்; இவர்கள் சென்னையிலிருந்து ஒரு கடற்படையை காரைக்காலுக்கு அனுப்பி, பிரெஞ்சுப் படையின் சப்ளை களைத் துண்டித்து, ஒரு படையைக் கரையிறக்கினர்; இப்படை லாலியின் தாக்குதலுக்கான இணையான அகழ் அரண்களைச்சுற்றி வளையம் அமைப்பதற்குச் சென்றது. பிரெஞ்சு முற்றுகை விலக்கப்பட்டு, பிரெஞ்சு அட்மிரல் தனக்கு இடப்பட்ட உத்தரவுகளுக்கு நேர்மாறாக, லாலியைத் தன் கதிக்கே விட்டுவிட்டு மரீஷியஸுக்குக் கடற்படையுடன் சென்று விட்டார்.—லாலி ஆர்காட்டைப் பிடித்தார்; அங்கு புஸ்ஸி அவருடன் சேர்ந்துகொண் டார்; பிரெஞ்சு அதிகாரத்தை வலுப்படுத்தும் பொருட் டும், ஆங்கிலேயர்களின் தலைமையிடங்களின்மீது இறுதித் தாக்குதல் தொடுப்பதற்குப் பணம் திரட்டும் பொருட்டும் ஆர்காட்டிலேயே தங்கியிருக்கும்படி அவ ருக்கு புஸ்ஸி ஆலோசனை கூறினார்; ஆனால் "ஆசை வெறிபிடித்த" லாலி தனது திட்டத்தையே வலி யுறுத்தி—

டிசம்பர் 12, 1758—சென்னையை முற்றுகை யிட்டார்; அங்கு லாரன்ஸின் தலைமையிலிருந்த கோட்டைப் படை இரண்டு மாதம் தாக்குப் பிடித்தது; டிசம்பர் 14ந்

தேதியன்று பிரெஞ்சுக்காரர்கள் "பிளாக் டவுனை" கைப்பற்றி, கோட்டையைச்சுற்றி இணையான அகழ் அரண் அமைத்தனர்.

**பிப்ரவரி 16, 1759.** ஒரு பிரிட்டிஷ் கடற்படை துறையில் வந்து சேர்ந்தது; முற்றுகை விலக்கப்பட்டது; 50 பீரங்கிகளைப் பின்னுல் போட்டுவிட்டு லாலி ஓட்டம் பிடித்தார். கடற்படையுடன் வந்திருந்த கர்னல்கூட் தடங்கல் ஒன்றுமின்றி சென்னையில் கரையிறங்கி, கோட்டைப் படையுடன் புறப்பட்டுச் சென்று, வந்தவாசியைக் கைப்பற்றி, லாலியைச் சிதறடித்து புதுச்சேரிக்கு ஓட்டினுர்.

**1760.** லாலி புதுச்சேரியில்; பிரான்சிலிருந்து சப்ளைகளுக்காக வீணில் காத்துக்கொண்டிருந்தார்; சம்பளம் கொடுக்கப்படாததால் துருப்புகளிடையில் கிளர்ச்சி சுபாவம் காணப்பட்டது; **1760 இறுதியில்** கூட் பாண்டிச்சேரி முற்றுகையை ஆரம்பித்தார்.

**ஜனவரி 14, 1761.** கோட்டைப் படை புதுச்சேரியை விட்டு வெளியேறியது; கூட் **கோட்டையை இடித்துத் தரைமட்டமாக்கி, இந்தியாவில் பிரெஞ்சு அதிகாரத்தின் ஒவ்வொரு சின்னத்தையும் அடியோடு அழித்தார். பாரிசில் லாலி பயங்கரமாகத் துன்புறுத்தப்பட்டு, கடைசியில் சிரச்சேதம் செய்யப்பட்டார்; லபூர்தொன்னே** சிறையில் இறந்தார், **ட்யூப்ளே** கடுந்துயரில் இறந்தார், **புஸ்ஸி** இந்தியாவில் தங்கி இறுதியில் மறக்கப்பட்டுப் போனுர்.

## III வங்காளத்தில் நிகழ்ச்சிகள், 1755—1773

**1740**ல், சுபாதாரான ஷுஜாவுதீன் இறந்ததும் அலி வர்திகான் வங்காளம், பீஹார், ஒரிசா ஆகிய மூன்று மாகாணங்களையும் தன்கீழ் ஐக்கியப்படுத்திய (பக். 85*) அந்த ஆண்டில், மகாராஷ்டிரப் பேஷ்வா பாலாஜி ராவ் இறந்தார். (புவார், ஹோல்கார், சிந்தியா, கடைசியாக ரகோஜி பான்ஸ்லே என்ற ஒரு வலிமை மிக்க பதவி வேட்டைக்காரர் ஆகியவர்களால் அவரது படைகள் நடத்தப்பட்டன.) அவரது மரணத்துக்குப் பின் ரகோஜி பான்ஸ்லேயின் பலம் மிகவும் அதிகரித்துவிட்டதால் அவரை நசுக்குவதற்கு மற்றத் தலைவர்கள் எல்லாம் இரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டனர்; கர்னூடகத்துக்குப் படையெடுத்துச் செல்லும்படி [அவர்கள்] அவரை அனுப்பி வைத்தார்கள். பேஷ்வா (பாலாஜி ராவ்) மூன்று குமாரர்களைவிட்டு இறந்தார்: பாலாஜி ராவ்: இவர் தனது தந்தையின் பதவிக்கு வந்தார்; ரகுநாத் ராவ் (பின்னர் ரகோபா எனப் புகழ் பெற்றார்); கடைசியாக ஷம்ஷேர் பகதூர்; இவர் பண்டேல்கந்தில் ஆண்டு கொண்டிருந்தார். புது பேஷ்வா பாலாஜி ராவ், தான் பெற்ற நில மானியங்களால் பான்ஸ்லேயிக்கு நேர் விரோதியானார்; அதனால் பான்ஸ்லே வங்காளத்தின்மீது படையெடுத்தார்; ஆனால் அரசத் துருப்புகளால் தோற்கடிக்கப்பட்டார். தனது நாட்டில் இந்த விரோத சம்பவங்கள் நடப்பதால் இரு கட்சியைச் சேர்ந்த

* இப் பதிப்பில் பக். 102ஐ பார்க்க.

மகாராஷ்டிரர்களிடமிருந்தும் **தன்னைப் பாது காத்துக் கொள்ளும்படி அலிவர்திகான்** நிர்ப்பந்தப் படுத்தப்பட்டார்; அவர் **பேரரசுத் துருப்புகளால்** தன்னை மேலும் பலப் படுத்திக்கொண்டார்; **பாலாஜிராவின்** அதிகாரி ஒருவரான **பாஸ்கர்** அவரை வெற்றிகரமாக எதிர்த்து, **கட்வா** வரை அவருடன் போரிட்டு, **ஹூக்ளி** வரை முன்னேறிச் சென்று, **முர்ஷிதாபாதில் வியாபாரத்தலம்** ஒன்றைக் கொள்ளையிட்டார்.

**1744**ல் பாஸ்கர் அலிவர்திகானால் கொலை செய்யப் பட்டார்; **1751**ல் அலிவர்திகான் வெகுமதிகள் கொடுத்து மகாராஷ்டிரர்களுடன் சமாதானம் செய்து கொண்டார்.

**1755. பேஷ்வா பாலாஜிராவின்** பலம் அதிகரிப்பதையும், மொகலாயப் பேரரசரின் பலவீனத்தையும் கண்டு, ஆங்கிலேயர்கள் பேஷ்வாவுடன் நேச உடன்படிக்கை செய்து கொண்டனர்.

**ஏப்ரல் 8, 1756. அலிவர்திகான் இறந்தார்;** அவருக்குப் பிறகு அவரது பேரப் பிள்ளை **சிராஜ் உத்தெளலா சுபா தாரானார்; எல்லா பிரிட்டிஷ் அரண்களையும் தரைமட்டமாக்கும் படி** கல்கத்தா கவர்னரான **திரு. டிரேக்குக்கு** [அவர்] உடனே செய்தியனுப்பினார். டிரேக் மறுக்கவே, அவர் படையுடன் கல்கத்தா வந்தார். கோட்டைப் படையில் 120 ஆங்கிலேயப் பீரங்கிப் படையினர் முதலியோரே இருந்ததாலும், கோட்டையில் தேவையான பொருட்கள் இன்மையினாலும், "முடிந்தவர்கள் தங்களைக் காப்பாற்றிக்கொள்க" என்று டிரேக் மக்களுக்கு உத்திரவிட்டார்.

ஜூன் 21, 1756. குமாஸ்தாக்கள் முதலியோர் ஓட்டம் பிடித்தனர்; இரவில், "எரிகின்ற வியாபாரத் தலங்களின் வெளிச்சத்தில்" ஹோல்வெல் கோட்டையைக் காத்துப் போரிட்டார்; கோட்டை தாக்கப்பட்டு கோட்டைப் படையினர் சிறைபிடிக்கப்பட்டனர்; எல்லாக் கைதிகளையும் காலைவரை பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும் என்று சிராஜ் உத்திரவிட்டார்; ஆனால் 20 அடி சதுரமும் ஒரே ஒரு சிறிய சன்னலும் உள்ள ஒரு அறையில் 146 மனிதர்களும் (தற்செயலாக, என்று தோன்றுகிறது) திணித்து வைக்கப்பட்டனர்; அடுத்த நாள் காலையில் (ஹோல்வெலே கூறுகின்ற கதையின்படி), 23 பேர் மட்டுமே உயிருடன் இருந்தனர்: ஹூக்ளி நதி வழியாகப் படகில் செல்லும்படி அவர்கள் அனுமதிக்கப் பட்டனர். ஆங்கிலேயக் கபடர்கள் இன்று வரையிலும் பெரும் பொய்யான அவதூறுகள் செய்து கொண்டிருந்த "கல்கத்தா இருட்டறைச் சம்பவம்" இது தான். சிராஜ் உத்தௌலா முர்ஷிதாபாத் திரும்பினார்; வங்காளத்திலிருந்து ஆங்கிலேயக் குறுக்கீட்டாளர்கள் சுத்தமாகவும் வெற்றிகரமாகவும் இப்பொழுது அப்புறப்படுத்தப் பட்டு விட்டனர்.

ஜனவரி 2, 1757. வில்லியம் கோட்டை, சென்னையிலிருந்து அனுப்பப்பட்ட கிளைவால்—அட்மிரல் வாட்சன் தலைமையில் கடற்படையும் அனுப்பப்பட்டது—மீண்டும் கைப்பற்றப்பட்டது. சுபாதார் கல்கத்தா நோக்கிப் படையுடன் வந்தார்; கிளைவால் தாக்கப்பட்டார்; பல மணி நேரம் நீடித்த தீர்வான ஒரு போர். ஜனவரி 3ந் தேதி சிராஜ் உத்தௌலா கம்பெனிக்கு அதன் பழைய சிறப்புரிமைகளை மீண்டும் தந்து, நஷ்ட ஈடும் [தந்தார்].—சந்திரநாகூரிலிருந்த பிரெஞ்சுக் குடியேற்றத்தைக் கிளைவ் அழித்தார். பினாசியில் (ஹூக்ளிக் கரையில், கல்கத்தா

வுக்கு அருகில்) சுபாதார் போர் முகாம் அமைத்தார்; சிராஜ் உத்தௌலாவுக்குப் பதிலாகத் தன்னை வங்காளம், பீஹார், ஒரிசா ஆகியவற்றுக்குச் சுபாதாராக ஆக்குவதாக இருந்தால், பொதுவான கைகலப்பு ஆரம்பிக்கும் எந்த நாளிலும் தன் தரப்பைவிட்டு ஆங்கிலேயர்களுடன் சேர்ந்து கொள்வதாகக் கூறி மொகலாயப் படைத் தலைவர் மீர்ஜாபர் கிளைவுக்குக் கடிதம் எழுதினர். கிளைவ் இதை ஏற்றுக்கொண்டார்.

**ஜூன் 23, 1757.** பிளாசிச் சண்டை. மொகலாயச் சேனை முழுதும் தோற்கடிக்கப்பட்டது; சுபாதார் ஓட்டம் பிடித்தார்; மீர் ஜாபர் சண்டையை நிறுத்தி, கிளைவின் முகாமுக்கு [வந்து சேர்ந்தார்].

**ஜூன் 29, 1757.** [ஆங்கிலேயப்] படை முர்ஷிதாபாத் திரும்பிற்று; அவர் போர்ச் செலவுகளைக் கொடுக்கவேண்டும் என்றும், ஹூக்ளிக் கரையிலுள்ள கம்பெனியின் சொத்துக்களைப்பாதுகாக்க வேண்டும் என்றும் நிபந்தனைகள் விதித்து, வங்காளம், பீஹார், ஒரிசா, ஆகியவைகளின் சுபாதாராக அந்துரோகியைக் கிளைவ் அங்கு சிறப்புடன் அமர்த்தினர்; துலப்ராம் மீர்ஜாபரின் நிதி மந்திரியாகவும், ராம் நாராயண் பாட்னு கவர்னராகவும் ஆயினர்.

**ஜூன் 30.** சிராஜ் உத்தௌலா ஒரு பிச்சைக்காரத் துறவியாக மாறுவேடம் பூண்டிருந்ததை மீர்ஜாபரின் குமாரர் ஒருவர் கண்டுபிடித்து அவரைத் தீர்த்துக் கட்டினர்.

**பிளாசிச் சண்டையை அடுத்து உடனேயே கிளைவ் கல்கத்தா கவர்னராக்கப் பட்டார்;** இவ்வாருக அவர் இப்பொழுது வங்காளத்தில் பிரிட்டிஷ் சிவில் நிர்வாகத் தலைவராகவும் இராணுவத் தலைவராகவும் ஆனர்.

**மீர் ஜாபருக்கெதிராக மூன்று கலகங்கள்**—மிட்னபூர், பூர்ணியா பீஹார் ஆகிய இடங்களில்—ஒடுக்கப்பட்டன.

**757ன் இறுதி.** *மீர்ஜாபரிடமிருந்து 8,00,000 பவுன்களுடன் ஒரு பொக்கிஷக் கப்பலின் வருகை; இது கல்கத்தாவிலிருந்த "களிமண் தலையர்களை" மகிழ்ச்சியில் ஆழ்த்தியது.*

**758. கர்னல் போர்டு,** *ஒரு படையெடுப்பின் பொருட்டு* **கிளை***வால் அனுப்பப்பட்டு,* **விசாகப்பட்டினத்தில்** *காங்ப்ளான் என்பவரின் தலைமையிலான பிரெஞ்சுக்காரர்களைத் தோற்கடித்து,* **மசூலிப் பட்டினத்தைக்** *கைப்பற்றினர்.*

**1759. ஷா சாதா** *வான (பேரரசுப் பட்டத்து இளவரசர்)* **அலி கௌகர்,**—*மொகலாயப் பேரரசர்* **ஆலம்கீர் II**ன் *மூத்த குமாரர்—தனது தந்தைக்கு எதிராகக் கலகம் செய்தார்; ஔத் சுபாதாரும் அவருடன் சேர்ந்து கொண்டார்; கௌகர்* **பாட்னு** *மீது படையெடுத்தார்; அது* **ராம்நாராயனல்** *பாதுகாக்கப் பட்டது;* **கிளைவ்** *இவரது உதவிக்கு வந்து, ஷா சாதாவை ஓட்டியடித்து ஆண்டொன்றுக்கு 30,000 பவுன்கள் வருமானமுள்ள* **ஜாகீர்** *ஒன்றை மீர்ஜாபரிடமிருந்து பெற்றார்.—இதன் பின்சீக்கிரத்தில் ஒரு* **டச்சுக்கடற்படையானது,படேவியா***விலிருந்த தங்களது குடியேற்றங்களிலிருந்து ஹூக்ளி நதிக்கு வந்து, சில துருப்புகளை இறக்கியது; இரவில்* **கிளைவ் கர்னல் போர்டை** *அனுப்பி அவர்களைத் தாக்கி தங்களது படகுகளுக்கு அவர்களைத் திருப்பி ஓடச் செய்தார்; எல்லாச் செலவுகளையும் தருவதாக வாக்களித்து* **டச்சுத் தளபதி** *திரும்பிச் சென்றார்.*

**பிப்ரவரி 25, 1760. கிளைவ் ஐரோப்பாவுக்குக் கப்பலில் பயணமானர்.**—*தனது நிதி மந்திரியான* **துலப் ராமை** *மீர் ஜாபர்* **கொலைசெய்தார்.**—*இதற்கிடையில் மொகலாயப் பேரரசர்* **ஆலம்கீர் II**ம் *அதேபோல் தனது முதலமைச்சர்* **காசியுதீனல்** *கொல்லப்பட்டார்;* **ஷா சாதா,**

தன்னைப் பேரரசரெனப் பிரகடனப் படுத்திக் கொண்டு, **பாட்னு** மீது படையுடன் சென்று, **ராம் நாராயணைத்** தோற்கடித்தார்; ஆனால் ராம் நாராயண் அந் நகரில்—

**பிப்ரவரி 20, 1760** வரைத் தாக்குப் பிடிக்க, கர்னல் **கேயோ** பிரிட்டிஷ் படையுடன் வந்து, புதிய பேரரசரை (**அலி கௌகரை**)த் தோற்கடித்தார்; பாரிசத்தில் படை நடத்தி மொகலாயர் **முர்ஷிதாபாத்** நோக்கிச் சென்று, அங்கு ஆங்கிலேயர்கள் போர் அணியில் நிற்பதைக் கண்டு **பாட்னு**வுக்குத் திரும்பினார். அந் நகருக்கு உதவுவதற்கு காப்டன் நாக்ஸ் என்பவரைக் கேயோ அனுப்பினார் ; 200 ஐரோப்பியர்களுடனும், ஒரு சிப்பாய்ப் பட்டாளத்துடனும், ஒரு சிறு குதிரைப்படை அணியுடனும் **நாக்ஸ்** முன்னேறி, மொகலாயர்களைத் தோற்கடித்து, பாட்னுவில் முகா மடித்தார் ; ஆனால் **கங்கையின் அக்கரையில்** 30,000 பேர்களுடனும் 100 பீரங்கிகளுடனும் **பூர்ணியா நவாப்** வந்து சேர்ந்தார்.

**மே 20, 1760. நாக்ஸின் வெற்றி;** இவர் தனது துணையான **ராஜபுத்திர ராஜா ஷிதாப் ராய்** என்பவரது உதவியுடன் **தாக்குவதற்காக** நதியைக் கடந்தார் ; மொகலாய சேனை ஓட்டியடிக்கப்பட்டது ; நாக்ஸும் ராஜபுத்திரரும் பாட்னுவுக்குள் நுழைந்தனர் ; அவர்களிடம் 300 வீரர்கள் மட்டுமே எஞ்சியிருந்தனர்.

**ஜனவரி 6, 1761. பானிப்பட்டுப் போர்** (பக்* 58ஐப் பார்க்க) **சதாசிவ பாவோவின்** தலைமையிலான **மகாராஷ்டிரர்களுக்**கும், **அகமதுகான் அப்தாலியின்** தலைமையிலான துரானி அல்லது **அப்தாலி (ஆப்கானியக்குலம்)**களுக்கும் இடை

---

* [illegible]

யில். இந்தியாவில் மொகலாயப் பேரரசு அடியோடு தோற்கடிக்கப்பட்டு விட்டது; மகாராஷ்டிரர்களின் பலம் சிதறடிக்கப்பட்டு விட்டது; **அகமதுகானும்** மிகப் பலவீனமுற்று ஆப்கானிஸ்தானத்துக்குத் திரும்ப வேண்டியதாயிற்று.

**1757.** **ரகோபா** (ஆலம்கீர் IIன் முதன் மந்திரி காசியுதீனால் அழைக்கப்பட்டு) **டெல்லியை** அகமது கானிடமிருந்து பிடித்தார்; அகமதுகானின் குமாரர் **இளவரசர் தைமூரைப் பஞ்சாபில்** தோற்கடித்த பின், மகாராஷ்டிரர்கள் **தக்காணத்துக்குத்** திரும்பினர். **பூனாவுக்குத்** திரும்பியதும் **ரகோபா, பேஷ்வாவின் ஒன்றுவிட்ட சகோதரரான சதாசிவ பாவோவுடன்** சண்டை போட்டுக் கொள்ளவே, படைத் தலைமையிலிருந்து அவர் விலக்கப்பட்டு, அவருக்குப் பதிலாக சதாசிவா நியமிக்கப்பட்டார்.

**1759.** **அகமதுகான்** நான்காம் தடவையாக இந்தியா மீது படையெடுத்து, **காசியுதீன் ஆலம்கீர் II**ஐக் கொன்றுவிட்ட அதே சமயத்தில், **நஜிப் உத் தௌலா** என்ற **ஆப்கானியப்** படைத்தலைவர் ஒருவர் **மல்ஹார் ராவ் ஹோல்கார், தாதாஜி சிந்தியா ஆகிய மகாராஷ்டிரத் தலைவர்களை** கங்கைக்கு அப்பால் விரட்டியடித்துவிட்ட அதே சமயத்தில், **லாகூரைப்** பிடித்தார். அதன் பிறகு—

**1760ன் முன் பகுதி—அகமதுகான்** படையுடன் **டெல்லி முன்** [தோன்றினார்]. **பாவோ** (**சதாசிவா**) அவருக்கெதிராக மிகப் பெரும்படையுடன் சென்றார்; **பானிப்பட்டில் இறுதி முடிவு ஏற்பட்டது.**

**1760.** **கிளைவுக்குப் பதிலாக வான்சிடார்ட் வங்காளக் கவர்னர்;** அவர் ஒரு **சென்னைச் சிவில் அதிகாரியாக** இருந்ததால், வங்காள **அதிகாரிகளால்** "வெறுக்கப் பட்டார்".—**வான் சிடார்ட் மீர்ஜாபரை** விலக்கிவிட்டு, அவரது மருமகன் **மீர்காசிம்** என்பவரைச் சுபாதாராக்கினர்; தனது உதவித்தொகையாகிய 2,00,000 பவுன்களையும் தவறாமல் ஆங்கிலேயர்களுக்குச் செலுத்திக்கொண்டு, இந்த ஆசாமி **கல்கத்தாவில்** வாழ்ந்தார்; **தனது பிரதேசத்தில் மூன்றிலொருபாகத்தை** அதாவது **மிட்னபூர், பர்துவான், சிட்டகாங்** ஆகிய **மாவட்டங்களைக் கம்பெனிக்கு முழு உரிமையுடன் கொடுத்துவிட்டார்.** ஆனால் பிறகு, வான்சிடார்டின் தலையீட்டினால் எரிச்சலுற்று, தனது படையை அதிகரிக்கவும் பயிற்றவும் ஆரம்பித்தார்.—**இதற்கிடையில் அலிகௌகர், பேரரசர் ஷாஆலம்** என்ற பட்டத்துடன், டெல்லியை மீண்டும் பெற இயலாமல் **பீஹாரை நாசப் படுத்தி,** இறுதியாக **ஆங்கிலேயர்களுடன் நேச உடன்படிக்கை** செய்து கொண்டார்; அவர்களும் **பாட்னவில்** அவரைப் பேரரசராக அங்கீகரித்தனர்; அவர்கள் செய்திருந்த **எல்லா** நியமனங்களையும் அவர் **உறுதிப்** படுத்தினர்.

**1762.** **மீர் காசிம் ராம் நாராயணைச்** சிறையிலிட்டு, **குடியானவர்களைத்** தனது **வரி** வசூல் அதிகாரிகள் கொடுமைப் படுத்தச்செய்து, இன்றும் பல கொடுமைகளையும் செய்தார்; ஆனால் **கம்பெனி** அவரிடத்தில் **கண்ட பழி** யானது இதுதான்; எருமைக்கடா போல் மந்த குணம் படைத்த மொகலாயப் பேரரசர் **பரூக்ஷேர்** (*பக். 56 ஐப் பார்க்க*) 1715ல் **கம்பெனிக்குக் கூட்டு ஸ்தாபனம் என்ற முறையில் துஸ்தக்** (இறக்குமதி செய்யும் சரக்கு

இப் பதிப்பில் பக். 81ஐ பார்க்க.

களுக்கு வரி விலக்கு) உத்தரவாதம் செய்திருந்தார்; ஆனால் தனிப்பட்ட (ஆங்கிலேய) வியாபாரிகள் எல்லோரும் இவ்வனுமதியைத் தங்களது உரிமையையென்று பிடித்துக் கொண்டனர். உரிமையின்றி இப்படி இந்த உரிமையை "குமாஸ்தாக்கள்" கைக்கொண்டதை மீர் காசிம் எதிர்த்தார்; அவரது வரிவசூல் அதிகாரிகள் அவரது ஆணைகளைச் செயல்படுத்த எண்ணி, வரிசெலுத்தப்படாத சரக்குகளைக் கைப்பற்றினர்கள்; அப்பொழுது கம்பெனியின் ஊழியர்களால் அவமதிக்கப்பட்டனர். மீர்காசிமுக்கு 9 சதவிகிதம் வரி [கம்பெனி ஊழியர்களால்] செலுத்தப் படும்என்று தனிப்பட்ட முறையில் வான்சிட்டார்ட் உறுதி யளித்தார்; கம்பெனிக் கவுன்சில் அவ்வுறுதியை ரத்து செய்து, மீர்காசிமின் அதிகாரிகள் வரியை வசூலிக்க முயன்றால் அவர்களைப் பிடித்துக் கைது செய்யும்படி முறையான ஆணை ஒன்றை வெளியிட்டது. துறை முகத்திலிருந்த மொகலாய வர்த்தகர்கள் அனைவருமே வரியின்றி தங்களது சரக்குகளை எடுத்துச்செல்லலாம் என்று அவர் களுக்கு ஒரு ஆணை ஈந்து மீர் காசிம் எதிர் நடவடிக்கை எடுத்தார்; இதன்மூலம் அவர்களையும் ஆங்கிலேயக் "குமாஸ்தாக்களுக்கு"ச் சமநிலையில் வைத்தார்.— பாட்னுவில் ஆங்கிலேய வியாபாரத் தலத்தின் தலைமை அதிகாரியான எல்லிஸ் வெளிப்படையாகப் போருக்கு ஆயத்தம் செய்தார். கம்பெனியின் உரிமைக் கோரிக் கைகளை வலியுறுத்துவதற்காகக் கல்கத்தாவிலிருந்து மாங்கிருக்கு அனுப்பப்பட்ட ஹே, அமியட் என்ற இரண்டு ஆசாமிகளும் மீர் காசிமின் ஆணையின்படி பிடிக்கப்பட்டனர். எல்லிஸின் நன்னடத்தைக்குப் பிணையாக ஹே வைத்துக்கொள்ளப்பட்டார்; அமியட் மீர் காசிமிடமிருந்து எழுத்து மூலமான ஆட்சேபனை யுடன் கல்கத்தாவுக்குத் திருப்பியனுப்பப்பட்டார்.— எல்லிஸ் உடனே பாட்னு நகரையும் கோட்டையையும் கைப்

பற்றினர். தங்கள் கண்ணில் தென்படும் ஒவ்வொரு ஆங்கிலேயரையும் பிடிக்கும்படி மீர்காசிம் தனது அதிகாரிகளுக்கு உத்திரவிட்டார்; அமியட் தான் கல்கத்தா செல்லும் வழியில் மொகலாயப் போலீசிடம் தன் வாளை ஒப்புவிக்க விருப்பமின்றி அவர்கள் மீது சுட்டு, அக் கைகலப்பில் தானே கொல்லப்பட்டார்.

**1763.** மீர்காசிம் தனது படையைப் பெருக்கி, மொகலாயப் பேரரசருக்கும் (அலி கௌகர்), ஔத் சுபாதாருக்கும் உதவிக்காக வேண்டுகோள் விடுத்தார்; அவர் பதவியிலிருந்து விலக்கப்பட்டு விட்டார் என்று ஆங்கிலேயர்கள் அறிவித்து, அவருக்குப் பதிலாக மீர்ஜாபரை மீண்டும் நியமித்தனர்.

**ஜூலை 19, 1763.** ஆங்கிலேயர்களுக்கு வெற்றி (போர் நடவடிக்கையின் ஆரம்பம் அது). ஜூலை 24ல் மீண்டும் வெற்றி; ஆகஸ்டு 2ல், முர்ஷிதாபாத்தைப் பிடித்தபின், கேரியாவில் ஆங்கிலேயர்கள் வெற்றி; மீர்காசிம் தன்னிடத்திலிருந்த ஆங்கிலேயக் கைதிகளை எல்லாம், முர்ஷிதாபாத்தில் பெரிய வட்டிக்கடைக்காரர்களாகிய சேட்டுகளையும் உள்ளிட்டு, தீர்த்துக்கட்டினர்; மேலும் ராம் நாராயணையும் கொன்றார்.

**நவம்பர் 1763.** உத்வானுல்லாவிலிருந்த மீர்காசிமின் முகாமை ஆங்கிலேயர்கள் பிடித்தனர்; இந்த மொகலாயர் [மீர்காசிம்] பாட்னவுக்கு ஓடினர்; அங்கு மொகலாயப் பேரரசர் ஷா ஆலமும் ஔத்சுபாதாரும் பெரும் படையுடன் அவரும் சேர்ந்து கொண்டனர்; ஆனல் ஆங்கிலேயர்கள் பாட்னவைத் தாக்குதல் மூலம் பிடித்தனர்.

**1764.** சம்பளம் பாக்கிக்காக ஆங்கிலேயர்களுக்கெதிராகப் பாட்னவில் சிப்பாய்கள் கிளர்ச்சி செய்தனர்; எதிரியுடன் சேருவதற்காகச் சிப்பாய்கள் அந்நகரிலிருந்து வெளி

யேறினர் ; அவர்கள் மேஜர்மன்ரோவால் தாக்கித் தோற்கடிக்கப்பட்டு, பாட்னுவுக்கு மீண்டும் கொண்டுவரப்பட்டனர்; அங்கு கலகத் தலைவர்கள் பீரங்கிகளில் இட்டுச் சுடப்பட்டனர் (இந்த தயாள நடவடிக்கையானது வெகு நாளைக்கு முன்னரே, அந்த முதல் சிப்பாய் எழுச்சியின் பொழுதே கையாளப்பட்டது !)

க்டோபர் 22, 1764. மீர் காசிம் பக்சாரில் தனது அரணமைந்த முகாமில் மன்ரோவால் தாக்கப்பட்டுத் தோற்கடிக்கப்பட்டு, உயிர்பிழைக்க ஔத்துக்கு ஓடினார்.

764. பக்சாரில் (பாட்னுவுக்கு வடமேற்கில்) அடைந்த இந்த வெற்றியின் மூலம் ஆங்கிலேயர்களின் கையில் கங்கைக்கரை முழுதும் [சிக்கியது]; ஆங்கிலேயர்கள் இந்துஸ்தானத்தின் உண்மையான எஜமானர்கள் ஆயினர். வான்சிடார்ட் உடனே ஷுஜாஉத்தௌலாவை ஔத் நவாபாகவும், மீர்ஜாபரை வங்காளம், பீஹார், ஒரிசா ஆகியவற்றின் நவாபாகவும் (மீர்ஜாபர் 53 லட்சம் உதவித் தொகை செலுத்த வேண்டியது); ஷா ஆலத்தை மொகலாயப் பேரரசராகவும் அங்கீகரித்தார்; ஷா ஆலம் அலகாபாத்தில் குடியிருப்பார்.

1765. மீர் ஜாபர் இறந்தார்; அவரது குமாரர் நஜிப்உத்தௌலா அவரது வாரிசாக ஏற்றுக்கொள்ளப்பட்டார். வான்சிடார்ட்டின் பதவிக்காலம் அதே ஆண்டில் முடிவுற்றது; பிரவுவாக்கப்பட்ட கிளைவ் அவருக்குப் பின் கவர்னர் ஆனார்; இடைக்காலத்தில் ஸ்பென்சர் [கம்பெனியின் கல்கத்தா கவுன்சிலின்] தலைவராக நியமிக்கப்பட்டார்.

கிளைவின் இரண்டாவது நிர்வாகம், 1765-1767. (லண்டனில் கிழக்கிந்திக் கம்பெனியின் டைரக்டர்களுடன் கிளைவ்

சண்டை போட்டுக்கொண்டார்; அவரது ஜாகீருடைய குத்தகைப் பணம் செலுத்துவதை நிறுத்தும்படி அவர்கள் கல்கத்தாவுக்கு உடனே உத்திரவு அனுப்பி ஞர்கள்.)

**மே 3, 1765.** கிளைவ் பிரபு, வங்காளக் கவர்னர், கவுன்சில் தலைவர், பிரதம தளபதி ஆகியக் கூட்டதிகாரங்கள் தரப்பெற்று

கல்கத்தாவில் ஊழல் முதலியவற்றைக் கிளைவ் கண் டார் (பக். 103). கிளைவுக்கு உதவி செய்வதற்கு நியமிக்கப்பட்ட நான்குபேர் கொண்ட கமிட்டியால் ஜென ரல் கார்னுக, திரு. வெரெல்ஸ்ட், திரு. சம்னர், திரு. சைக்ஸ் ஆகியோர் இருந்தனர்—வங்காளம், ஒரிசா, பீஹாரின் நவாபாகிய காமாந்தரகாரர் நஜிம்உத்தௌலாவுக்கு ஆண்டு வரும்படி 53 லட்சம் ரூபாய் தருவதாகக் கூறித் தனது அதிகாரங்கள் அனைத்தையும் கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் கொடுத்து விட்டுப் பதவி துறக்கும்படி கிளைவ் செய்தார்; அந்த மூன்று மாவட்டங்களிலும் பிரதேச உரிமை களை இனுமாகத் தந்ததற்காக மொகலாயப் பேரரசருக்கு 26 லட்சம் ரூபாய் ஆண்டுத் தொகையும் அவர் கொடுத் தார்; கோரா, அலகாபாத் ஆகியவற்றின் வருவாய்களை யும் பெற்ருர்; மேலும், புதிதாகப் பெறப்பட்ட பிர தேசத்தின்மீதான எல்லா அதிகாரங்களையும் கிழக்கிந்தியக் கம்பெனிக்கே மொகலாயப் பேரரசர் கொடுத்தார். இவ்வாருக, திவானி[1]யையும் நிசாமத்[2]தையும் ஆங்கிலேய அரசாங்கம் (அரசாங்கம் அல்ல, கிழக்கிந்தியக் கம் பெனி—மொ. ர்.) பெற்றது. அதே ஆண்டில் அதாலத் முறை[3]யை அரசியல் சட்ட ரீதியானதாக கிளைவ்

1. நிதி இலாகா
2. போர் இலாகா
3. சுதேச நிர்வாகத்தின் மூலமான அரசாங்கம்.

ஆக்கினர் (பக். 104, 105ஐப் பார்க்க) இவைகள் மூலமாக, 2½ கோடி மக்கள் மீது முழு ஆட்சியையும், 4 கோடி ரூபாய் ஆண்டு வருவாயையும் கிழக்கிந்தியக் கம்பெனி பெற்றது. (இறுதியாக 1772ல் தான் முழு நிர்வாகத்தையும் ஆங்கிலேய அதிகாரிகளின் கையில் ஒப் படைக்கும்படி வாரன்ஹேஸ்டிங்ஸ் அதிகாரம் வழங்கப் பட்டார்.)

னவரி 1, 1766. இந்நாளிலிருந்து இரட்டைப்படி (batta மொ. ர்) தரப்படுதல் நிறுத்தப்படவேண்டும் என்று கிளைவ் கட்டளையிட்டார் ("படி" என்று கூறப்படுகின்ற, சம் பளத்துக்கு மேலாகக் கொடுக்கப்படும் தொகையானது போர் முனையில் பணியாற்றும் பொழுது ஆங்கிலேய அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்டது; சமீபத்திய சண்டையின் பொழுது இது இரட்டிப்பாக்கப் பட் டிருந்தது). இதன் விளைவு வங்காள அதிகாரிகளின் கலகம்; அவர்கள் எல்லோரும் சேர்ந்து தங்களது ராஜிநாமாக் கடிதங்களை அனுப்பி வைத்தனர்; பீஹாரின் மீது 50,000 மகாராஷ்டிரர்கள் படையெடுத்து வரும் செய்தி அச்சம யத்தில் கிடைத்ததால், இக்கலகம் மேலும் அதிகம் வருந்தத் தக்கதாகத் தோன்றியது. கிளைவ் எல்லா ராஜி நாமாவையும் ஏற்றுக்கொண்டு, குற்றவாளிகளை இரா ணுவ நீதி மன்றங்களுக்கு அனுப்பி வைத்து, சென்னை யிலிருந்து எல்லாப்பயிற்சிப் படையினரையும் அதிகாரிகளை யும் கலகக்காரர்களின் பதவிகளில் அமர்த்தினர். தங் களது அதிகாரிகளின் உதாரணத்தைப் பின்பற்ற விரும் பிய பிரிட்டிஷ் துருப்புகள், விசுவாசமுள்ள சிப்பாய்களால் 1 தடுத்து நிறுத்தப் பட்டனர்! கல்கத்தாவில் படைத்தலை வராயிருந்த சர் ராபர்ட் பிளெட்சர், உண்மையோ தவறோ,

1. சிப்பாய்கள் என்பது சுதேசப் போர் வீரர்க்களைக் குறிக்கிறது—மொ. ர்.

சதித்திட்டத்துக்குமறைமுகமாக உடந்தையாயிருந்தார் என்று, உடனடியாக பதவியிலிருந்து விலக்கப்பட்டார்.

**உள்நாட்டு வர்த்தகத் தகராறுகள்.** உப்பு, பாக்கு ஆகியவைகளில் ஏகபோகமாக உள்நாட்டு வர்த்தகம் செய்யும்படி தங்களது ஊழியர்களைக் கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர்கள் (கிளைவ் இந்தியாவில் இல்லாத சமயத்தில்) அனுமதித்திருந்தனர்; கம்பெனியாட்கள் எல்லோருமே ஊகவாணிபத்தில்குதித்து குடியானவர்களின் வயிற்றலடித்தனர்; நாட்டு மக்களிடத்தில் அதிருப்தி உள் நாட்டு வர்த்தகத்தை வளர்ப்பதற்காக ஒரு சங்கத்தை அமைத்து, கிளைவ் இதற்கு முற்றுபுள்ளி வைத்தார் (! ?) இச்சங்கமானது ஒரு நிலையான லாபத்தைக் கம்பெனிக்குக் கொடுத்து, சுதேசிகள் நஷ்டமடையும் படியான தனியார்களின் ஊகவாணிபத்தைத் தடைசெய்யும்; இரண்டாண்டுகளுக்குப்பிறகு, தாய்நாட்டிலிருந்த இயக்குநர்கள் போர்டின் கட்டளையின்படி இச்சங்கமானது கலைக்கப் பட்டு, ஒரு முறையான கமிஷன் அமைக்கப்பட்டது.

**1767.** நோய் காரணமாக கிளைவ் பிரபு ராஜினமா. அவர் இங்கிலாந்து திரும்பியதும், கம்பெனியின் டைரக்டர்களால் கொடுமையாகத் தொல்லைப்படுத்தப்பட்டார்.

**1767 - 1769.** கல்கத்தாவிலிருந்த (கவுன்சிலின்) தலைவர் வெரெல்ஸ்ட் வங்காளக் கவர்னர் ; **1772-1785.** வாரன் ஹேஸ்டிங்ஸ். வங்காளத்துச் சிவில் அதிகாரி; **1732**ல் பிறந்தார்; **1750** ல் குமாஸ்தாவாகக் கல்கத்தாவுக்கு அனுப்பப்பட்டார். **1760**ல் கல்கத்தா கவுன்சிலின் அங்கத்தினர்.

**1769.** பானிப்பட்டுத் தோல்விக்குப் பழிவாங்குவதற்காக **3.00,000** மகாராஷ்டிரர்களைப் பேஷ்வா மாதுராவ் வடக்கு நோக்கி அனுப்பினர்; [அவர்கள்] ராஜபுதனத்தைக்

கொள்ளையிட்டு, திறைசெலுத்தும்படி ஜாட்களை வற்புறுத்தி, டெல்லியை நோக்கி முன்னேறினர்; 1756-ல் அகமதுகானால் அங்கு நியமிக்கப்பட்டவரான ரோகில்லரான நஜிப் உத்தௌலாவின் குமாரரான சபிதா கான் அப்பொழுது டெல்லியை நன்கு ஆண்டுவந்தார். ஷா ஆலம் வேறு யாருடைய உதவியையும் கோராமல் மகாராஷ்டிரர்களின் பாதுகாவலிலேயே தான் இருக்க ஒப்புக்கொண்டால், அவரை வெற்றிகரமாக டெல்லியில் மீண்டும் அமர்த்துவதாக அவர்கள் [மகாராஷ்டிரர்கள்] கூறினர். அவர் ஏற்றுக்கொண்டார்.

**டிசம்பர் 25, 1771.** அந்த ஆசாமி (ஷா ஆலம்) மொகலாயப் பேரரசராக டெல்லியில் பேஷ்வாவால் முடிசூடப்பட்டார்.

**1772.** மகாராஷ்டிரர்கள் ரோகில்கண்டுமீது படையெடுத்து அதைப்பிடித்து, தோவாப் பகுதியை வென்று, அம் மாகாணம் முழுவதையும் நாசப்படுத்தினர்; அவர்கள் சபிதாகானைக் கைது செய்து அவரது சொத்தையும் பறிமுதல் செய்தனர்.

**இலையுதிர்காலம் 1772.** ரோகில்லர்களுடனும், ஔத் நவாப் முதலமைச்சராகிய[1] ஷுஜா உத்தௌலாவுடனும் (மகாராஷ்டிரர்கள்) உடன்படிக்கை செய்துகொண்டனர்; 40 லட்சம் ரூபாய் செலுத்துவதாக ஷுஜா உத்தௌலா தந்த உறுதிமொழியை ஏற்று அவர்கள் திரும்பிச் சென்றனர்; ஆனால் அவர் அவ்வுறுதி மொழியைக் காப்பாற்றவில்லை.

**1773.** மகாராஷ்டிரர்கள் ஔத்தைக் கொள்ளையிடத் தீர்மானித்தனர்; அவர்களுக்கு எதிராக, ரோகில்லர்கள் ஹாபிஸ் ரஹ்மத்தின் தலைமையில் ஔத் நவாபுடன் இணைந்து

---

1 ஔத் நவாப், மொகலாயப் பேரரசருக்கு முதலமைச்சராகவும் இருந்தார்—மொ. ர்.

கொண்டனர். அறிவற்ற ஷா ஆலம் மகாராஷ்டிரர்களைத் தாக்கினார்; முழுவதும் முறியடிக்கப்பட்டார்; கோரா, அலகாபாத் மாவட்டங்களைக் கொடுக்கும்படி அவரை வெற்றிபெற்றவர்கள் கட்டாயப்படுத்தினர்; ஆனால் அம்மாவட்டங்கள், பிரிட்டிஷ் காரர்களுக்குச் சொந்தமான வங்காளப் பிரதேசத்தின் ஒரு பகுதியையும் உள்ளிட்டிருந்தன. பிரிட்டிஷ் "மிருகங்க"ளுக்கு அதிர்ஷ்ட மிருந்தது; ஏனெனில், தெற்கு நோக்கிப் படையெடுப்பதற்காகப் பூனாவிலிருந்த பேஷ்வா மகாராஷ்டிரர்களைத் தக்காணத்துக்குத் திருப்பி யழைத்தார்.

**இங்கிலாந்தில் நிகழ்ச்சிகள்.** கம்பெனி ஊழியர்களின் மிகப் பெரும் செல்வங்களைக் கண்டு அங்கு பொறாமை; மேலும், அந்த ஆசாமிகளின் ஆடம்பர வாழ்க்கை முறை. இச் செல்வம் சம்பாதிக்கப் பட்ட வகை - சுதேசச் சிற்றரசர்களை மொத்தமாகப் பதவிநீக்கம் செய்தல்; கொடுங்கோன்மை, பலாத்காரமாகப் பணம் பறித்தல் ஆகிய இழிவான முறைகள் — பார்லிமென்ட்டில் கண்டிக்கப்பட்டது; அதே போல் கம்பெனி முறை முழுதுமே கண்டிக்கப் பட்டது. 500 கூட்டுரிமைப் பங்கு பெற்றிருப்பவர் ஒருவர் உரிமையாளர்கள் சபை (Court of proprietors-மொ.ர்.) யின் கூட்டங்களில் ஒரு ஓட்டு பெற்றிருந்தார். இந்த விதிகள் பரந்த அளவில் லஞ்ச ஊழலையும், புதிய இயக்குநர்களின் ஆண்டுத்தேர்தலில் ஊழலையும் தோற்றுவித்தன. ஒரு சமயம், திரு. சுல்லிவனை இயக்குநர் குழுவுக்குத் தேர்ந்தெடுப்பதற்காக மட்டுமே ஷெல்போர்ன் பிரபு பவுன் 1,00,000 செலவழித்தார். இந்திய இல்லமானது [1] எப்பொழுதும் சதிகளுக்கும் லாபவேட்டைக்கும் களனாயிருந்தது.

[1] இந்தியா இல்லம் என்பது லண்டனில் கிழக்கிந்தியக் கம்பெனியின் தலைமை அலுவலகத்தின் பெயர்—மொ. ர்.

**1771.** பார்லிமெண்ட் குறுக்கிட்டு கல்கத்தா சென்று கம்பெனியின் ஸ்தாபன அமைப்பு முழுவதையும் பரிசீலனை செய்யவும், சீர்திருத்தங்களைச் செய்யவும் மூன்று பேர்களடங்கிய கமிட்டி ஒன்றை நியமித்தது. இந்த மூவரும், அதாவது வான்சிடார்ட், ஸ்க்ராப்டன், கர்னல்போர்டு ஆகியோர், நன்னம்பிக்கை முனைக்கு அப்பால்-தெய்வச் செயல்!-கப்பல் மூழ்கியதில் உயிரிழந்தனர்.

இதையடுத்து உடனேயே, இந்தியாவில் ஆங்கிலேயப் பிரதேசங்கள் உண்மையில் யாருக்குச்சொந்தமாக இருக்கவேண்டும் என்பதுபற்றி கிழக் கிந்தியக் கம்பெனிக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் இடையில் தகராறு.

இந்த விவாதங்களின் பொழுது கம்பெனியின் தற்காலிகத் திவால் நிலைமை வெளியாயிற்று ; இந்தியாவில் 10லட்சம் பவுன்களும், இங்கிலாந்தில் 15 லட்சமும் பற்றுக்குறை. பொதுக்கடன் ஒன்று பெறுவதற்கு இயக்குநர்கள் பார்லிமென்டிடம் அனுமதி வேண்டினார்கள்; இந்தியாவின் அளவிலாச் செல்வம்பற்றிய தவறான எண்ணங்களில் இடி விழுந்தது !

**1772.** பொறுக்குக்கமிட்டி நியமிக்கப்பட்டது; தனி நபர்கள் சிலர் தங்களைச் செல்வந்தர்களாக ஆக்கிக் கொள்வதற்க்குக் கையாண்ட ஏமாற்று, பலாத்காரம், கொடுங்கோன்மை ஆகியவைகளைக்கொண்ட அந்த முறை முழுதும் அம்பலப் படுத்தப்பட்டது; பார்லிமென்டில் உணர்ச்சிமிக்க விவாதங்கள்; இந்தியா விவாகாரங்கள்பற்றி கிளைவ் பிரபுவின் பிரசித்தி பெற்ற பேச்சு.

**1773.** (கிழக் இந்தியக் கம்பெனி பற்றிய) புனர் நிர்மாணச் சட்டம் இரண்டு சபைகளிலும் நிறைவேற்றப்பட்டது: ஒரு ஓட்டு பெறத் தகுதியளிக்கும் கூட்டுப் பங்கின் தொகை பவுன் 500லிருந்து பவுன் 1000 ஆக உயர்த்தப்

பட்டது; உரிமையாளர்கள் சபையில் நான்கு ஒட்டுக்களுக்கு அதிகமாக எந்த உரிமையாளரும் பெற்றிருக்கக் கூடாது. கல்கத்தா கவர்னருக்குக் "கவர்னர் ஜெனரல்" என வேறு பெயரிடப்பட்டது; இவர் எல்லா ராஜதானிகள்மீதும் தலையாய அதிகாரம் பெற்றிருப்பார்; பார்லிமென்டால் ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை நியமிக்கப்படுவார். நீதி மன்றங்களின் புதிய அமைப்பு (பக்-109, 110)—வாரன் ஹேஸ்டிங்ஸின் ஓரளவு ஏற்றுக்கொள்ளப்பட்ட திட்டத்தினால் (1780ல், கவுன்சிலுடன் கூடிய கவர்னர்-ஜெனரல் (Governor-General in Council - மொ-ர்) புதிதாகப் பெறப்பட்ட பிரதேசங்களுக்கு விதிகளும் சட்ட திட்டங்களும் செய்யும் அதிகாரத்தைப் பார்லிமென்டிடமிருந்து பெற்றார்; அச் சமயத்தில் வாரன் ஹேஸ்டிங்ஸின் 23-வது விதியானது ஒருவரும் மறுப்புக் கூறுமல் சட்டமாக்கப்பட்டது; முகம்மதியர்களுக்குக் கொரானும், இந்துக்களுக்கு வேதங்கள் அல்லது தர்மசாத்திரங்களும் சட்டத்தின் அளவு கருவியாக இருக்க வேண்டுமென 27-வது பிரிவு திட்டவட்டமாகக் கூறியது) சுதேச மக்களுக்கு அவர்களது சொந்தச் சட்டங்களே உபயோகப்படுத்தப்படும்; வாரன் ஹேஸ்டிங்ஸின் 23-வது விதியின்படி மௌல்விகளும் (முகமதியச் சட்டத்தை விரித்துக் கூறுபவர்கள்) பண்டிதர்களும் (இந்துச் சட்டத்தை விளக்கிக் கூறுபவர்கள்) ஒவ்வொரு நீதிமன்றத்திலும் தவருமல் ஆஜராகும்படி நியமிக்கப்பட்டனர்.

## IV சென்னையிலும் பம்பாயிலும் விவகாரங்கள், 1761-1770.

**1771.** தக்காண சுபாதார் சலபத் ஜங்கை அவரது சகோதரர் நைசாம் அலி பிடித்துச் சிறையிலிட்டுத் தன்னையே நைசாம் என அறிவித்துக் கொண்டார்.—"கம்பெனி நவாப்" ஆன (கர்னாடகத்து நவாப்) முகம்மது அலியிடமிருந்து, அவருக்குக் கொடுப்பதாக உறுதி கூறப்பட்ட "ஆங்கிலேயத் துணைப்படை" துருப்புக்களின் செலவுக்காக 50 லட்சம் ரூபாயை சென்னைத் தலைவர் கேட்டார்; தஞ்சாவூரைக் கொள்ளையடிக்கும்படி அவர்களுக்கு [ஆங்கிலேயர்களுக்கு] முகம்மது கூறினார்; தஞ்சாவூர் ராஜாவை, அவர் பணத்தைச் செலுத்தாவிட்டால் அவரது பிரதேசங்கள் "பறிமுதல் செய்யப்படும்" என்று, சென்னைத் தலைவர் மிரட்டினார் : அவர் இணங்கினார்; இந்தவிதமாக கர்னாடகத் துணைப்படையின் செலவு சரிக்கட்டப்பட்டது !

**1763.** "பாரிஸ் உடன்படிக்கை"யானது முகம்மது அலியைக் கர்னாடக நவாபாகவும், சலபத் ஜங்கை தக்காண சுபாதாராகவும் அங்கீகரித்தது. இதன் பிறகு சலபத் ஜங் தனது சகோதரர் நைசாம் அலியால் தீர்த்துக்கட்டப்பட்டார்; இப்பொழுது சுபாதாராக இருந்த நைசாம் அலி ஆங்கிலேயர்களின்மீது போர்ப் பிரகடனம் செய்து, முகம்மது அலியைக் கர்னாடக நவாபாக அங்கீகரிக்க மறுத்தார். சில ஆங்கிலேய ரெஜிமென்டுகள் அவரைப் பயமுறுத்தி அமைதியாக்கின. அதே சமயத்தில், தற்காலத்திய அல்லது எதிர்காலத்திய எந்த தக்காணச் சுபாதாரிடமிருந்தும் கம்பெனியின் துணையாகிய கர்னாடக நவாபைச் சுதந்திரமானவர் என அறிவிக்கும் ஆணை

ஒன்று **பொம்மை டெல்லிப் பேரரசரிடமிருந்து** பெறப்பட்டது. இவ்வாருக, **கர்னுடகம் சுதந்திர அரசாக** ஆயிற்று.

**ஆகஸ்டு 12, 1765.** வட சர்க்காரப் பகுதிகளை ஆங்கிலேயர் **களுக்குக்** கொடுத்துவிடுவதற்கு பொம்மைப்பேரரசரை **கிளைவ்** இணங்கும்படி செய்தார்; **நைசாம்** இந்த [நடவடிக்கையை] அங்கீகரிக்க மறுத்து, **இப்பிரதேசங்கள் பிரெஞ்சுக்காரர்களுக்குக் கொடுக்கப்பட்டுவிட்டன** (இது உண்மை) என்று கூறி, **சென்னைத் தலைவருக்கு** மிரட்டல் கடிதம் அனுப்பினுர்; சென்னைத் தலைவர் **கர்னல் கேயோவை** ஹைதராபாத்துக்கு அனுப்பி, அங்கு—

**நவம்பர் 12, 1766—நைசாமுடன் முதல் உடன்படிக்கை [செய்யப்பட்டது];** அதன் ஷரத்துக்களின்படி **வட சர்க்காரை நைசாமிடமிருந்து ஆங்கிலேயர்கள்** வைத்திருப்பர்; **கம்**பெனி அவருக்கு **ஆண்டு உதவித்தொகை** 8 லட்சம் ரூபாய் கொடுக்கவேண்டும்; அம்மாவட்டத்தைக் **காப்**பதற்காக 6 பீரங்கிகளுடன் 2 காலாட்படைப் பட்டாளங்களை அனுப்பவேண்டும்.

**1761. ஹைதர் அலி மைசூர் ராஜா ஆகி, 1763-ல் பெட்னுரையும், 1764-ல் தென் கன்னடத்தையும்** பிடித்தார்.

**ஹைதர் அலி** பிறந்தது **1702;** தந்தை **பதே முகம்மது** என்ற **மொகலாய அதிகாரி;** இவர் பஞ்சாபில் ஒரு சிறிய துருப்பின் தலைவராக இருந்தபொழுது இறந்தார்; இவர் இறக்கும்பொழுது இவரது மகன் தன் கீழ் 200 **ஆட்களுடன் நாய்க்** (இது மொகலாயப் படையில்=பிரெஞ்சுப் படையில் காப்டன் ; இப்

பொழுதெல்லாம் சுதேசிப் படையில் கார்ப்பொரல் தான் நாய்க் என அழைக்கப்படுகிறார்) ஆக இருந்தார். 1750-ல் ஹைதர் அலி தனது 200 ஆட்களுடன் மைசூர் படையைச் சேர்ந்தார். அச்சமயத்தில் மைசூர் ராஜா எல்லா அதிகாரத்தையும் தன் முதலமைச்சர் நஞ்சராஜ் என்பவரிடம் ஒப்படைத்துவிட்டிருந்தார். துருப்புக்கள் தொகுதி ஒன்றைத் திரட்டி அதைப் பராமரிக்க வேண்டும் என்ற உத்தரவுடன் திண்டுக்கல் கோட்டையின் தலைவராக 1755-ல் ஹைதர் அலி நியமிக்கப்பட்டார்; கொள்ளையடித்துத் திரிந்தும், பக்கத்துப் பிரதேசங்களிலிருந்த எல்லாக் கொலைகாரர்களையும் கொள்ளைக்காரர்களையும் தனது கோட்டைக்குள் வரவழைத்தும் அவர் துருப்புக்களைத் திரட்டினார் அவர்கள் பெரு எண்ணிக்கையில் அவரிடம்; திரண்டு வந்தனர். இவ்வாறாக 1757ல், பேஷ்வா மைசூரைப் படையெடுத்த பொழுது, 10,000 மனிதர்களைக் கொண்ட ஒரு படையையும், பல பீரங்கிகளையும், வெடி மருந்தையும் ஹைதர் பெற்றிருந்தார். வெகுமதியாகப் பெரிய ஜாகீர் ஒன்றை அவர் பெற்றார். மகாராஷ்டிரப்படையைத் திருப்பியனுப்புவதற்காகக் கொடுக்கப்பட்ட தொகைகளால் மைசூர் கஜானா காலியாயிற்று; ஆகவே சம்பளம் கொடுக்கப்படாத போர் வீரர்களின் கலகங்கள்; இவைகளை ஒடுக்குவதில் ஹைதர் பெரும் உதவி புரிந்திருந்தார். 1759ல் ஹைதர் மைசூரில் படைத் தலைவராக்கப்பட்டு, மேலும் அதிக நிலத்தை வெகுமதியாகப் பெற்று, இம்முறையில்

தனக்கே சொந்தமாக ராஜ்யத்தில் பாதியைப் பெற்றுவிட்டார்; நஞ்சராஜ் அச்சமுற்று, ராஜினுமா செய்தார்; ராஜாவின் பொறுப்பு வாய்ந்த அமைச்சராக ஹைதர் ஆனார்; இவர் காண்டேராவால் தாக்கப் பட்டு, தற்காலிகமாக நஞ்சராஜை முதலமைச்சர் பதவியை மீண்டும் ஏற்றுக் கொள்ளச் செய்து, படையுடன் சென்று, காண்டேராவைத் தோற்கடித்துப் பிடித்து, அவரை அவர்-ஒரு இரண்டாம் லூயி XI—ஏளனத்துடன் ஒரு கிளியைப் போல இரும்புக் கூண்டில் அடைத்து, உண்பதற்கு அரிசி முதலிய தானியங்கள் சிலவற்றைப் போட்டார்; இதன் விளைவாகப் பறவை சீக்கிரம் இறந்துவிட்டது; பிறகு 1761ல் நஞ்சராஜையும் மைசூர் ராஜாவையும் தன் கையில் பதவிகளை விட்டு ராஜினுமா செய்யும்படி ஹைதர் கட்டாயப்படுத்தினார்.

**1765.** பேஷ்வா மாது ராவ், ஹைதர் அலிக்கு எதிராக ரகோஜி பான்ஸ்லே (அப்பொழுது பேரார் ராஜாவாக இருந்தவர்) யின் தலைமையிலும், தனது சகோதரர் ரகோபாவின் தலைமையிலும் படையை அனுப்பினார்; இருமுறை தோற்கடிக்கப்பட்டு, 32 லட்சம் ரூபாயுடன், மைசூர் எல்லைக்கப்பால் தான் வென்றிருந்த எல்லாப் பிரதேசங்களையும் கொடுத்து மகாராஷ்டிரர்களை ஹைதர் சமாதானப்படுத்தினார்.

**1766.** ஹைதர் அலி மீண்டும் தாக்குதலைத் தொடங்கி, கள்ளிக்கோட்டையையும் மலபாரையும் கைப்பற்றினார். பேஷ்வா நைசாமுடனும் ஆங்கிலேயர்களுடனும் ஹைதருக்கு எதிராகப் பெரிய நேச ஒப்பந்தம் ஒன்று செய்தார்.

**1767.** முதல் மைசூர் போர். ஜனவரி 1767ல் பேஷ்வா கிருஷ்ணு நதியைக் கடந்தார். அவர் கீழிருந்து மகாராஷ்டிரர்கள் வடக்கு மைசூரைக் கொள்ளையிட்டனர்; பேஷ்வாவுக்கு ஹைதர் பெருந்தொகைகளைக் கொடுத்து தனது துருப்புக்களைப் பூனுவுக்குத் திருப்பி அழைத்துச் செல்வதற்கு இணங்கச் செய்தார்.—நைசாம் ஹைதருடன் சேர்ந்து கொண்டார் (நஞ்சராஜுக்கு எதிராக நைசாமின் துரோகத்தைப் பற்றி பக்கம் 114ல் பார்க்க). எனவே கர்னல் ஸ்மித்தின் தலைமையிலிருந்த ஆங்கிலேயர்கள் பின்வாங்க வேண்டியதாயிற்று. செப்டம்பர் 1767ல் மைசூர், ஹைதராபாத்தின் கூட்டுப்படைகள் செங்கம் என்ற இடத்தில் (தென்னுற்காடு, சென்னை ராஜதானி) ஸ்மித்தைத் தாக்கின; அவைகளைத் தோற்கடித்து, அவர் அணி சிறிதும் குலையாமல் சிறந்த முறையில் சென்னைக்குப் பின் வாங்கினுர்.

**1768.** ஹைதராபாத்துத்துக்கு அருகில் ஓரிடத்துக்கெதிராக ஆங்கிலேயர்களின் போர் அணி வகுப்புக் காட்சி; நைசாம் நடுங்கி அடங்கி, வழிக்கு வந்தார்.

நைசாமுடன் (ஆங்கிலேயர்களின்) இரண்டாவது உடன்படிக்கை (மிகமிகக் குற்றங்கூறத்தக்கதும், கிழக்கிந்தியக் கம்பெனியின் குண இயல்பை மிகச் சிறப்பாகக் காட்டக் கூடியதும் ஆகும்!) இதன் ஷரத்துக்களின்படி, வட சர்க்காருக்காக ஆங்கிலேயர்கள் நைசாமுக்குத் "திறை செலுத்த" வேண்டியது. அப்பொழுது நைசாமின் சகோதரர் பசாலத் ஜங் பெற்றிருந்த "குண்டூர் சர்க்காரை" அவரது மரணம் வரை ஆங்கிலேயர்கள் கேட்கக் கூடாது. ஆங்கிலேயர்கள் சௌத்தை (அச்சுறுத்திப் பணம் பறித்தல்) மகாராஷ்டிரர்களுக்குச் செலுத்த வேண்டும் (இந்தக் கொள்ளைக்காரர்கள் எல்லை கடந்து

வருவதைத் தடுப்பதற்காகச் சுற்றியிருந்த சிறு அரசு களால் மட்டும் இது செலுத்தப்பட்டது; பண்டைக் காலத்தில் ஸ்காட்லந்து மலைக்குலங்களிடையில் நிலவியதைப் போன்றது!) இந்த சௌத்தைச் செலுத்துவதற்குப் பண வசதி பெறுவதற்காக—இத்திட்டத்தின் சிகரமாகத் திகழ்வது இதுதான்—ஹைதர் அலியிடமிருந்து கர்னுடகப் பாலக்காட்டை வென்று, அதைச் சேர்த்துக் கொள்வதால் கிடைக்கும் வருவாயிலிருந்து சௌத்தைச் செலுத்துவதென ஆங்கிலேயர்கள் உறுதி பூண்டனர்!

இலையுதிர்காலம் 1768. பம்பாயிலிருந்து வந்த படை மங்களூரையும் ஒனூரையும் வென்றது; இவை ஓரிரு மாதங்களுக்குப் பிறகு ஆங்கிலேயர்களிடமிருந்து ஹைதரால் மீண்டும் கைப்பற்றப்பட்டன; ஆனுல் அவர் இவ்வாறு மேற்குக் கரையில் போரிட்டுக் கொண்டிருந்த பொழுது, கிழக்குப் பக்கத்திலிருந்து கர்னல் ஸ்மித் மைசூருக்குள் நுழைந்து, அதில் கிட்டத்திட்ட பாதியைக் கைப்பற்றி, பெங்களூரை முற்றுகையிட்டார். மைசூர் படைகள் அவரை வந்த வழி முழுதும் திருப்பி விரட்டி கோலாருக்குத் துரத்தின.

1769. கோலாரில் ஆங்கிலேயர்கள் பல மாதங்கள் வாளாயிருந்தனர்; இதற்கிடையில் ஹைதர் கர்னுடகம், திருச்சினுப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி ஆகியவற்றை அழித்து நாசப்படுத்தினுர்; 1769 இறுதி வாக்கில் ஹைதர் தனது பிரதேசம் முழுவதையும் வென்று, தனது படையையும் பலப்படுத்தி விட்டார். அவருக்கெதிராகக் கர்னல் ஸ்மித் மைசூருக்குள் புகுந்தார்; ஆனுல் ஹைதர் பாரிசப் படை நடத்தல் மூலமாக அவரறியாமல் அவரைக்கடந்து திடீரென சென்னையின் முன் தோன்றினுர். "ஆபீஸ் பயல்களின் கிலி.

**1769.** அவர்கள் ஹைதருடன் தாக்குதலுக்கும் தற்காப்புக்குமான ஒரு உடன்படிக்கையைச் செய்து கொண்டனர்; தனது முகாமுக் கருகாகத் தீங்கின்றிப் படையுடன் ஹைதர் சென்று மைசூருக்குள் நுழைய அனுமதிக்கும்படி அவர்களது உத்திரவின் மீது கர்னல் ஸ்மித் கட்டாயப்படுத்தப்பட்டார்.

**1770.** ஹைதர் அலி இப்பொழுது மகாராஷ்டிரர்களுக்கு எதிராகக் கிளம்பி, மேற்கில் மாதுராவால் தேற்கடிக்கப்பட்டார். மாதுராவ் நஷ்ட ஈடாக ஒருகோடி ரூபாய் கேட்டார்; ஹைதர் மறுத்தார்; மகாராஷ்டிரர்கள் மீண்டும் முன்னேறினர். ஹைதர் இரவு முழுவதையும் குடித்துப் போக்கி, மேற்கு மலைத்தொடரில் மாட்டிக்கொண்டு, சுத்தமாக முறியடிக்கப் பட்டார் (பக். 116ஐப் பார்க்க). ஹைதர் ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு ஓடி வந்து, (1769ம் வருடத்திய) உடன்படிக்கையின்படி ஆங்கிலேயர்களிடமிருந்து உதவி கோரினார்; சென்னை விவகாரங்களை நிர்வகிப்பதற்காக பார்லிமெண்டால் அனுப்பி வைக்கப்பட்ட சர் ஜான் லிண்ட்சே, மகாராஷ்டிரர்களுடன் உடன்படிக்கை செய்து கொள்ள வேண்டும் என்றும், ஹைதர் அலியைக் கைவிட வேண்டுமென்றும் வலியுறுத்தினர். "வேண்டுமென்று செய்யப்பட்ட இந்த நம்பிக்கைத் துரோக"த்தின் விளைவாக, ஆங்கிலேயர்மீது என்றுந் தீராத பகைமை கொள்வதாகவும், அவர்களை நசுக்குவதாகவும் ஹைதர் அலியும் அவரது மகன் திப்புசாகிபும் கொரானின் மீது சபதம் செய்தனர். மகாராஷ்டிரர்களுக்கு உடனடியாக 36 லட்சம் ரூபாயையும், ஆண்டொன்றுக்கு 14லட்சம் வருவாய் தரும் பிரதேசம் ஒன்றையும் தந்து அவர்களிடமிருந்து ஹைதர் சமாதானத்தை விலை கொடுத்து வாங்கினார்.

## V வாரன் ஹேஸ்டிங்ஸின் நிர்வாகம். 1772—1785.

**ஏப்ரல் 13, 1772.** *தெரிந்தெடுக்கப்பட்ட வங்காளக் கவர்னராக* **வாரன் ஹேஸ்டிங்ஸ்** *தனது கடமையைத் தொடங்கினார்;* **கவுன்சில் உறுப்பினர்களை** *(ப் பார்லிமெண்ட்) நியமித்தது;* **ஜெனரல் கிளாவரிங், கர்னர் மான்சன், திரு. பார்வெல், திரு. பிரான்சிஸ்; ரெவின்யூ நிர்வாகத்தின் மத்திய அலுவலகத்தை முர்ஷிதாபாத்திலிருந்து கல்கத்தாவுக்கு** *(ஹேஸ்டிங்ஸ்) மாற்றினார்; கிளைவால் ஏற்படுத்தப் பட்ட (1765)* **நீதி மன்றங்களைப்** *பற்றி சில மாறுதல்களைச் செய்தார்; ஆனல்* **குடியானவர்களுக்கு நாசத்தை விளைவித்த***)* **நிதி வசூலை ஏலத்துக்கு விடுகின்ற முறையை நீக்கவில்லை.**

**1773. புனர் நிர்மாணச் சட்டம்** *நிறை வேற்றப் பட்டது; அதனுல் ஹேஸ்டிங்ஸ் முதல்* **கவர்னர்-ஜெனரல்** *ஆனார், அதே சமயம்.* **13 ஜார்ஜ் III C 63***ன் படி* **கல்கத்தாத் தலைமை நீதி மன்றம்** *நிறுவப்பட்டது;* **1773***ன்* **இறுதியில்** *நீதிபதிகள் வந்து சேர்ந்தனர் ; இந்த ஆசாமிகள்* **இந்து வழக்கங்களைப் பற்றி அடியோடு அறியாதவர்கள்;** *[இந்தியாவின்]* **அரசாங்க முழுவதற்கும் தலைவர்கள்** *எனத் தங்களைக் கருதிக் கொண்டிருந்தவர்கள். அதே ஆண்டில்* **இகழுக்குரிய ரோகில்லாப் போர்;** *மகாராஷ்டிரர்கள் தக்காணத்துக்குப் பின் வாங்கிய பொழுது (1773) தாங்கள் செலுத்துவதாக வாக்குத் தந்த* **40 லட்சம் ரூபாய் கப்பத்தை** *ரோகில்லர்கள் தனக்குச் செலுத்தவில்லை என்று* **ஔத்நவாப் ஷுஜா உத்தௌலா** *வாரன் ஹேஸ்டிங்ஸுக்கு அறிவித்தார்; ரோகில்லர்களை வெல்வதில் தனக்கு ஆங்கிலேயர்கள் உதவி புரிந்தால், அப் பணத்தை அவர்கள் பெறலாம் (என அவர் கூறினார்). (கல்கத்தா) கவுன்சிலின் அறிவுரையின் பேரில்* **ஹேஸ்**

டிங்ஸ் இதை ஏற்றுக்கொண்டு, நவாபுடன் உடன்படிக்கை செய்து கொண்டார்; இதன்படி, போர் வெற்றி பெற்றால், 50 லட்சம் ரூபாய்க்கு கோரா, அலகாபாத் மாவட்டங்களை வாங்கிக்கொள்வதற்கு நவாப் அனுமதிக்கப்பட வேண்டும்; இம் மாவட்டங்களால் கம்பெனிக்கு நிறையச் செலவே யொழிய, லாபமொன்றுமில்லை. மகாராஷ்டிரப் போரினால் அடைந்த செலவுகளை யெல்லாம் ஔத் நவாபுக்குத் தருவதாக ரோகில்லர்களின் அஞ்சா நெஞ்சம் படைத்த தலைவர் ஹாபிஸ் ரஹ்மத் அவருக்குக் கூறினார்; ஆனால் நவாபோ மிகப் பெருந் தொகையாகிய 200 லட்சம் கேட்டார்; இயற்கையாக, ரோகில்லர்கள் இதைச் செலுத்த மறுத்தனர்.

ஏப்ரல் 23, 1774. ஔத் பிரிட்டிஷ் கூட்டுப்படைகள் ரோகில் கண்டுக்குள் நுழைந்தன; சண்டை; இதில் தைரிய சாலிகளான ரோகில்லர்கள் கிட்டத்தட்ட நிர்மூலமாக்கப் பட்டனர்; ஹாபிஸ் ரஹ்மத் கொல்லப் பட்டார்; மேலும் அதைப் பாழாக்கியபின் கொள்ளைக்காரர்கள் ரோகில் கண்டை விட்டு வெளியேறினர்.

1774-1775. கல்கத்தாவில் குழப்பங்கள்; கவுன்சிலில் பெருவாரியினர் (எல்லோர்க்கு மேலாக பிரான்சிஸ்), நீதிபதிகள், லண்டனில் [கம்பெனியின்] இயக்குநர் குழு ஆகியோரின் ஹேஸ்டிங்ஸுக்கு எதிரான சதிகள்.

1775. ஔத் நவாபின் அவையில் ஹேஸ்டிங்ஸால் நியமிக்கப்பட்ட ஸ்தானிகர் நீக்கப்பட்டு அவருக்குப் பதிலாக திரு. பிரிஸ்டோவ் (இயக்குநர்களால்) நியமிக்கப்பட்டார். நவாப் கம்பெனிக்குக் கொடுக்க வேண்டிய எல்லாப் பாக்கியையும் 14 நாட்களுக்குள் செலுத்த வேண்டும் என இந்த ஆசாமி கேட்டார்; இதுதான் அவரது முதல்

செய்கை. இந்நயமுறையற்றசெய்கையைஹேஸ்டிங்ஸ் கண்டனம் செய்தார். அதேபோல பிரிஸ்டோவ், ரோகில் கண்டிலிருந்து பிரிட்டிஷ்துருப்புக்கள் உடனே வெளியேற வேண்டும் என்று உத்திரவு பிறப்பித்தார்; ஹேஸ் டிங்ஸ் எதிர்த்தார்; லண்டன் இயக்குநர்களிடமிருந்து தான் பெற்ற இரகசியக் கட்டளைகளை பிரிஸ்டோவ் அவ ருக்குக் காண்பித்தார்; அத்தைய உத்திரவுகள் கவர்னர் -ஜெனரல் மூலமாகத்தான் நேராகச் செல்லமுடியும்: ஹேஸ்டிங்ஸ் சிறப்பான கண்டனக்குறிப்பு ஒன்றை எழு தியனுப்பினர்.

அதே ஆண்டில், ஔத் நவாப் ஷுஜா உத்தௌலா இறந்தார்; அவரது குமாரர் ஆசப் உத்தௌலாகம்பெனியின் ஆதரவு வேண்டி கல்கத்தாவுக்கு எழுதினர். ஔதுடனை எல்லா உறவுகளும் முடிந்துவிட்டன என்றும், கம்பெனி யுடனை ஒரு புதிய உடன்படிக்கையின் அடிப்படையில் தான் ஆசப்பின் பதவியேற்றம் அமைய வேண்டும் என வும், அந்த உடன்படிக்கையின்படி இந்தியாவின் மிகப் புனித நகரமாகிய காசி முழு அதிகாரத்துடன் (கம்பெனிக் குக்) கொடுக்கப்பட வேண்டும் என்றும் ஆசப் உத் தௌலாவுக்கு உத்திரவு அனுப்பும்படி, கவுன்சிலில் தனக் கிருந்த பெரும் பான்மை பலத்தினுல் பிரான்சிஸ் ஹேஸ் டிங்ஸைக் கட்டாயப் படுத்தினர் (குறிப்பில் பக் 120 பார்க்க). நவாப் ஆட்சேபித்துக் கொண்டே இணங்க வேண்டியதாயிற்று.

ஔத்பேகம்கள். நவாபின் ஈமச் சடங்குகள் நடந்த பின்னர், அவரது செனுனு (அந்தப்புரம்) சோதித்துப் பார்க்கப் பட்டு, 20 லட்சம் மதிப்புள்ள ரூபாய்கள் கண்டு பிடிக் கப்பட்டன; அதை அரசாங்கப் பணம் என்று புதிய நவாப் எடுத்துக் கொண்டார்; ஆனுல் அது தங்களது பாகச் சொத்து என்று உரிமை கொண்டாடிய பேகம்

களிடம் அவர் அதை ஒப்புவிக்க வேண்டும் என பிரிஸ்டோவ் தீர்மானித்தார். இதனால் தனது துருப்புக்களுக்குச் சம்பளப் பாக்கியை நவாபால் கொடுக்கமுடியவில்லை ; பயங்கரக் கலகம்; 20,000 ஆட்கள் உயிரிழந்தனர் என்று சொல்லப் படுகிறது !

கல்கத்தா கவுன்சிலில், ஹேஸ்டிங்ஸை ஏளனம்செய்வதற்கும், அவருக்கு ஆத்திரமூட்டுவதற்கும் பிரான்சிஸ் (கிளாவரிங்குடனும் மான்சனுடனும் சேர்ந்து) எல்லாவற்றையும் செய்தார்; இவ்வாறு செய்வதற்காகச் சுதேசிகளுக்குக்கூட வேண்டுகோள் விடுத்தார். இங்கிலாந்தில் இயக்குநர்கள் இவரைத் தூண்டி விட்டனர்; அந்த இயக்குநர்கள் ஹேஸ்டிங்ஸுக்கு எதிராகப்பிரான்சிஸின் சிறுபிள்ளைத்தனமான குற்றச் சாட்டுகளை யெல்லாம் கொண்டபட்டியல் ஒன்றைத்தயாராகவைத்திருந்தனர். ஒரு பெரிய குற்றச் சாட்டானது, இந்தியாவில் கேள்விப் படாத ஒரு நிகழ்ச்சி—பிராமணர் நந்தகுமாரை கள்ளக் கையெழுத்துக்காகத் தூக்கிலிட்டது (ஆனால் இது தலைமை நீதி மன்றத்தின் கைவேலை; இது தனது மடத்தனத்தினால் ஆங்கிலச்சட்டத்தைப் பிரயோகித்து, அதன் காரணமாக இந்தச்சட்டத்தின்படி எது ஒரு எளிய சிறு குற்றமோ அதை மரண தண்டனை விதிக்கக் கூடிய குற்றமாக ஆக்கிவிட்டது). பணம் கையாடியதாக ஹேஸ்டிங்ஸ்மீது நந்தகுமார் குற்றஞ்சாட்டியிருந்ததால், அவர் நந்தகுமாரைத் தீர்த்துக்கட்டிவிட விரும்பினார் என்று ஹேஸ்டிங்ஸ் மீது பிரான்சிஸ் குற்றஞ்சாட்டினார்; சான்றாக அமைந்திருந்த கடிதம் ஒரு கள்ளக் கடிதம் என்று ஆகி, நந்தகுமாரின் குற்றச்சாட்டு ஒரு கட்டுக்கதை யென பின்னர் கண்டு பிடிக்கப்பட்டது !

**1776.** தனது லண்டன் ஏஜெண்டுக்கு எழுதிய சொந்த விஷயம் பற்றிய கடிதம் ஒன்றில் தான் ராஜினாமாச்

செய்ய விரும்புவதாக ஹேஸ்டிங்ஸ் கூறியிருந்தார்; ஏஜெண்ட் அதைவெளியிட்டு விட்டார்; ஆனால் கர்னல் மான்சனின் மரணத்தினல், கவுன்சிலில் முடிவு செய் ஓட்டு (casting vote-மொர்.) ஹேஸ்டிங்ஸுக்குக் கிடைத்தது; ஆகையால்தான் பதவியில் தொடர்ந்திருக்கப் போவதாக லண்டன் ஏஜெண்டுக்கு அவர் எழுதினர்; ஆயினும், அவர் ராஜிநாமா செய்து விட்டதாக இயக்குநர்கள் அறிவித்தனர்.

**1777.** இயக்குநர்களின் இந்த யதேச்சாதிகாரச் செய்கையைப் பயன்படுத்தி, கவுன்சிலின் மூத்த அங்கத்தினர் என்ற முறையில் அதிகாரச் சின்னங்களைக் கைப்பற்ற ஜெனரல் கிளாவரிங் முயன்றார். அவரை உரிமையற்றுப் பதவியைக் கோருபவர் என்ற முறையில் நடத்தி, வில்லியம் கோட்டையுள் அவர் நுழையாதவாறு கதவுகளை ஹேஸ்டிங்ஸ் அடைத்தார்; ஹேஸ்டிங்ஸை ஆதரித்து தலைமை நீதிமன்றம் நடவடிக்கை எடுத்தது; கிளாவரிங் சீற்றத்தினல் மடிந்துபோனர். பார்வெல் [1] செய்யவிரும்பிய ராஜினமாவைத் தடை செய்யாதிருக்கும் பொருட்டு, இவர் ராஜினமா செய்தபின் கவுன்சிலில் தான் பெறப் போகும் பெரும்பான்மைப் பலத்தைத் தன்சொந்த நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்வதில்லை என்று பிரான்சிஸ் ஹேஸ்டிங்ஸுக்கு உறுதி தந்தார்; பார்வெல் போய் விட்ட உடனேயே அவர் அதற்கு மாறானதைச் செய்தார்; ஏமாற்று செய்ததாக ஹேஸ்டிங்ஸ் அவர் மீது குற்றஞ்சாட்டினர்; இவர்களிருவருக்கிடையில் சண்டை; அதில் பிரான்சிஸ் காயமுற்றார்; பின்னர் விரை

1 இவர் கல்கத்தாக்கவுன்சிலில் ஹேஸ்டிங்ஸை ஆதரித்த ஒரே உறுப்பினர்—மொர்.

வில் இவர் இங்கிலாந்து திரும்பினுர்; ஹேஸ்டிங்ஸ் சிறிதுகாலம் அமைதிபெற்றுர்; ஆனுல் இதற்கு முன்னர்—

**1772-1775**—மகாராஷ்டிர விவகாரங்கள்; *1772*, பேஷ்வா மாதுராவ் இறந்தார். அவரது சகோதரர் நாராயணராவ் அடுத்து பதவிக்கு வந்தார்; உடனே ரகோபாவால் கொல்லப்பட்டார்.

**1773.** ரகோபா அரியணையைக் கைப்பற்றினுர்; நைசாம் மீது போர் தொடுத்தார்; நைசாம் **20** லட்சம் ரூபாய்கள் கொடுத்து சமாதானம் செய்து கொண்டார். சேனுவிலிருந்த ஒரு சிறு குழந்தையை, மாதுராவ் மரணமுற்றபின் பிறந்த அவரது குழந்தையை மாதுராவ் II என்ற பட்டத்துடன், இரு அரசியல் நிபுணர்களாகிய நானு பர்னவிஸும் சக்காராம் பாபுவும் அரியணைமேல் அமர்த்தினர்; இவ்விரண்டு ஆசாமிகளும் ரீஜெண்ட்டுகளாக அரசநிர்வாகங்களைக் கைப்பற்றிக்கொண்டனர்.

**1774.** ரகோபா இந்த இரண்டு ரீஜெண்டுகளையும் அடியோடு முறியடித்தார்; ஆனுல் பூனுவை நோக்கிப் படையுடன் செல்வதற்குப் பதிலாக பர்ஹான்பூருக்குச் சென்று அங்கிருந்து, தனது நாட்டவரான கெய்க்குவாரின் ஒத்துழைப்பைக் கோருவதற்காக குஜராத்துக்குச் சென்றுர்.

குஜராத்கெய்க்குவார் அரசகுடும்பம்: முதாதைபிலாஜிகெய்க்குவார் (பேஷ்வாவின் கீழிருந்தார்)-மரணம் **1732.** அடுத்து. அவரது மகன் தாமாஜி கெய்க்குவார் பதவி யேற்றுர்; தனது பிரதேசத்தை விரிவு படுத்தினுர்; பேஷ்வாவிடமிருந்து சுதந்திரமானவராகத் தன்னைச் செய்து கொண்டார்; மரணம் **1768**; அவருக்குப்பின் மூன்று குமாரர்கள் இருந்தனர்: கோவிந்தராவ், சயாஜி, பதேசிங். கோவிந்தராவும் பதேசிங்கும் அரியணைக்காகப்போட்டியிட்

டனர்; ரகோபா பதேசிங்கை ஆதாரித்தார்; இதில் பெரிய மகாராஷ்டிரத் தலைவர்களாகிய ஹோல்காரும் சிந்தியாவும் அவருக்கு ஆதரவு தந்தனர்.

**1775.** நானுபர்னவிஸ் சதிகள் செய்து, இந்த நேச உடன்படிக்கையிலிருந்து ஹோல்காரையும் சிந்தியாவையும் பிரித்துவிட்டார்; அவர்கள் விலகிச் சென்றனர். ரகோபா இப்பொழுது பம்பாயிலிருந்த ஆங்கிலேயர்களுக்குக் கோரிக்கை விடுத்தார்; தன்னிச்சையாகவே பம்பாய் அரசாங்கம் ரகோபாவுடன்—

**மார்ச்சு 6, 1775**—சூரத் உடன்படிக்கை செய்து கொண்டது. அதன் ஷரத்துக்கள்: (1) பேஷ்வாவின் அரியணையை மீண்டும் பெறுவதற்கு ரகோபாவுக்கு ஆங்கிலேயர்கள் உதவ வேண்டும்; (2) ரகோபா, வர்த்தகக் காரியங்களுக்குகாக சால்செட் (தீவு), பஸ்ஸீன் (பம்பாய்க்கருகில் மிகச் சிறந்ததொரு துறைமுகம்) ஆகியவற்றை ஆங்கிலேயர்கட்குக் கொடுக்க வேண்டும்; பம்பாய் அரசாங்கத்துக்கு ஆண்டு தோறும் 37 லட்சம் செலுத்த வேண்டும்.—இந்த உடன்படிக்கை சட்டப்படி செல்லாதது; "உடன்படிக்கைகள் செய்தல், வருவாய்களைப் பயன்படுத்துதல், படைகளைத் திரட்டுதல், உபயோகித்தல், ஆகிய விஷயங்களில்" குறிப்பாகவும், "சிவில், ராணுவ நிர்வாகம் பற்றிய எல்லா விஷயங்களிலும் பொதுவாகவும், "கீழ்ப்பட்ட ராஜதானிகள்" (பம்பாயும் செயின்ட் ஜார்ஜ் கோட்டையும், அதாவது சென்னையும்) வங்காளக் கவர்னர் ஜெனரலின் மேற்பார்வையின் கீழ்க் கொண்டுவரப்பட்டிருக்கின்றன," என்று 1773 ஒழுங்குபடுத்தும் சட்டம் விதித்திருந்தது. இவ்வாருக ஹேஸ்டிங்ஸ், கல்கத்தா கவுன்சில், ஆகியவர் [களின்மேல் அனுமதி] இல்லாமல் பம்பாய் அரசாங்கம் உடன் படிக்கைசெய்ய முடி

முழுதுக்கும் செலுத்தப்பட வேண்டும் என்று இருக்க வேண்டுமே அல்லாது இப்பொழுது செய்யப்பட்டிருப்பதைப் போல பம்பாய் அரசாங்கத்துக்கு அல்ல. இக்காரணங்களினால் உடன் படிக்கையை ரத்துசெய்யும்படி பிரான்சிஸ் ஹேஸ்டிங்ஸைக் கட்டாயப்படுத்தினர்; இதனால் ஆங்கிலேயர்களைப் பெருந்தொந்தரவுகளில் அவர் மாட்டி விட்டார்.

**1775.** **முதல் மகாரஷ்டிர யுத்தம்.** பம்பாய் பிரிட்டிஷ் துருப்புக்களின் தலைவரான கர்னல் **கீட்டிங்** என்பவர் **ரகோபா**வுடன் சென்று கூடும்படி உத்திரவிடப்பட்டார்; **மியே** நதிக்கரையில் **ரீஜெண்ட்டுகளின் படையால்** அவர் **தாக்கப்பட்டார்;** பரோடாவுக்கருகில் **அர்ராஸ்** என்றவிடத்தில் பூரண வெற்றிபெற்றார்; மகாராஷ்டிரப்படை **நர்மதை**க்கு ஓடியது; **பதேசிங்** குஜராத்திலிருந்து படையுடன் வந்து, கீட்டிங்குடன் கூடினர்; வெற்றி முழுமை. ஆனால் ஹேஸ்டிங்ஸுக்கு எரிச்சல் ஊட்டுவதற்காக கவுன்சிலில் **பெரும்பான்மையினர் சூரத் உடன்படிக்கை** முற்றிலும் செல்லாதது என அறிவித்து, **பம்பாய் அரசாங்கத்துக்கு எதிராகச் (!) சுதேசி** அரசர்களுக்குச் **சுற்றறிக்கை** அனுப்பினர் ! பிறகு **பூனவிலிருந்த தூதரகம் சால்செட்டையும் பஸ்ஸீனையும்** திருப்பித்தர வேண்டும் என்று கோரியது. **கர்னல் அப்டன்** கம்பெனியின் சார்பில் அதிகாரம் பெற்று, **ரகோபா** சட்டப்படியான **பேஷ்வா** [எனக்கூறி] இதை மறுத்தார். பம்பாய் அரசாங்கத்தின் சார்பில் **அப்டன்** மகாராஷ்டிரர்களின் மீது போர் தொடுத்தார். அதன் பிறகு **ரீஜெண்டுகள்** உடன் படிக்கை செய்துகொள்ள முன் வந்தனர்; **ரகோபா**வைச் சட்டப்படியான பேஷ்வா என்று அப்பொழுதுதான் அறிவித்திருந்த அதே **அப்டன்**, மகாராஷ்டிர அரசின் பிரதிநிதிகள் என்ற முறையில் **நானுபர்ன**

**விஸ்டனும் சக்கராம் பாபுவுடனும் உடன் படிக்கை** *செய்து கொண்டார்—*

**மார்ச்சு 1, 1776—புரந்தர்** *(பூனுவுக்கருகில்)* **உடன்படிக்கை** **சால்செட்டைத்** *தாங்களே வைத்துக் கொள்ள வேண்டும், முன்பு மகாராஷ்டிரர்களுக்குச் சொந்த மான மற்ற எல்லாப் பிரதேசத்தையும் கொடுத்து விட வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில்* **பிரிட்டிஷ்படை போர்முனையிலிருந்து வெளியேற வேண்டியது;** **மாதுராவ் II** *ஐப்* **பேஷ்வா** *என்று ஏற்றுக் கொண்டிருக்கும்வரை ஆண்டுக்கு 12 லட்சத்தையும்* **பரோச்சின்** *[பரோச் மாவட்டத்தின்]* **வருவாயையும்** *ஆங்கிலேயர்கள் பெறவேண்டியது.* **ரகோபா** *கைவிடப் பட்டார்; அவர்* **கோதாவரிக்கு அப்பாலேயே** *தங்கியிருந் தால் மகாராஷ்டிரர்கள் அவருக்கு ஆண்டுக்கு 3லட்சம் தரவேண்டும். ஆயினும் பம்பாய் அரசாங்கம்* **சூரத் உடன் படிக்கையையே** *வலியுறுத்தி, புரந்தர் உடன்படிக் கையை முறித்து, சூரத்தில் ரகோபாவுக்குப் புகலிடம் தந்து, பரோச்சுக்குப் படை செலுத்தியது. ஸ்தானி கரகம் போர் தொடங்கியது; பம்பாயில் பிரிட்டிஷ் படை ரகோபாவை ஊர்வலம் கொண்டு சென்றது. இதன் பிறகு உடனேயே, புரந்தர் உடன்படிக்கையை நிராகரித்தும், சூரத் உடன் படிக்கையை ஏற்றும்* **தாய் நாட்டிலிருந்த இயக்குநர்கள் குழுவிடமிருந்து செய்தி** *வந்தது.*

**1778. மரோபா பர்னவிஸ்**—*ரீஜெண்ட்* **நானுபர்னவிஸின்** *ஒன்று விட்ட சகோதரர்*—**சக்கராம்பாபுவுடன்** *ஒப்பந்தம் செய்து (ஆயினும் ரகோபாவுக்காக இரகசியமாக இவர் சதி செய்தார்), அரசவையில்* **ஹோல்காருடன்** *ஒரு கட்சி யை அமைத்தார். இக்கட்சி* **பம்பாய் அரசாங்கத்துக்கு** *வேண்டுகோள்விடுத்தது; அது இக்கட்சி வேண்டி*

வைகளைத் தந்து, கல்கத்தாவுக்கு எழுதியது. **நாறுபர்ன விஸ்** பிரெஞ்சு அனுதாபியானதாலும், **சூரத் உடன்படிக்கை**யின்படி கம்பெனி ரகோபாவின் பட்டத்து உரிமையை அங்கீகரித்ததாலும் **ஹேஸ்டிங்ஸ்** இதை ஆமோதித்தார்.—**நாறுபர்னவிஸ்** புரந்தருக்கு விலகிச் சென்று, ஹோல்காருக்கு லஞ்சம் தந்து நேச ஒப்பந்தத்திலிருந்து விலகும்படி செய்து, **மாதுராவின்** சார்பில் படை திரட்டி, மரோபாவையும் சக்கராமையும் தோற்கடித்து, முதலாமவரைக் கொன்று, வெற்றிக்குப் பிறகு **பூனுவுக்குப்** படை நடத்தி, அங்கு இரண்டாமவரைச் சிறையிலிட்டார். **பம்பாய் அரசாங்கம்** ரகோபாவுடன் முதலில் **உடன்**படிக்கை செய்தபின் நாறுபர்னவிஸின் மீது போர் [ப்பிரகடனம் செய்தது].

**1779. இரண்டாவது மகாராஷ்டிரப் போர் நடவடிக்கை.** பூனுவைத் தாக்குவதற்கு **கர்னல் எகர்டன்** அனுப்பப்பட்டார்; சிவிலியன்களால் (இவர்களது தலைவர் **ஜெனரல் கார்னுக்**) தடங்கல் ஏற்பட்டது. பூனுவுக்கு முன்னுல் **சிவில் கமிஷனர்கள்** பீதியடைந்து, ரகோபா, கர்னல் எகர்டன் ஆகியோரின் ஆலோசனைக்கு மாறுக **அவர்களைப் பின் வாங்கும்படி உத்திரவிட்டனர்**; ரீஜெண்டுகளின் குதிரைப் படை அவர்களை உடனே தாக்கியது; பின்புறக்காவல் படைஅணியில் தைரியமிக்க காப்டன் ஹார்ட்லிபோரிட்டார்; முன்னணியிலிருந்த சிவிலியன்கள் "வாரியடித்துக் கொண்டு ஓடினுர்கள்". இரவில் அவர்களது படை **வர்காவ்ன்** என்ற இடத்தில் முகாமடித்துத்தங்கியது; அவர்களது முகாம் பீரங்கிக் குண்டுகளால் தாக்கப்படவே, கிலிபிடித்த கமிஷனர்கள், எதிர்த்துருப்புகளை நடத்தி வந்த சிந்தியாவிடம் தங்களுக்கு உயிர்பிச்சை தரும்படியும், தங்களைக் காப்பாற்றும்படியும், ஆகவே தாங்கள் பின்வாங்கிச் செல்ல விடும்படியும் மன்றுடினுர்கள் !

**ஜனவரி 1779.** **வர்காவ்ன் ஒப்பந்தம்**; *தஞ்சம் புகுந்த* **ரகோபா** *வைத் திருப்பி ஒப்படைத்து* **விட்டு** *(கமிஷனர்களின் இந்தக்கோழைத்தனத்தை முன் கூட்டியே எதிர் பார்த்த ரகோபா, சிந்தியாவிடம் தானேவிரும்பிச்சரண் புகுந்தார்),* **கடந்த ஐந்து ஆண்டுகளில் பிடித்த பிரதேசம் ஒவ்வொன்றையும் விட்டு விட்டுப்** *பின் வாங்கும்படி பம்பாய்ப்படை அமைதிக்கப்பட்டது. இச்செய்தி கேட்டுத்* **தலைமை அரசாங்கம்** *சீற்றம் கொண்டது; புதுஉடன் படிக்கை ஒன்றைப் பிரேரேபித்தது. இதற்கிடையில்* **ரகோபா சூரத்**துக்கு *ஓடிவிட்டார்; அங்கு* **கர்னல்கோடார்டு** *படைத்தலைவராய் இருந்தார்.* **நானுபர்னவிஸ்** *ரகோபாவை ஒப்படைக்க வேண்டுமென்று கோர, அதை கோடார்டு மறுததார்; புதிய போர்.*

**1779.** **மூன்ருவது போர் நடவடிக்கை. கோடார்டு குஜராத்துக்கு** *[***ச் சென்ருர்***];* *அங்கு பதேசிங்கும் ரகோபாவும் அவருடன் சேர்ந்து கொண்டனர்; [இவர்கள்]* **அகமதாபாத்தைக் கைப்பற்றினர்**; *அங்கு* **ஹோல்கார், சிந்தியா** *ஆகியவர்களின் தலைமையில் மகாராஷ்டிரர்கள் இவர்களை எதிர்த்தனர்; தோற்கடிக்கப் பட்டனர்; மழைக் காலத்தில் நர்மதைக் கரையில் படை முகாமடித்தனர்.*

**1780.** **ஆக்ராவுக்கருகிலிருந்த சிந்தியாவின் பிரதேசங்களுக்கு எதிராகப்** *போர் அணிவகுப்புக்காட்சி யொன்று நடத்துவதற்காக* **மேஜர் போபம் என்பவரின் தலைமையில் ஒரு சிறிய படை அமைக்குமாறு ஹேஸ்டிங்ஸ்** *உத்தரவிட்டார்; அதிக உயரமான, கிட்டத்தட்ட செங்குத்தானதொரு குன்றின் மேலமைந்த* **குவாலியர்** *கோட்டையைப்* **போபம்** *பிடித்தார். பிறகு போபமின் சிறு படைப்பிரிவு பலப்படுத்தப்பட்டு.* **ஜெனரல் கார்னக்கின்** *தலைமையில் மகாராஷ்டிர முகாமின் மீது வெற்றிகரமான* **இரவுத்**

தாக்குதல் நடத்தப்பட்டது: தனது பண்டங்களை யெல்லாம் பின்னால் விட்டு விட்டு சிந்தியா ஓடினார்.

**1780**ன் பின் பகுதி. ஆங்கிலேயர்களை இந்தியாவிலிருந்து துரத்துவதற்காக மகாராஷ்டிரர்களுக்கும் மைசூர்க்காரர்களுக்கு மிடையில் பெருங்கூட்டணி. ஹோல்கார், சிந்தியா, பேஷ்வா ஆகியோர் (அதாவது, உண்மையில் நானாபர்னவிஸ்) பம்பாயைத் தாக்கவேண்டியது; ஹைதர் அலி சென்னை மீது படையெடுக்க வேண்டியது; நாகபுரி (பேரார்) ராஜா மாதோஜி பான்ஸ்லே கல்கத்தாவைத் தாக்க வேண்டியது. விளைவு (பக்கம் 128, 129ஐப் பார்க்க)—

மே **17, 1782**—சால்பை (குவாலியரில்) உடன்படிக்கை: புரந்தர் உடன்படிக்கை (**1776**)க்குப் பிறகு தாங்கள் பெற்ற பிரதேசத்தை எல்லாம் ஆங்கிலேயர்கள் திரும்ப ஒப்படைத்துவிட வேண்டியது; ரகோபா பகை நடவடிக்கைகளை யெல்லாம் கைவிட்டு, ஆண்டொன்றுக்கு 3 லட்சம் ரூபாய் பெற்று, தனது இருப்பிடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டியது. ஹைதர் அலி ஆறு மாதத்துக்குள் ஆங்கிலேயக் கைதிகள் அனைவரையும் விடுதலை செய்ய வேண்டியது; தான் வென்றவைகளனைத்தையும் கைவிட்டு விடவேண்டியது; இல்லாவிட்டால் மகாராஷ்டிரர்களால் தாக்கப்படவேண்டியது.

ஹைதர் அலி. **1770**ல் மகாராஷ்டிரர்களுடன் சமாதானத்தை விலை கொடுத்து வாங்கினார்; அமையுடனிருந்தார். **1772**ல் ரகோபாவால் நாராயணராவ் கொல்லப்பட்டு, அதைத் தொடர்ந்து குழப்பங்கள் தோன்றிய பிறகு, தேவையற்ற கொடுமையுடன் அவர் கூர்க்கைத் தன்னாதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்தார். தன்னிடமிருந்து மகாராஷ்டிரர்கள் பறித்துக் கொண்டு விட்ட மாவட்டங்களை அனைத்தையும் **1774**ன் பொழுது அவர்

மீண்டும் கைப்பற்றிக் கொண்டு விட்டார். **1775**ல் **பசாலத் ஜங்** (நைசாமின் சகோதரர்) கிடமிருந்து **பெல்லாரி**யைப் பிடித்தார்; பிறகு 1776ல் மகாராஷ்டிரத்தலைவர் **மொராரிராவின்** ராஜ்யத்திலிருந்த **சாவனூர்** (பம்பாய் ராஜதானியில் தர்வாஸுக்கருகில்) என்னுமிடத்தை அழித்தார். **பூனு** ஸ்தானிகரகம் அவரை நசுக்க வீண் முயற்சி.

**1778.** **மைசூர் அரசு கிருஷ்ணு நதிவரை விரிவடைந்தது.**

**1779.** **இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் போர் தொடங்கியது;** ஹைதர் பிரான்சை ஆதரிக்கப் போவதாக அறிவித்தார். **பிரெஞ்சுக்காரர்களிடமிருந்து புதுச்சேரியையும் மாஹியையும் ஆங்கிலேயர்கள் கைப்பற்றினர்.**

**1780.** ஹைதர் அலி **பெருங் கூட்டணியில்** சேர்ந்து, **சென்னை**யைத் **தாக்க** ஆயத்தம் செய்தார்.

**1780.** **இரண்டாவது மைசூர் போர்.** ஜூலை **20**ந் தேதி செங்கம் கணவாய் வழியாக **ஹைதர் கர்னுடகத்தினுள்** நுழைந்து, அதை அழித்துப் பாழாக்கி, அட்டூழியங்கள் புரிந்தார்; கொழுந்து விட்டெரிந்த கிராமங்களின் புகை சென்னையில் தெரிந்தது.--ஆங்கிலேயப்படை 8000 ஆட்கள் தான்; மூன்று பிரிவுகளாக, ஒன்றுக்கொன்று கணிசமான தூரத்தில் பிரிந்திருந்தன. **கர்னல் பெய்லி** குண்டூரில் **சர் ஹெக்டர் மன்ரோ**வுடன் இணைந்து கொள்ள முயன்று, பெரிய மகாராஷ்டிரக் குதிரைப் படையுடன் **திப்பு சாகிப்பால்** தாக்கப் பட்டார்; **பெய்லி** சிரமத்துடன் அவரைத்தோற்கடித்துத்துரத்தி, தன் பயணத்தைத் தொடர்ந்தார்; ஆனால் **ஹைதர்**, அவருக்கும் மன்ரோவுக்கு மிடையில் குறுக்கிட்டு—

**செப்டம்பர் 6, 1780**-பெய்லியின் **படை**யைச்சூழ்ந்து கொண்டு **பொள்ளிலூர்** என்னும் சிறிய கிராமத்துக்கு அருகில் **திப்**

டச்சுக்கட்ட கடைசி ஆள்வரை அப்படையைச் சிதைத்தார். 1780 இறுதியில் ஹைதர் ஆர்க்காட்டைக் கைப்பற்றினர்.

ஜனவரி 1781. சர் அயர்கூட் கல்கத்தாவிலிருந்து புதுப்ப படைகளுடன் கடல் வழியாக வந்து சேர்ந்தார்; கடலூருக்கருகில் பரங்கிப்பேட்டையில் ஹைதரைத்தாக்கினர்; குறிப்பிடத் தக்க வெற்றி.

ஜூலை 1781. கர்னல் பியர்ஸ் என்பவரின் தலைமையில் வங்காளப்படை—ஒரிசா வழியாக செய்த தனது பயணத்தின் பொழுது நாகபுரி ராஜாவால் உதவப் பட்டு—புலிக்காடு என்னுமிடத்துக்கு வந்து சேர்ந்து, கூட்டுடன் இணைந்து கொண்டது; இவர்கள் இருவரும் பொள்ளிலூர் (புலிக்காட்டுக்கு அருகில்) என்ற சிற்றூருக்கருகில் ஹைதருடன் தீர்வு ஏற்படாத போர் ஒன்று செய்தனர்.

செப்டம்பர் 27. சோலிங்கருக்கு (வடாற்காடு, சென்னை ராஜதானி) அருகில் கூட்டின் தீர்வான வெற்றி; பிறகு மழைக் காலத்தின் பொழுது, அவர் சென்னைக்கருகில் தண்டுகளில் (Contonments- மொ. ர்.) தங்கினர்.

1781 பின்பகுதி. சென்னையில் தலைவராக மகார்ட்னி பிரபு (சர் தாமஸ் ரம்போல்டுக்குப் பதிலாக) அவரது முதல் செயல் நாகப்பட்டினத்திலிருந்த டச்சுக் கோட்டையை வன்மையாகத் தாக்கி அழித்தலும், அங்கிருந்த டச்சு வியாபாரத் தலங்களை அழித்தலும்; இது, தெற்கில் டச்சு வியாபாரம் பெருகுவதைக்கண்டு பொறாமையுற்ற இயக்குநர்கள் குழுவின் இரகசிய உத்தரவுகளின் பேரில். மேலும் தலைச்சேரியில் ஆங்கிலேயர்கள் சிறிது வெற்றி. ஹைதர் அலி மலபார்க்கரையைத் தாக்குவதற்காக, கர்னடகத்தின் மீதான முயற்சிகளைக் கைவிட்டார்.

1782. இலங்கையில் டச்சுத் துறைமுகமான திரிகோணமலையை வென்று, பின் திரும்பி வந்து கொண்டிருந்த ஆங்கிலக்

கடற்படையைப் பரங்கிப் பேட்டைக்குச் சற்று தூரத்தில் பிரெஞ்சுக் கடற்படை சந்தித்தது; கடற்போரில் முடிவு ஏற்படவில்லை; பிரெஞ்சுக்காரர்கள் சிறு படையுடன் புதுச்சேரியில் இறங்கி, ஹைதர் அலியுடன் சேர்ந்து கொண்டனர்.

ஜூலை 1782. நாகப்பட்டினத்துக்குச் சிறிது தூரத்தில் இரண்டு தீர்வான கடற் போர்கள்.—ஒரு பிரெஞ்சுப் படை கல்முனை (இலங்கை)யில் இறங்கி, திரிகோணமலைக்குச் சென்று அப்பட்டினத்தை மீண்டும் பிடித்து, அங்கிருந்த [ஆங்கிலக்] கோட்டைப் படையை அழித்தது. இலங்கைக்கு அப்பால் பிரெஞ்சுச் கடற்படைக்கு எதிராக அட்மிரல் ஹ்யூகஸின் முயற்சி வீணாயிற்று; பிரெஞ்சுக்காரர்களைக் கடலுக்கு அதிபதிகளாக விட்டு, ஹ்யூகஸ் பப்பாய்க்கு [க் கடற் படையுடன் சென்றார்].

1782ன் இறுதி வாக்கில், திப்பு சுல்தான் பாலக்காட்டில் (கோயம் புத்தூருக்கருகில்) அகழ் அரண் அமைத்துத் தங்கியிருந்த ஆங்கிலேயர்களைத் தாக்கினார்; தனது முதல் தாக்கும் முயற்சியில் தோல்வியுற்று, டிசம்பர் 7ந்தேதி வரை ஆங் கிலேயர்களின் முகாமை முற்றுகையிட்டார்; அந்நாளில் ஹைதர் அலியின் திடீர் மரணச் செய்தி அவருக்குக் கிடைக்க, தனது துருப்புக்களுடன் மைசூருக்குப்பயண மானார்.

டிசம்பர் 6, 1782. ஹைதர் அலியின் மரணம், 80 வயது. இவரது அமைச்சராகிய, புகழ்பெற்ற பொருளியல் வல்லுநர் பூரணையா, திப்பு வந்து சேரும்வரையிலும் ஹைதரின் மரணச்செய்தியை இரகசியமாக வைத்திருந்தார்.

**டிசம்பர் 1782.** **திப்பு சாகிப் அரியணை யேறல்;** *1,00,000 ஆட்களைக்கொண்ட சிறந்ததொரு சேனையையும், பணமாகவும் நகைகளாகவும் மிகப் பெரும் செல்வத்தையும் [ அவர் ] கண்டார்.*

**மார்ச்சு 1,1783.** *முதலில் தனது அதிகாரத்தை அமைதியாக வலுப்படுத்திக் கொண்டிருந்த* **திப்பு, மங்களூருக்** *கெதிராகப் போர் நடவடிக்கை மேற்கொள்வதற்காக மேற்குக் கரைக்குசென்றார்.*

**ஜூன் 1783ன் முன்பகுதியில்.** **நன்னம்பிக்கை முனைக்குக் கிழக்கிலிருந்த எல்லாப் பிரெஞ்சுப்படைக்கும்** *இப்பொழுது* **தலைமை** *வகித்த* **புஸ்ஸி,** *ஒரு பிரெஞ்சுப்படையுடன்* **கடலூரில்** *இறங்கி,* **திப்பு** *மேற்குக் கரைக்குச் சென்றிருந்ததையும், ஹைதர் இறந்துவிட்டதையும் கண்டார் ; அவர் உடனே* **ஜெனரல் ஸ்டூவர்ட்** *(சர் அயர் கூட்டின் பின் படைத்தலைமை வகித்தவர்) என்பவரால் தாக்கப் பட்டார்.*

**ஜூன் 7,1783.** **கடலூரின்புறக்காவல் நிலையம்** *ஒன்று பெரும் சேதத்துடன் ஆங்கிலேயர்களால் பிடிக்கப்பட்டது. அன்றே, கடலூருக்குச்சிறிது தூரத்தில், ஒரு* **கடற்போர்;** *இதில்* **அட்மிரல் ஹியூகஸ்** *மோசமாக முறியடிக்கப்பட்டு, தனது கப்பல்களைச் செப்பனிடுவதற்காகச் சென்னைக்குத்திரும்பும்படி செய்யப்பட்டார்; பிரெஞ்சு வெற்றி— வீரர்* **சுப்ரெய்ன்** *என்பவரோ புஸ்ஸியின் படையுடன் இணைந்த ஒரு படைப்பகுதியாக அமையும் பொருட்டு 2400 கடற்படை வீரர்களையும் மாலுமிகளையும் இறக்*

**ஜூன்18,** *பிரெஞ்சுப்படையின் வேகமான திடீர்த்தாக்குதல் (ஸ்வீடனின் பின்னாள் மன்னரான* **சார்ஜென்ட் பெர்னு**

தோத்தும் உடனிருந்தார்) எதிர்த்துத் தள்ளப்பட்டது; அப்பொழுது, இங்கிலாந்துக்கும் பிராஞ்சுக்கும் சமாதானம் ஏற்ப்பட்டுவிட்ட செய்தி வந்தது; அதன் பிறகு ஸ்டூவர்ட் சென்னைக்குத் திருட்பினார் ; புஸ்ஸி தனது நிலைமையைப் பலப்படுத்தினார். இதற்கிடையில் பம்பாய் அரசாங்கம் ஒரு படையை அனுப்பியிருந்தது; அது பெட்னூரையும், மலபார்க் கரையில் மற்றும் பல இடங்களையும் கைப்பற்றியது. திப்பு படையெடுத்துச் சென்று பெட்னுரை மீண்டும் பிடித்து, கோட்டைப் படையைச் சிறையிலடைத்து, பிறகு 1,00,000 ஆட்களுடனும் 100 பீரங்கிகளுடனும் மங்களூரை( 1800 ஆட்கள் )முற்று கையிட்டார்; ஒன்பதுமாதம் எதிர்த்துநின்ற பிறகு அது சரணடைய வேண்டியதாயிற்று.—அதேசமயத்தில் கர்னல் புல்லார்டன் சென்னையிலிருந்து மைசூருக்குப் படை நடத்திச் சென்று, கோயம்புத்தூரை ப்பிடித்து, பிறகு ஸ்ரீரங்கப் பட்டனத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தபொழுது, மடத்தனமாக(பக்.133-ஐப்பார்க்க) சமாதானப் பேச்சுவார்த்தைகள்—ஆரம்பத்திருந்த மகார்ட்னி பிரபு அவரைத் திருப்பியழைத்தார்.—முதல் பேச்சுவார்த்தைகள் பகை நடவடிக்கைகளைப் பரஸ்பரம் கைவிட்டுவிடவேண்டும் என்ற அடிப்படையில் அமைந்திருந்தன; மகார்ட்னி ஆங்கிலேயத் துருப்புகளைத் திருப்பி அழைத்தார்; திப்பு சுற்றியிருந்த பிரதேசத்தை அழித்து நாசப்படுத்துவதைத் தொடர்ந்து செய்துகொண்டிருந்தார்; [அவர்] கமிஷனர்களைத் துன்புறுத்தி, தான் சொல்கிறபடி வென்ற பிரதேசங்களைப் பரஸ்பரம் திருப்பித் தந்துவிட வேண்டும் என்ற அடிப்படையில் மங்களூர் உடன்படிக்கையில் அவர்கள் கையெழுத்திடும் வரை அவர்களைத்திரும்பிப்போகக் கூடாது என்று தடைசெய்துவிட்டார்.

**1770-1775.** **சென்னையின் தலைவர் திரு. விஞ்ச் இழிவான தஞ்சாவூர் விவகாரம்** *1 (பக். 134).*

**1775-1777.** **பிகாட் பிரபு, சென்னையின் தலைவர்.** *(இயக்குநர்களின் உத்தரவின் பேரில்)* இந்த *"வயதான"* *பயல்* **1776**ல் **"கம்பெனி நவாப்"** *(கர்நாடக நவாப்)* **முகம்மது அலியால்** *பறிக்கப்பட்டு விட்ட தனது ராஜ்யத்தில்* **தஞ்சாவூர் ராஜாவை** *மீண்டும் அமர்த்துவதற்கு மட்டுமின்றி, பொதுப் பணியின் பல்வேறு துறைகளில் நிலவிய* **லஞ்சத்தையும்,** *பொருளை* **அபகரித்தலையும்** *நீக்குவதற்குத்தலையிடவும் துணிந்தார்; மேலும் குறிப்பாக,* **பால் பென்பில்ட் என்ற ஒரு ஆளைப்பற்றி அவர் புலன் விசாரணையும்** *நடத்தினார்; காரணம்,* **தஞ்சாவூர் வருவாயின் ஒருபகுதிக்கு** *இந்த "நாய்"* **மோசடியாக உரிமை கொண்டாடியது.** *தலைவருக்கு எப்பொழுதும் எதிரியாயிருந்த* **கவுன்சில், அவரைக்** *கடுமையாக அவமதித்தது;* **அவ்வுறுப்பின்** *இரண்டு* **அங்கத்தினர்களை** *அவர் சஸ்பெண்டு செய்தார். பெரும்பான்மையினர்* **பிகாட்டைச் சிறையிலடைத்தனர்.** *சாகும் வரை அவரைப்* **பாதுகாப்பாகச் சிறையில் வைத்திருந்தனர்.** *இது — தலைவரைக் கொலை செய்தது! — தண்டிக்கப்படவே இல்லை!*

*1. விஞ்ச்சின் நிர்வாகத்தின் கீழ், தஞ்சாவூர்—கம்பெனித் துருப்புக்களின் உதவியுடன் கர்நாடக நவாபால் பெயரளவிலும், ஆனால் உண்மையில் கம்பெனியாலும், உரிமையின்றி அதிகாரத்தைப்பற்றிய பிரிட்டிஷ்காரர்களாலும்—கைப்பற்றப்பட்டு, சூறையாடப்பட்டது. கொள்ளைப் பொருட்களில் மிகப் பெரும் பகுதியை, நவாபுக்குக் "கடன் தந்திருந்த" தனியாட்கள் எடுத்துக் கொண்டு விட்டனர்; லண்டனில் கம்பெனியின் இயக்குநர்களின் குழு இதனால் மிகவும் ஆத்திரமடைந்தது.*

**1777-1780.** சர் தாமஸ் ரம்போல்டு, சென்னையின் தலைவர். *அவருக்கெதிராகச் சதியாலோசனைகள் (பக். 135-138);* மாகர்ட்னி பிரபு *அடுத்தபடியாக சென்னையின் தலைவரானார்;* 1781ன் பின் பகுதியில் *வந்து சேர்ந்தார்.*

**1783-1785.** வாரன் ஹேஸ்டிங்ஸ் நிர்வாகத்தின் முடிவு. *எல்லாப் பக்கங்களிலும் தொந்திரவுசெய்யப்பட்ட ஹேஸ்டிங்ஸ் தனது* கோபத்தைக் கடுமையாக வெளிக்காட்டினர். *நிர்வாகத்தின் எல்லாத் துறைக்கும் தன்னை மேம்பட்டதாக எண்ணிக்கொண்டு,* அரசாங்கத்தின் செயல்களின்மீது "தணிக்கையாளர்" *என்ற தோரணையில், வெறுக்கத் தக்க முறையில்* தலைமை நீதிமன்றம் *நடந்து கொண்டது.* ஜமீன்தார்கள் *வெறும்* நிதி வசூலிப்பவர்கள், அதில் அவர்கள் தவறினல் கைதாக்கப்படுவதற்கும் தண்டனைக்கும் உட்படுத்தப்படுவார்கள் — *இப்படி ஜமீன்தார்களை நடத்துவதற்குச் சட்டங்களை அரசாங்கம் செய்திருந்தது; இவ்விதியை மிகவும் மும்முரத்துடன்* ஆங்கிலேய நீதிபதிகள் *பின் பற்றி, பல சமயங்களில் சிறு தொகைகளைக் கையாடியதற்காகச்* செல்வாக்கு மிக்க ஜமீன்தாரி ராஜாக்கள் எனப்படுபவர்களைப் *பிடித்துச் சிறையிலிட்டு,* சாதாரண கொடுங் குற்றவாளிகளைப் போல் *நடத்தியது. இவ்வாருக ஜமீன்தார்களின் மதிப்பு குறைந்து,* குடியானவர்கள் பல சமயங்கள் தங்கள் வரிகளை அவர்களுக்குச் செலுத்த மறுத்தனர்; *இதனுல்* குடியானவர்களிடம் ஜமீன்தார்களின் யதேச்சாதிகாரக் கொடுமைகளும், பொருள் *அதிகமாயின !*

தலைமை நீதிமன்றத்தை *நியமித்த,* ஜார்ஜ் Iன் சாசனத்தின் *படியும்* (1726,) ஜார்ஜ் IIIன் சாசனத்தின் *படியும்* (1773) இங்கிலாந்தில் வழங்கிய பொது நீதி *முழுவதும்* இப்பொழுது இந்தியாவில் வழக்கிலிருந்தது; *ஆங்கிலேய மடையர்கள்*

அதை எழுத்துக் கெழுத்து அப்படியே பின்பற்றினர்கள்; ஆகவே தங்களது சட்டத்தின்படி ஒன்றுமில்லாத ஒரு குற்றத்துக்காக, சுதேசிமக்கள் (பக். 139ஐப் பார்க்க) தூக்கிலிடப்பட்டனர்!

காசிஜூரா வழக்கு : விசாரணையை எதிர் நோக்கியிருக்கும் குற்றவாளிகளிடமிருந்து ஜாமீன் கேட்கும் ஆங்கிலேய முறையினால் இது விளைந்தது; இவ்வழக்கில் ராஜா (அதாவது ஜமீன்தார்) காசி ஜூராவுக்கு எதிராகத் தலைமை நீதி மன்றத்திற்குக் கொண்டு வரப்பட்ட ஒருரெவின்யூ வழக்கில் (பக் 139, 140) (இவ் வழக்கில் அமீனுக்கள் செனுனின் விக்கிரக அறையில் நுழைந்தது, ராஜாநீதிமன்றத்தின் ஆஜராவதற்குப் பிணையாகக் குலதெய்வத்தின் சிலையை அப்படியே எடுத்துக்கொண்டு போய்விட்டனர்),ஹேஸ்டிங்ஸ் காசிஜூராவைப் பாதுகாத்து, தலைமை நீதிமன்றத்தின் அதிகாரத்துக்குக் கீழ்படிந்து நடப்பதாகச் சுதேசிமக்கள் தங்கள் சொந்த விருப்பத்தின்படி கூறினுலொழிய, சிவில் விவகாரங்களில் தலைமை நீதி மன்றத்திற்குத் தாங்கள் கட்டுப்பட்டவர்கள்எனத் தங்களைக் கருதவேண்டியதில்லை, என்று ஒரு உத்தரவு வெளியிட்டதால், "நீதி மன்றத்தை அவமதித்த குற்ற"த்துக்காகக் கவுன்சிலருக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் தலைமை நீதி மன்றம் அழைப்பாணை விடத் துணிந்தது. ஹேஸ்டிங்ஸ் இதைத் துரும்புக்கும் ம

ரெவின்யூ நிர்வாகத்தைப் புதிதாகத் திருத்தியமைத்தலும், "வாரன் ஹேஸ்டிங்ஸின் சட்டத் தொகுப்பு"ம் (பக். 140). அவர் செய்தபலவற்றுள் ஒன்று: ரெவின்யூ நிர்வாகத்தை சிவில் நிர்வாகத்திலிருந்து பிரித்து, முதல் சொல்லப்பட்டதைத் "தற்காலிக" நீதிமன்றம் என்றும், இரண்டாவதை "மாவட்ட" நீதிமன்றம் என்றும் அழைத்தார்; இவை

இரண்டுக்கும் மேல் அப்பீல் நீதி மன்றமாக "சதர் திவானி அதாலத்"[1]தை வைத்து, இதில் சர் எலிஜா இம்பே என்பவரைத் தலைமை நீதிபதியாக நியமித்தார்.

**1784.** சயித் சிங் வழக்கு ; இவரை ஹேஸ்டிங்ஸ் காசி ராஜா வாக ஆக்கியிருந்தார் (140, 141).

**பைசுல்லாகான் வழக்கு.** ஔத் நவாப் ஆசப் உத்தௌலாவுடன் ஒரு உடன்படிக்கை செய்யப்பட்டது; இதன்படி ஔ தில் இருந்த பிரிட்டிஷ் படைக்கு அவர் பண உதவி தர வேண்டியது; [அப்படை] குறைக்கப்பட்டு, சில உரிமை கள் பரஸ்பரம் நிர்ணயிக்கப்பட்டன; உடன்படிக்கை யின் 3வது ஷரத்து ஹாபிஸ் ரஹ்மத் (ரோகில்லர்) தின் உடன் பிறந்தார் குமாரர் பைசுல்லா கானைப்பற்றியது; தான் ரோகில்லர்களின் தலைவராக ஆகும்பொழுது கம்பெனி யின் படை பலத்தைப் பெருக்குவதற்காகவேண்டி 3000 பேர்களைக்கொண்ட ஒருபடையை இவர் திரட்ட வேண்டும் என்று உடன்படிக்கையினால் விதிக்கப்பட் டார்; 5000 வேண்டுமென்று சமீபத்தில் ஹேஸ்டிங்ஸ் கோரியிருந்தார்; தன்னால் இதைத் தரமுடியாது என்று பைசுல்லாகான் அறிவித்தார். ரோகில்கண்டு, பைசுல்லா வின் "நிலமானியத் தலைவ"ராகிய ஔத் நவாபின் ஜாகீர் தானே யொழிய சுதந்திரமான நாடில்லை ஆத லால், [நவாபால்] அது எடுத்துக்கொள்ளப்பட வேண்டும் என்று ஔதுடனுன தனது உடன்படிக்கை யில் ஷரத்து 3ல் ஹேஸ்டிங்ஸ் வாதித்தார் ; அவர் [பைசுல்லா கான்] 15 லட்சம் ரூபாய் கொடுத்து அதை மீண்டும் பெற்றுக் கொண்டார்; அதன் பிறகு ஹேஸ் டிங்ஸ் கல்கத்தாவுக்குத் திரும்பினார்.

---

1 தலையாய சிவில் அப்பீல் நீதி மன்றம்.

**1785.** கல்கத்தாவில் தனது பதவியை ராஜிநாமா செய்து விட்டு, இங்கிலாந்துக்கு [ஹேஸ்டிங்ஸ் திரும்பிச் சென்றார்]. இங்கிலாந்தில் அவருக்கு இடையூறுகள்; பிட் அவரது பகைவர்; ஆகவே பர்க் (பிட்டின் ஆள்) கின் வசைமாறி (பக். 142, 143 ஐப் பார்க்க). ஹேஸ்டிங்ஸின் மரணம் 1818 (86 வயது). (பிட்டினால் வெறுக்கப்பட்ட அவரது நாடு பிடிக்கும் கொள்கை தவிர, ஹேஸ்டிங்ஸின் ஒரு பெருங் குற்றம்: தங்களது சம்பளத்தின் மூலமாக அல்லாமல், இந்துக்களிடமிருந்து ரூபாய்களைப் பறித்தல் மூலமாகச் செல்வம் திரட்டப் பார்த்த கொள்ளைக்கு, இந்தியாவில் கம்பெனியின் பணியாட்களாகிய அந்தக் "கீழ்த்தரக் கும்ப"லின் கொள்ளைக்கு முடிவுகட்ட, அவர்களின் சம்பளங்களை அவர் உயர்த்தியிருந்தார் என்பதுதான்.)

[பிரிட்டனில் கிழக்கிந்தியக் கம்பெனியின் விவகாரங்கள்]

**மார்ச் 1780.** மூன்றாண்டுகளுக் கொருமுறை நீடிக்கப்பட்ட கிழக்கிந்தியக் கம்பெனியின் தனக்கே உரிய சிறப்புரிமைகள் காலாவதியாயின; 1783 வரை அவைகள் பார்லிமெண்ட் சட்டத்தினால் நீடிக்கப்பட்டன; அரசாங்கத்திடமிருந்து பெற்ற கடன்களுக்காகத் தேசத்துக்குச் சேரவேண்டிய பாக்கிகளுக்காகத் தவணை தவணையாக 4,00,000 பவுன்களைப் பொது நிதிக்குக் கம்பெனி செலுத்த வேண்டியது.—ஹைதர் அலியுடனான போரைப்பற்றி விசாரணை நடத்துவதற்கு ஒரு இரகசிய (பார்லிமெண்ட்) கமிட்டி அமைக்கப்பட்டது; கல்கத்தா தலைமை நீதிமன்றத்தின் கொடுஞ் செயல்களுக்கு எதிராகச் சுதேச வங்காளிகள் அனுப்பியிருந்த மனுக்களைப்

பரிசீலனை செய்வதற்கு இரண்டாவது கமிட்டி ஒன்றும் அமைக்கப்பட்டது.

ஏப்ரல் 9,1782. கிழக்கிந்திய கம்பெனி இயக்குநர்கள் குழுவின் அங்கத்தினர் திரு. ஹென்ரி டண்டாஸ் (மெல்வெல் பிரபு என்ற பட்டம் பெற்று, பின்னர் லஞ்சக் குற்றத்துக்காக 1806ல் பார்லிமெண்டில் குற்றஞ் சாட்டப்பட்டவனும், முதலில் நார்த், பாக்ஸ் ஆகியோரின் ஆளாக, பிறகு பிட்டின் ஆளாக இருந்தவனுமாகிய அந்தக் கீழ்த்தரமான பயல்) இந்தியாவில் விவகாரங்கள் நடத்தப்படும் விதத்தைக் கடுமையாகக் குறை கூறினர்; மே 1782ல் வாரன் ஹேஸ்டிங்ஸைத் திருப்பி அழைக்க வேண்டுமென்று பிரேரணை கொண்டுவந்தார்; அது பார்லிமெண்டால் நிறைவேற்றப் பட்டது; ஆனல் உரிமையாளர்கள் சபை தனது பொதுக் கூட்டம் ஒன்றில் திருப்பி அழைப்பதற்கான இந்த உத்தரவை அனுப்புவதற்கு இயக்குநர்களுக்கு அனுமதி மறுத்தது.

1782. நார்த் பிரபு வின் மந்திரி சபை கவிழ்ந்துவிட்டது; ஷெல்போர்னின் மந்திரி சபை பதவிக்கு வந்தது; ஏப்ரல் 1783ல் பாக்ஸ்-நார்த் கூட்டினல் கவிழ்க்கப்பட்டது.

1783. (நார்த்-பாக்ஸ் கூட்டுமந்திரி சபை.) பாக்ஸின் "இந்தியா மசோதா" கொண்டுவரப்பட்டது. கம்பெனி இன்னெரு கடனுக்காக மனு தாக்கல் செய்தது (முதல்கடன் பார்லிமெண்டால் 1772ல் கொடுக்கப்பட்டது); இப்படி இரண்டாம் முறையும் ஏழை வேடம் பூண்டது நாட்டில் பெருங் கூச்சலைக் கிளப்பியது. பாக்ஸ் தனது மசோதாவில் கீழ்வருவதைப் பிரேரேபித்தார்: கம்பெனியின் சாசனத்தை நான்காண்டுகளுக்கு விலக்கி வைக்கவேண்டியது; இதற்கிடையில், பார்லிமெண்டால் நியமிக்கப்பட்ட ஏழு கமிஷனர்களால் இந்திய அரசாங்கம் நடத்தப்படவேண்டியது; உரிமையாளர்

கள் சபையால் நியமிக்கப்பட்ட ஒன்பது உதவிக் கமிஷனர்களால் வியாபாரம்பற்றிய எல்லா விவகாரங்களும் நிர்வகிக்கப்பட வேண்டியது; வழிவழியாக உரிமைபெற்ற நிலச் சொந்தக்காரர்களாக ஜமீன்தார்களை அங்கீகரிக்க வேண்டும்; போர், உடன்படிக்கைகள் ஆகியவை பற்றிய எல்லா விவகாரங்களிலும் இங்கிலாந்தில் மேற்பார்வைக்குழு (Board of Control மொ.ர்) என்ற ஒன்றுக்கு இந்தியஅரசாங்கம் கீழ்ப்பட்டிருக்க வேண்டியது. (பிந்திய[கட்டுப்பாடானது] பிட்டின் மசோதாவில் பின்னர் சேர்த்துக் கொள்ளப்பட்டது. வெல்லெஸ்லி பிரபு தனது இந்திய நிர்வாகத்தின் பொழுது அதைத் தூசிக்குக்கூட மதிக்கவில்லை.) பாக்ஸின் மசோதா கீழ்ச்சபையில் நிறைவேறியது; அம்மசோதாவைத் தோற்கடிக்கும்படி பிரபுக்களுக்கு[1] ஜார்ஜ் III உத்தரவிட்டார்; அதன்பிறகு—

ஜனவரி 1784—ஜார்ஜ் III பாக்ஸையும் அவரது சகாக்களையும் பதவியிலிருந்து நீக்கினார்; புதிய மந்திரி சபைக்கு பிட் தலைவரானார்; அவர் கம்பெனியுடன் நட்போடு இருந்து, அதன் வியாபாரத்துக்குப் பல வழிகளிலும் உதவிபுரிந்தார்.

ஆகஸ்டு 13, 1784. பிட்டின் "இந்தியா மசோதா"; பிரிவி கவுன்சிலின் ஆறு அங்கத்தினர்களைக் கொண்ட குழு ஒன்று, வருவாய் விவகாரங்களை மேற்பார்வை செய்வதற்காக ஒரு கமிஷனர்கள் குழுவாக இயங்குவதற்காக நியமிக்கப்பட்டது; இக்குழுவின் ஆணைகளைப் பெறுவதற்கும் வெளியிடுவதற்கும் மூன்று இயக்குநர்களைக் கொண்ட இரகசியக் கமிட்டி ஒன்றும் நிறுவப்பட்டது. உரிமையாளர்கள் சபைக்கு ஆளும் அதிகாரம் ஒன்றும் இருக்கக்

---

1 இங்கிலாந்தில் மேல்சபையான பிரபுக்கள் சபையை இங்கு இது குறிக்கிறது—மொ ர்.

கூடாது. எல்லாப் போர் விவகாரங்களும் உடன்படிக்கை களும் கமிஷனர்கள் குழுவின் ஆணையின்மீதே நடத்தப்பட வேண்டும், *கையெழுத்திடப்பட வேண்டும்*. நாடு பிடிக்கும் கொள்கையைக் கைவிட வேண்டியது. இந்திய அரசாங்கத்தின் ஒவ்வொரு அதிகாரியும் இங்கிலாந்து திரும்பியவுடன் தனது சொத்தின் பட்டியல் ஒன்றை, *அது பெறப்பட்டவிதம் பற்றிய ஒரு அறிக்கை யுடன்* கொடுக்கவேண்டும். மிகப் பெரும்பான்மை வாக் குடன் 1784 ல் இம்மசோதா நிறைவேற்றப்பட்டது; *இப் பொழுதிருந்து* கமிஷனர்கள் குழுவின் தலைவர்தான் இந்தி யாவின் உண்மையான யதேச்சேதிகார ஆளுநர். *இப் பதவியை முதலில் வகித்தவன் காலிப்பயல்* டண்டாஸ் *(மெல்வில்)*.

காலிப்பயல் *டண்டாஸின் முன் கொண்டுவரப்பட்ட முதல் வழக்கு:* ஆர்காட்டு நவாப்-*(மறுபெயர்* முகம்மது அலி,, கர்நாடக நவாப்*)*-பின் கடன்கள். *மிகக் கீழ்த்தர மான காமுகரும், கேளிக்கைகளில் திளைப்பவரும், தீயொழுக்கக்காரருமான* இந்த முகம்மது அலி பெருந் தொகைகளைத் தனி நபர்களிடமிருந்து கடன் வாங்கினர்; கணிசமான பிரதேசங்களின் வருவாயை அவர்களுக்கு உரிமையாக்குவதன் மூலமாக *அவர்களது கடன்களைத் திருப்பித்தந்தார்.* கடன் தந்தவர்கள் *(மறுபெயர்,* ஆங்கி லேய மோசடிக்காரக் கடுவட்டி வாங்கிகள்*) இது "மிகவும் அனுகூலமாயிருக்க"க் கண்டனர்;* இம் முறையானது இந் *தப் 'புல்லுருவிகளை"* பெரும் நிலச் சொந்தக்காரர்கள் என்ற நிலையில் உடனே வைத்து, அவர்கள் குடியானவர்களை நசுக்கி ஏராளமான செல்வங்களைக் குவித்துக் கொள்வதற்கு ஏதுவாக இருந்தது; *எனவே, சுதேசிக் குடியானவர் களின்மீது இந்த* திடீர் ஐரோப்பிய*(அதாவது,* ஆங்கிலேய*)* ஜமீன்தார்*களின்* கொடுங்கோன்மை—*கொஞ்சமும் பழி*

*பாவத்துக்கு அஞ்சாத கொடுங்கோன்மை! இவர்களும் நவாபும் கர்னுடகம் முழுவதையுமே நாசமாக்கினர்.*

**1785.** *உண்ணிப்பயல்* **டண்டாஸ்** *(அவர் தலைமையிலான கமிஷனர்கள் குழுவும் கூடச் சேர்ந்து) இவ்விவகாரத்தில் தலையிட்டு, இரத்தம் உறிஞ்சும் ஆங்கிலேய அயோக்கியர்களின் நலனுக்கு மிகவும் ஏற்றவகையில் அதைத் தீர்த்து வைத்தார். லாவாதேவிக்காரர்களின் பிடியிலிருந்து நாட்டை (கர்னுடகத்தை)* **விடுவிக்கப் போவதாகச் சாக்குச்சொல்லி நவாபின் கடன்களைத் தீர்ப்பதற்காக 4,80,000 பவுன்களை ஒதுக்கி வைக்கவேண்டும்—** *ஏனெனில், நவாபுக்குப் பெரும் பணி புரிந்திருக்கும்* **கிழக்கிந்தியக் கம்பெனிக்கு முன்னுல்,** *அவரைக் குட்டிச் சுவராக்கிய தனிப்பட்ட* **கடுவட்டி வாங்கிகளுக்குப் பணம் கொடுத்துக் கடன் தீர்க்கவேண்டும்**—*என்று அவர்கள் பிரேரேபித்தார்கள்.* **தீயது செய்யச் சிறிதும் கூசாத கூட்டமாகச் சேர்ந்து, கர்னுடகத்துக்குச் சட்டபூர்வமாகச் சேரவேண்டிய வருவாய்களை அதனிடமிருந்து மோசடியாகக் கொள்ளையடித்துக்கொண்ட பென்பீல்டுகளுக்கும்** *மற்றவர்களுக்கும்* **இத்திட்டத்தினுல் மிகப் பெருந் தொகைகள் கிடைக்கும்** *என்பது இரங்கத்தக்க டண்டாஸுக்குக்* **காமன்ஸ் சபையில்** *சுட்டிக் காட்டப்பட்டது.* **இழிவான பிட் மந்திரிசபை**—*அப்பொழுதுகூட !-***சபையில் அம்மசோதாவை வெற்றிகரமாக நிறைவேற்றியது; அதன்மூலம் கர்னுடகத்தின் வருவாயில் பால் பென்பீல்டுக்கு மட்டும் 6,00,000 பவுன்கள் கிடைத்தது!** *(பின்னர் 1806ல் அந்த* ***இழிவான*** *விவகாரத்தில் மாட்டிக்கொண்ட அதே* ***டண்டாஸ்—***

மெல்வெலின் வேலைதான் இதுவும்!*) லஞ்ச மனிதன் டண்டாஸ் கடன்களை மூன்றுவகைகளாகப் பிரித்தார்; அவைகளில் பெரியது 1777ம் ஆண்டின் மொத்தத் திரட்டுக் கடன். வாரன்ஹேஸ்டிங்ஸ் சமர்ப்பித்த திட்டம் 15 லட்சம் கொடுத்து இக்கடனைத் தீர்த்துவிட்டிருக்கும்; ஆனால் டண்டாஸின் திட்டமோ 50 லட்சம் கொடுக்கும்படி செய்தது! 20 ஆண்டுகளுக்குப் பிறகு (1805ல்), பழைய கடன்களில் கடைசியானது தீர்க்கப்பட்டபொழுது, 3 கோடி மதிப்புள்ள புதிய கடனை முகம்மது அலி இதற்கிடையில் வாங்கியிருந்தார்—இது எதிர்பார்க்கக் கூடியது தான்—என்பது தெரியவந்தது! பிறகு ஒரு புதிய விசாரணையும் நடந்தது; இது 50 ஆண்டுகள் நீடித்து, நவாபின் விவகாரங்கள் இறுதியாகத் தீர்க்கப்படுவதற்கு முன் 10 லட்சம் செலவும் ஆயிற்று. இவ்வாறுதான் பரிதாபகரமான இந்திய மக்களை பிரிட்டிஷ் அரசாங்கம்--ஏனெனில், பிட்டின் மசோதாவுக்குப் பிறகு [இந்தியாவில்] அதிகாரம் செலுத்தியது அதுதான், கம்பெனியல்ல—நடத்தியது!

* தான் கடற்படை இலாகாவின் முதல் அதிபராக இருந்த பொழுது (1804-1805), கடற்படைக்காக ஒதுக்கப்பட்ட பெருந்தொகையான அரசாங்கப் பணத்தைக் கையாடியதாகக் குற்றம் சாட்டப்பட்டு 1806ல் டண்டாஸ் (மெல்வெல்), பிரபுக்கள் சபையில் விசாரிக்கப்பட்டார்.

## [VI] காரன் வாலிஸ் பிரபுவின் நிர்வாகம்
## 1785—1793

**1785—1786.** வாரன் ஹேஸ்டிங்ஸ் பதவியிலிருந்து விலகிய பிறகு, கல்கத்தா கவுன்சிலின் மூத்த அங்கத்தினரான சர் ஜான் மக்பர்சன் தற்காலிகக் கவர்னர்-ஜெனரல் ஆனுர்; நிதிச் சீர்திருத்தம் மூலம் அரசாங்கக்கடனை 10 லட்சம் பவுன் அளவில் அவர் குறைத்தார். மாகர்ட்னி பிரபு கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்டிருப்பார். ஆனுல் பார்லிமெண்டில்டண்டாஸுக்கு எதிர்ப்பு காரணமாக உடனே கைவிடப்பட்டார்.

**1786.** காரன்வாலிஸ் கல்கத்தா வந்துசேர்ந்தார்.—தனது பிரதேசத்தில் இருக்கும் பிரிட்டிஷ் படை ஒன்றின் செலவுகளுக்காகத் தன்மீது சுமத்தப்பட்ட தொகைகளைக் குறைக்கும்படி ஔத் நவாப் ஆசப் உத்தௌலா கெஞ்சினுர்; உபரிப் பணத்தை நடனக் கணிகைகள்மீதும் வேட்டையாடுதலிலும் ஆசப் செலவிடுவார் என்று (ஔதிலிருந்த ஆங்கிலேய—மொ. ர்) ஸ்தானிகர் கூறிய ஆலோசனைக்கு எதிராக, காரன்வாலிஸ் அவைகளை 74 லட்சத்திலிருந்து 50 லட்சமாகக் குறைத்தார்.—நானுபர்னவிஸ் நைசாமுடன் நேச ஒப்பந்தம் செய்துகொண்டு, திப்புவுக் கெதிராக வெளிப்படையாகப் போருக்கு ஆயத்தம் செய்தார்; திப்பு 45 லட்சம் கொடுத்து அவரைச் சமாதானப் படுத்தினுர்.

**1788.** பிரிட்டிஷ் துருப்புக்கள் குண்டூர் சர்க்காரை இணைத்துக் கொண்டன. உண்மை என்னவென்றுல் 1768ம் ஆண்டின் உடன்படிக்கையின்படி, குண்டூர் சர்க்காரின் கவர்னராயிருந்த பசாலத் ஜங் இறந்தபின் அம் மாகாணத்தைக் கம்பெனிக்குக் கொடுப்பதாக நைசாம்

உறுதி கூறியிருந்தார்; பசாலத்ஜங் 1782ல் இறந்தார். உடன்படிக்கையின் மற்ருெரு பகுதியையும் ஆங்கிலேயர்கள் நிறைவேற்ற வேண்டும் என்று இப்பொழுது நைசாம் கேட்டார்; அதாவது கர்னுடகப் பாலக்காட்டை ஹைதர்அலியின் குடும்பத்திடமிருந்து வெல்லுதல்; ஏனெனில் அதன் வருவாயிலிருந்து மகாராஷ்டிரர்களுக்கு நைசாம் சௌத் செலுத்த இயலும்! ஆனல் கர்னுடகப் பாலக்காட்டின் அரசர்களாக ஹைதரையும் திப்புவையும் ஆங்கிலேயர்களேதான் இரண்டு அடுத்தடுத்த உடன்படிக்கைகளில் ஏற்றுக்கொண்டிருந்தனர்! காரன்வாலிஸ்—

1788—இங்கிலாந்துடன் நேச உறவு கொண்டிராத எந்த அரசுக்கும் எதிராகப் பிரிட்டிஷ் துருப்புகளின் உதவியையும், கர்னுடகப் பாலக்காடு ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமான உடனேயே அதையும் தருவதாக நைசாமுக்கு உறுதி கூறினர்! காரன்வாலிஸின் "இந்தப் பித்தலாட்ட"த்தைக் கண்டு திப்பு சுல்தானின் சீற்றம்!

திருவாங்கூர் ராஜா—கிழக்கிந்தியக் கம்பெனியுடன் துணைவர்—டச்சுக்காரர்களிடமிருந்து கொச்சியில் இரண்டு பட்டணங்களை வாங்கி அவைகளுக்கு அரண் அமைத்திருந்தார்; திப்புவுக்குக் கீழ்ப்பட்டவரான கொச்சியின் அதிபர், திப்புவின் கட்டளையின்பேரில், அவ்விரண்டு பட்டணங்களும் தனக்குச் சொந்தமானவை என்று அறிவித்தார். ராஜா ஆங்கிலேயர்களின் உதவியையும், கொச்சியின் அதிபர் திப்புவின் உதவியையும் கோரினர்; திப்பு திருவாங்கூரின் படைகளைத் தாக்கினர்; ஆனல்ராஜாவால் தோற்கடிக்கப்பட்டார்.—திப்புவுக்கும் ஆங்கிலேயர்களுக்குமிடையில் போர்ப் பிரகடனம்.

**1790.** காரன் வாலிஸின் முக்கூட்டு உடன்படிக்கை"; அதாவது நாஜுபர்னவிஸ ுடனும் நைசாமுடனும் தாக்கலுக்கும் தற்காப்புக்குமான நேச உடன்படிக்கை.

**1790—1792.** மூன்ருவது மைசூர் போர் (1791ல் காரன்வாலிஸே படைத்தலைமை பூண்டார்). ஸ்ரீரங்கப்பட்டணத்தின் புறமதில்கள் கடுமையாகத் தாக்கப்பட்டபின் (பிப்ரவரி 1792) திப்பு பணிந்தார்; அவர் தனது பிரதேசத்தில் பாதியைக் கொடுக்கவும், நேச அரசர்களுக்குப் போர்ச் செலவுகளுக்காக 30 லட்சம் பவுன்கள் செலுத்தவும், தனது பிள்ளைகளில் இருவரைப் பிணைகளாக ஆங்கிலேயர்களின் பாதுகாப்பில் விடவும், மகாராஷ்டிரர்களுக்கு 30 லட்சம் ரூபாய் செலுத்தவும் வேண்டியிருந்தது. திண்டுக்கல்லையும் பாராமஹாலையும், அவைகளைச் சுற்றியிருந்த பிரதேசத்தையும், பம்பாயைச் சுற்றியிருந்த சில பகுதியையும் கம்பெனி தனக்காக எடுத்துக்கொண்டது; திப்புவின் பிரதேசத்தில் எஞ்சியிருந்ததில் மூன்றில் ஒரு பகுதியை (கர்னூடகப் பாலக்காட்டையும் சேர்த்து) பேஷ்வாவும், இன்னொரு மூன்றில் ஒரு பகுதியை நைசாமும் பெற்றனர். காரன்வாலிஸின் நாடுசேர்க்கும் கொள்கை பற்றி காமன்ஸ் சபையில் செய்யப்பட்ட குற்றச்சாட்டு தோல்வியுற்றது; மேலும், அவர் மார்க்விஸ்[1] ஆக்கப்பட்டார்.

**செப்டம்பர் 1793.** பிரெஞ்சுக்காரர்களின் கடைசியானதும், மிக மிக முக்கியமானதுமான உடைமையாகிய புதுச்சேரியைக் கர்னல் பிரத்வெய்ட் பிடித்தார்......காரன் வாலிஸ் இங்கிலாந்து திரும்பினர்.—அவரது நீதித்துறைச் சீர்திருத்தங்கள் (பக். 156-158).

1 ஒரு பிரபுப் பட்டம்—மொ. ர்.

**1784—1794. சிந்தியாவின் வாழ்க்கை.** *1782ம் ஆண்டின்* **சால்பை** *(குவாலியரில்)* **உடன்படிக்கை** *(பக் 93 ஐப் பார்க்க1) வாயிலாக அவர்* **தென்னிந்தியாவில்** *பெரும் அதிகாரத்தைப் பெற்ருர்.*

**1784.** *சிந்தியா டெல்லி சென்று, பொம்மைப் பேரரசர்* **ஷா ஆலத்தை** *(ஆலம்கீர்* II *ன் குமாரராகிய, முன்பு ஒரு காலத்தில் செவ்வீரமுடையவராயிருந்த ஷா சாதா) "பேரரசின்* **தலைமை நிர்வாகி***" என்ற பட்டத்தையும், அரசப் படைகளின் முதல் தலைமையையும் தனக்குத் தரும்படியும்,* **ஆக்ரா, டெல்லி ஆகிய மாகாணங்களைத்** *தனக்கு வெகுமதியாக அளிக்கும்படியும் செய்தார்.— [அவர்]* **ராஜபுத்திரர்களைத் தாக்கி,** *பயங்கரமாகத் தோற்கடிக்கப்பட்டார்; அவரது "அரச"ப்படைகள் மொத்தமாக* **எதிரியுடன்** *சேர்ந்துகொண்டன.*

**1787. சிந்தியா, இஸ்மாயில் பேக்** *(முன்னுள் தலைமை நிர்வாகியான* **முகமதுபேக்கின் உடன்பிறந்தார் குமாரர்***)என்பவரால் தாக்கப்பட்டார்; இஸ்மாயில் ஆக்ராவைப் பிடித்து,* **குலாம்காதிர்** *(சபிதாகானின் குமாரர்) என்பவரின் தலைமையிலான பலம் பொருந்திய* **ரோகில்லர்க் கூட்டத்தின்** *சேர்க்கையினுல் வலுப் பெற்ருர். சிந்தியா டெல்லியிலிருந்து படையுடன் வந்தார்; நேசப்படைகளைத் தாக்கி, தோற்கடிக்கப்பட்டார்; ரோகில்லர்கள் வடக்கு நோக்கிப் படையெடுத்துச் சென்றனர்; இஸ்மாயில் பேக்கின் சிறு படையை* **சிந்தியா** *தோற்கடித்தார். ஆனுல் இதற்கிடையில் ரோகில்லர்கள்—மூர்க்கமான கொள்ளைக்காரர்கள்—டெல்லியைப் பிடித்துச் சூறையிட்டு, இரண்டுமாதங்கள் சீற்றத்துடன் தாக்கிக்*

---

1 இப்பதிப்பில் பக். 151

கொள்ளையிட்டு, தங்களால் கைதியாக்கப்பட்ட ஆலம் ஷாவை இறுதியில் குருடாக்கினர்; இஸ்மாயில் பேக் இப்பொழுது சிந்தியாவுடன் துணை சேர்ந்து கொண்டார்.

**1788.** இந்த இரு துணைவர்களும் ஒன்றுசேர்ந்து டெல்லியைப் பிடித்தனர்; ஆலம்ஷா அரியணையில் மீண்டும் அமர்த்தப்பட்டு, குலாம்காதிர் சித்திரவதை செய்து கொல்லப்பட்டு, இஸ்மாயில் பேக் விலைமதிப்புள்ள ஜாகீர் கொடுக்கப்பட்டு அப்பால் அனுப்பப்பட்டார். சிந்தியா செயல்துறையில் டெல்லியில் உண்மையான அரசராகி பிரெஞ்சு, ஆங்கிலேய, சில ஐரிஷ் அதிகாரிகளின் தலைமையில் சிறந்ததொரு சிப்பாய்ப் படையை அமைத்தார்; பெரிய வார்ப்படத் தொழிற்சாலைகளை நிறுவி, எண்ணற்ற பீரங்கிகளை வார்த்தார்; இவ்வாறு பலவற்றையும் அவர் செய்தார்.

**1791.** ராஜபுத்திரர்களுக்கெதிராக சிந்தியாவின் வெற்றிகரமான போர் நடவடிக்கை.—மொகலாயப் பேரரசை மகாராஷ்டிரர்களுக்கு மாற்றவேண்டி—

**1972**—வழிவழியாகவரும் துணையரசர்கள் பட்டத்தைத் தனக்கும் தன் சந்ததிகளுக்கும் மாற்றும்படியும், வக்கீல்-உல்-முத்லக் (பேரரசின் ரீஜென்ட்) என்ற பட்டத்தைப் பேஷ்வாவுக்கு மாற்றும்படியும் அவர் ஷாஆலத்தை இணங்கச் செய்தார்; அவர் தானே பூனுவுக்குச் சென்று, பேஷ்வாவுக்கு இந்தப் பதவியை முறைப்படி அளித்தார்; தன் முறையில், பேஷ்வாவும் தனது முதலமைச்சர் நானுபர்னவிஸுக்குப் பதவியில் சமமானவராக சிந்தியாவைச் செய்தார். அப்பொழுதிருந்து, "அக் காலத்தின் மிக்கத் தந்திரம் வாய்ந்த அரசியல்வாதி" (நானுபர்னவிஸ்-மொர்)யான இவருக்கும், சிந்தியா, அவரது வழித்

தோன்றல்கள் ஆகியவர்களுக்கு மிடையிலான சதிகள் தான் பிந்திய மகாராஷ்டிர வரலாறு சுற்றிச் சுற்றி இயங்கிய மைய அச்சாக விளங்கின.

**1793.** மகாராஷ்டிரப் பிரபுக்கள் வர்க்கத்தில் இரண்டாவதாக அதிகாரம் வகித்த **ஹோல்கார், சிந்தியாவால்** போரில் **தோற்கடிக்கப்பட்டார்;** சிந்தியா இப்பொழுது **இந்துஸ்தானத்தின் முழுமையான அதிபர்** ஆனார்.

**1794.** மகதாஜி **சிந்தியா** திடீரென இறந்தார்; அவரது பட்டங்கள் பதவிகள் அனைத்தையும் **அவரது உடன் பிறந்தா ரதுபேரன் தௌலத்ராவ் சிந்தியா** அடுத்த படியாக வகித்தார்.

**1786—1793. பார்லிமென்ட் நடவடிக்கைகள்: தனது கவுன்சிலை ஆலோசிக்காமல் தானே சட்டமியற்றும் அதிகாரத்தைக் கவர்னர்ஜெனரலுக்கு அளிக்கும் மசோதா 1786ல் நிறைவேறியது;** பின்னர் கவர்னர் ஜெனரலாக வந்த **வெல்லெஸ்லி** இது "மிகவும் பொருத்தமாக" இருக்கக் கண்டார்; **வாரன்ஹேஸ்டிங்ஸுக்குத்** தொல்லை கொடுத்த தடங்கல்களைத் தவிர்ப்பதற்கு **இச்சட்டம் நிறைவேற்றப்பட்டது.**

**1788. அறிவிப்புச் சட்டம்:** கம்பெனியின் **இயக்குநர் குழுவுக்கும்** அரசரின் பிரதிநிதியான **கமிஷனர்கள் குழுவுக்கு** மிடையில் ஏற்பட்ட மோதல் இச்சட்டத்தைச் செய்யும்படி தூண்டியது; இந்தியாவில் விசேஷப் பணிபுரிவதற்காக நான்கு புதிய ரெஜிமெண்டுகளைத் திரட்டுமாறு மந்திரிசபை உத்தரவிட்டது; அவைகளின் பயணச் செலவையும் வாழ்க்கைச் செலவையும் கொடுப்பதற்குக் **கம்பெனி** மறுத்தது. அதற்கு வேண்டிய

நிதியை ஒதுக்கும்படி கம்பெனிக்குக் கமிஷனர்கள் குழு உத்தரவிட்டது; நிதி விவகாரங்களில் தலைமை அதிகாரம் தங்களுடையதே என்று இயக்குநர்கள் அறிவித்தனர். சில ஆண்டுகட்கு முன்னரேயே, 1784ல் இந்தியாவில் ஆளும் அதிகாரம் முழுவதையும் எதிர்காலத்தில் ஏதாவதொரு சமயத்தில் தேசத்தின் கைக்கு மாற்றுவது தான் மந்திரிசபையின் எண்ணம் என்று பிட் கூறியிருந்தார் (இப்போது மீண்டும் கூறினார்). சபையில் பேரிரைச்சலுடன்கூடிய விவாதங்கள். அறிவிப்புச் சட்டமானது 1784-ஆம் வருடத்திய சட்டத்தையேதான் வலியுறுத்தியது; அரச விவகாரங்கள் அனைத்திலும் கம்பெனியின் நடவடிக்கைகளை இயக்குவிக்கும் அதிகாரத்தைக் கமிஷனர்கள் குழுவுக்குக் கொடுத்தது. 1793ல் ஒரு புதிய சாசனத்தினால் கம்பெனியின் சிறப்புரிமைகள் 20 ஆண்டுகளுக்கு நீடித்து வைக்கப்பட்டன.

**[குடியானவர்களின் நிலங்களை ஜமீன்தார்களுக்காகப் பறிமுதல் செய்தல், 1793]**

**வங்காளத்தின் நிலங்கள் ஜமீன்தார்களின் தனி உடைமைகளாக—**

**1793**—வங்காளக் கவர்னர் - ஜெனரல் காரன்வாலிஸ் பிரபு (அவரது நிர்வாகம், 1786 - 1793) முதலாவதாக நில

அளவை செய்து பதிவேடு தயாரிப்பதற்காக உத்தரவிட்ட பொழுது, அங்கீகரிக்கப்பட்டன. (ஜமீன்தார்கள்— "அரசாங்க வருவாயை வசூலிப்பவர்கள்"— ஜமீன்தாரி ராஜாக்கள் என்று தங்களை அழைத்துக் கொண்டதை 1765ல் ஆங்கிலேயர்கள் கண்டனர்; மொகலாயப் பேரரசு சீர்குலைந்த பொழுதே அவர்கள் இவ்வதிகாரத்தைச் சிறிது சிறிதாக மேற்கொண்டு விட்டனர்.) (வருடாந்திர வரியானது செலுத்தப்பட்ட வரை, நில உரிமை முறையைப் பற்றி மொகலாயப் பேரரசர்கள் கவலைப்படவில்லை; இதனாலேயே ஜமீன்தார்களின் உரிமைகளுக்குப் பரம்பரை இயல்பு ஏற்பட்டது: வருடாந்திர வரி என்பது ஒரு குறிப்பிட்ட நிர்ணயிக்கப்பட்ட தொகை; இது ஒரு மாவட்டத்தின் ஆண்டு வருவாய் அதனது சொந்தத் தேவைகளுக்குப் போனது போக —என்று கருதப்பட்டது. இத்தொகைக்குமேல் ஜமீன்தார் வசூலித்தவை எல்லாம் அவருக்கே சொந்தம்; ஆகவே அவர் குடியானவர்களின் இரத்தத்தை உறிஞ்சினர்.) தங்களை ராஜாக்கள் எனக் கருதவேண்டும் என்ற அவர்களது [ஜமீன்தார்களது] கோரிக்கைக்குக் காரணம் அவர்கள் கொள்ளை மூலம் குவித்துவிட்ட நிலச் செல்வமும், பணச் செல்வமும், அவர்கள் துருப்புக்களை வைத்திருந்ததும், உயர்நிலையை அடைந்திருந்ததும், ஆகும். ஆங்கிலேய அரசாங்கமானது (1765[லிருந்து]) அவர்களைக் கீழ்ப்பட்ட வரிவசூல் அதிகாரிகள் என்று மட்டுமே நடத்தி, சட்டப் பொறுப்புக்கு அடங்கியவர்களாக அவர்களைச் செய்து, ஒழுங்காகப் பணம் செலுத்தச் சிறிது தவறினாலும் சிறையில் தள்ளப்படுவதற்கு அல்லது பதவியிலிருந்து விலக்கப்படுவதற்கு உள்ளாகக் கூடியவர்களாக அவர்களைச் செய்தது. ஆனால் மறுபக்கம் குடியானவர்களின் நிலைமை உயர்த்தப்படவில்லை; மாறாக அவர்

கள் இன்னும் அதிகமாகத் தாழ்த்தப்பட்டு நசுக்கப் பட்டனர். வருவாய் முறை முழுதும் தறிகெட்டுப் போயிற்று.

**1786.** ஜமீன்தார்களுக்கு என்னென்ன சலுகைகள் வழங்கப் பட்டிருக்கின்றனவோ அவைகளைத் தங்களது உரிமை என்ற முறையில் அவர்கள் பெற்றிருக்கவில்லை. ஆனால் கவுன்சிலுடன் கூடிய கவர்னரின் தயவினாலேயே பெற் றிருக்கின்றனர் என்று தெளிவாகக் கூறி ஜமீன்தார் களுடன் ஒரு புதிய ஒப்பந்தம் செய்துகொள்ளும்படி கொள்கை ரீதியாக இயக்குநர்கள் உத்தரவிட்டனர்; ஜமீன்தார்களின் நிலைமை பற்றி விசாரணை செய்து, அறிக்கையொன்று சமர்ப்பிப்பதற்காகக் கமிஷன் ஒன்று நியமிக்கப்பட்டது; ஜமீன்தார்கள் பழிவாங்கு வார்கள் என்று பயந்து குடியானவர்கள் சாட்சியங் கூற மறுத்துவிட்டனர்; ஜமீன்தார்கள் விசாரணைகள் எல்லாவற்றையும் தவிர்த்துத் தப்பித்துக் கொண்ட னர்; கமிஷனர்களின் வேலையில் முட்டுக்கட்டை விழுந்தது.

**1793.** காரன்வாலிஸ் பிரபு கமிஷனைக் கைவிட்டு, முன்னெச் சரிக்கையொன்றுமின்றித் திடீரென, கவுன்சிலில் தீர் மானம் ஒன்றை நிறைவேற்றினர்; இது உடனே சட்டத் தின் வன்மை பெற்றது. இதன்படி: மாவட்டத்தின் நிலம் முழுதுக்கும் பரம்பரை சொந்தக்காரர்கள் என்ற முறை யில்......தாங்கள் உரிமை கொண்டாடும் எல்லாவற்றையும் [எல்லா நிலப்பரப்பையும்] சொந்தமாகப் பெற்றிருப் பவர்களாக இனிமேல் ஜமீன்தார்கள் கருதப்படுவார் கள்; ஆண்டுதோறும் அவர்கள் ஒரு விதமான திறை யைக் கஜானாவில் செலுத்துவார்கள். அரசாங்கத்துக் காகத் தங்கள் பங்காகத் தாங்கள் வசூலித்த பொது வரிகளை அல்ல!

திரு. ஷோர் — பின்னுள் சர் ஜான் ஷோர், கயவன் காரன்வாலிஸுக்குப் பின் பதவிக்கு வந்தவர்—இப்படி இந்திய மரபை மொத்தமாக அழிப்பதை எதிர்த்துக் கார சாரமாகப் பேசினுர்; கவுன்சிலில் பெரும்பான்மை யினர் (சதா சட்டமியற்றும் சிரமத்தையும் இந்துக் களின் நிலை பற்றிய நிரந்தர வழக்குகளையும் தொலைப் பதற்காகவே வேண்டி) ஜமீன்தார்களை நிலத்தின் சொந்தக்காரர்கள் என்று அறிவித்துவிடத் தீர்மானித் திருப்பதை அவர் கண்டு, பத்தாண்டுகளுக் கொருமுறை நிர்ணயிக்க வேண்டுமென்று பிரேரேபித்தார்; ஆனுல் சாசுவதத் திட்டத்தைக் கவுன்சில் ஏற்றது. இவர்களது தீர்மானத்தைக் கமிஷனர்கள் குழு கைகொட்டிப் பாராட்டியது.

**1793**—பிட் பிரதம மந்திரியாயிருந்தபொழுது, "இந்திய ஜமீன் தார்களைப் பரம்பரை நிலச் சொந்தக்காரர்களாக சாசுவதமாக நிலை நிறுத்து" வதற்கான ஒரு மசோதாவை நிறைவேற் றியது. இம் முடிவானது மார்ச் 1793ல் கல்கத்தாவில் அரச விளம்பரம் செய்யப்பட்டது; வியப்புற்ற ஜமீன் தார்கள் பேரானந்த மடைந்தனர்! இச்சட்டமானது எப்படித் திடீரென்றும், எதிர்பாராமலும் வந்ததோ, அப்படியே சட்ட விரோதமானதும் ஆகும்; ஏனெனில் இந்துக்கள் எல்லோருக்குமே, மேலும் இயன்றவரை அவர்களது சட்டங்களையே அவர்களுக்குப் பயன்படுத்தி ஆங்கிலேயர்கள் சட்டமியற்றுவதாகக் கருதப்பட்டது. அதே சமயத்தில், ஜமீன்தாரர்களுக்கு எதிராகச் சிவில் நீதி மன்றங்களில் குடியானவர்களுக்குப் பரிகாரங்களைத் தருவன வும், குத்தகை உயர்விலிருந்து அவர்களைப் பாதுகாப்பதுவு மான பல சட்டங்களை ஆங்கிலேய அரசாங்கம் நிறை வேற்றியது. நாட்டின் நிலைமையைக் கவனித்தால், இவைகள் பயனற்ற செல்லாக்காசு[ச் சட்டங்கள்;]

ஏனெனில், தங்களது நிலப் பிரபுக்களின் பிடியில் குடியானவர்கள் முழுமையாகச் சிக்கியிருந்ததால், தற்காப்புக்காகக்கூட அவர்களை எதிர்த்துச் சுண்டு விரலை அசைக்க அவர்கள் துணிவதில்லை,—மேற்கூறப்பட்ட நடவடிக்கைகளில், நிலங்களின் குத்தகைகளை நிரந்தரமாக நிர்ணயித்த சட்ட திட்டம் ஒன்று. ஒரு எழுத்து மூலமான பட்டா உரிமை முறையின் நிபந்தனைகளையும், ஆண்டு தோறும் குத்தகையாகச் செலுத்தவேண்டிய தொகையின் அளவையும் குறிப்பிடும் ஒரு தஸ்தாவேஜு குடியானவனுக்குக் கொடுக்கப்படவேண்டும் என்று அது விதித்தது. புதிய நிலங்களைப் பயிரிடுவதன் மூலம் ஜமீனின் விலை மதிப்பை உயர்த்திக்கொள்வதற்கும், அதிக விலையுள்ள தானிய வகைகளைப் பயிரிடும் நிலங்களின் குத்தகையை உயர்த்துவதற்கும் இந்தச் சட்ட திட்டம் ஜமீன்தார்களை

**1793.** இவ்விதமாக கார்ன்வாலிஸூம் பிட்டும் வங்காளத்துக் கிராம மக்களைச் செயற்கை முறையில் பறிமுதல் செய்தனர். (பக். 161).

**1784.** "கிழக்கிந்தியக் கம்பெனியின் விவகாரங்களை"யும், "இந்தியாவில்" பிரிட்டிஷ் "பிரதேசங்களின்" விவகாரங்களையும் ஒழுங்குபடுத்துவதற்கு பிரிட்டிஷ் சட்ட சபை தீர்மானமாகத் தலையிட்டது. இந்த நோக்கத்துடன் சட்டம், 24வது ஜார்ஜ் III. C. 25 நிறைவேற்றப்பட்டது; இது பிரிட்டிஷ் இந்தியாவின் அரசியல் அமைப்பின் அடிப்படையாக அமைந்தது. இந்திய விவகாரங்களுக்கான கமிஷனர்கள்குழுவை, பொதுவாக அழைக்கப்பட்டதுபோல மேற்பார்வைக்குழுவை, இச் சட்டம் அமைத்தது; இது, கிழக்கிந்தியக் கம்பெனியை அது தனது அரசியல் சம்மந்தப்பட்ட செயல்களைப் புரிவதில் மேற்பார்வையிடவும் கட்டுப்படுத்தவும் செய்யும்.

பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்த வெவ்வேறான ராஜாக்கள் ஜமீன் தார்கள் பாளையக்காரர்கள் மேலும் இதர நிலப் பிரபுக்கள் ஆகியவர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளைப் பற்றி அப்பொழுது நிலவிவந்த சில குற்றச்சாட்டுகளின் உண்மையை ஆராய வேண்டுமென்றும், "இந்தியாவின் சட்டங்கள், அரசியலமைப்பு ஆகியவைகளின்படி நிதானம், நீதி ஆகிய கொள்கைகளின் அடிப்படையில்" எதிர்காலத்தில் நில வருவாயை வசூலிப்பதற்கான நிலையான விதிகளை நிலைநாட்ட வேண்டுமென்றும், அச்சட்டத்தின் 29வது பிரிவின்படி கம்பெனி கோரப்பட்டது.

**1786.** காரன்வாலிஸ்பிரபு கவர்னர் ஜெனரலாக இந்தியாவுக்கு [வந்தார்]; உடனே இந்த ஆசாமி, இயக்குநர் குழு, மேற்பார்வைக் குழு ஆகியவைகளின் கட்டளைக்கு இயைந்த வகையில் (அக் கட்டளையைத்தானே இங்கிலாந்திலிருந்து கொண்டு வந்திருந்தார்)—

**1787.** சிவில் நீதி, கிரிமினல் போலீஸ் ஆகிய பொறுப்புக்களை நிதி நிர்வாகப் பொறுப்புக்களுடன் மீண்டும் இணைத்துக் கலெக்டரிடம் ஒப்புவித்தார்; இதனால் அவரை மாகாண சிவில் நீதி மன்றத்தின் (முசபல் திவானி அதாலத்) மாஜிஸ்டிரேட், ஜட்ஜ் ஆகிய இரு பதவிகளையும் வகிக்கச் செய்தார்; ஆனால் ரெவின்யூ வழக்குகளில் நீதிபதியான கலெக்டரின் சொந்த நீதிமன்றமானது, அவர் தலைமை வகித்த திவானி * நீதிமன்றத்திலிருந்து, தனியாகப் பிரிந்தே இருந்தது; மேல் முறையீடானது (அப்பீல் - மொ.ர்.) பிந்திய நீதி மன்றத்திலிருந்து சதர் திவானி அதாலத்துக்கும், அவரது [கலெக்டரது] ரெவின்யூ நீதி மன்றத்திலிருந்து கல்கத்தாவிலிருந்த ரெவின்யூ போர்டுக்கு மட்டுமே, செய்யப்பட்டது.

---

* சிவில்.

**1793.** வங்காளம், பிஹார், ஒரிசா ஆகிய மூன்று மாகாணங்களுக்குமான காரன்வாலிஸின் சாசுவதத் திட்டத்தில் அம்மூன்று மாகாணங்களும் (அரசாங்கத்துக்குக்—மொ-ர்) கொடுக்கவேண்டிய நில வருவாய்களின் தொகையானது, கடந்தகால வசூல்களின் சராசரிப்படி நிரந்தரமாக நிர்ணயிக்கப்பட்டது; இத்திட்டத்தின்படி (ஜமீன்தார்—மொ-ர்) பணம் செலுத்தத் தவறினல் அந்த மதிப்பு அளவுக்கு நிலம் விற்கப்பட்டு அது ஈடுகட்டப் படவேண்டியது; ஆனல் ஜமீன்தாரோ, "குத்தகைக்காரரிடமிருந்து தனக்கு வரவேண்டிய பாக்கிகளைச் சட்டமுறைகள் மூலம்தான் பெறமுடியும்" நிலப் பிரபுக்கள், தாங்கள் எதைத் தாமதமான சட்டமுறைப்படி மட்டும்தான் தங்களது குத்தகைதாரர்களிடமிருந்து வசூலிக்க முடியுமோ அதையே, தவறினல் தங்களது நிலம் பறித்துக் கொள்ளப்படும் என்ற அச்சத்துக் குள்ளாக்கி ஆண்டுதோறும் அரசாங்கம் கேட்பதால், தங்களுக்குக் கீழ்ப்பட்ட குத்தகைதாரர்களின் தயவை நம்பி வாழவேண்டியநிலை இவ்வாறு தங்களுக்கு ஏற்பட்டு விட்டதாக, முறையிட்டனர். ஆகவே புதிய விதிகள் இயற்றப்பட்டன; இவைகளின்படி, சில குறிப்பிட்ட நிலைமைகளில், மிகக் கவனமாக வரையறுக்கப்பட்ட முறைகளில், தனது குத்தகைதாரர்களைக் கைது செய்வதன் மூலம் பணம் செலுத்துமாறு கட்டாயப்படுத்தும் ஒரு அதிகாரம் ஜமீன்தாருக்கு வழங்கப்பட்டது; அதே சமயம் ஜமீன்தாரின் மீது இதே நடவடிக்கை எடுக்கும் அதிகாரமும் இதே

* இவைகளைப் பார்க்க: ஹாரிங்டன், வங்காளச் சட்டங்கள் சட்ட திட்டங்கள் ஆகியவை பற்றிய தொடக்க ஆராய்ச்சி; கோல்புருக்; வங்காளச் சட்டங்கள், சட்டதிட்டங்கள் ஆகியவைகளின் தொகுப்பின் அனுபந்தம்—ஆசிரியரின் குறிப்பு.

வகையில் கலெக்டருக்கு அளிக்கப்பட்டது. இது 1812ல் [செய்யப்பட்டது].

இத்"திட்டத்தின்" விளைவுகள்; குடியானவர்களுடைய "சமூகச் சொத்தையும் தனிப்பட்ட சொத்தையும்" இப்படிக் கொள்ளையிட்டதின் முதல் விளைவு; [தங்கள் மீது திணிக்கப்பட்ட இந்த] "நிலப் பிரபுக்க"ளுக் கெதிராகக் குடியானவர்களின் தொடர்ச்சியான பல பிராந்தியக் கிளர்ச்சிகள்; இக் கிளர்ச்சிகளினால் சிலவிடங்களில் ஜமீன்தார்கள் விரட்டப்பட்டு அவர்களுக்குப் பதிலாகக் கிழக்கிந்திய கம்பெனி சொந்தக்காரராக ஆயிற்று; மற்ற இடங்களில் ஜமீன்தார்கள் வறுமையுற்று வரிப்பாக்கிகளையும் சொந்தக் கடன்களையும் கொடுப்பதற்காகக் கட்டாயத்தின் பேரிலோ அல்லது சொந்த விருப்பத்தின் பேரிலோ தங்களது ஜமீன்களை விற்றனர். இதனால் அம்மாகாணத்து நில உடைமைகளில் பெரும்பகுதி, மிச்சமாக மூலதனம் வைத்திருந்து அதை உடனேயே நிலத்தில் முதலீடு செய்த சில நகர முதலாளிகளின் கைகளில் விரைவாக வந்து சேர்ந்தது.*

* கோவலேவ்ஸ்கியின் புத்தகத்தினுடைய மார்க்ஸின் சுருக்கத்திலிருந்து இப் பத்தி எடுக்கப்பட்டிருக்கிறது. மார்க்ஸின் தேதிவாரியான குறிப்புக்களை உடனடியாகத் தொடர்ந்து இச்சுருக்கம் வருகிறது.

## [VII] சர் ஜான் ஷோரின் நிர்வாகம் 1793—1798

(காரன்வாலிஸ் பதவியிலிருந்து ஓய்வு பெற்றதும், கவுன்சிலின் மூத்த உறுப்பினர் என்ற முறையில் இவர் இடைக்காலக் கவர்னர்—ஜெனரல் ஆனார்; கமிஷனர்கள் குழு ஐந்து ஆண்டுகளுக்குக் கவர்னர்ஜெனரலாக இவரை உறுதிப்படுத்தியது.)

**1793.** கவர்னர் — ஜெனரலின் தூண்டுதலின் பேரில் 1790-ஆம் ஆண்டின் முக்கூட்டு உடன்படிக்கை (திப்பு சாகிப்புக்கு எதிரானது)யில் கையெழுத்திட்டவர்கள், ஒரு பின்சேர்க்கையுடன் கூடிய உத்திரவாத உடன் படிக்கை ஒன்றையும் கையெழுத்திட முயற்சி நடந்தது; இந்தப் பின்சேர்க்கையின் படி, சட்ட விரோதமான நோக்கத்துக்காகத் திப்பு சுல்தானுக்கெதிராக அம் மூன்று அரசுகளில் ஒன்று போருக்குச் சென்றால், மற்ற அரசுகள் அதற்கு உதவவேண்டும் என்ற கட்டாயம் அந்த உடன்படிக்கையின்படி ஏற்படாது. இந்த உத்தர வாத உடன்படிக்கையில் கையெழுத்திட நானபர்னவிஸ் மறுத்தார்; நைசாம் ஒப்புக்கொண்டார்.

**1794.** பேஷ்வாவும், பொதுவாக மகாராஷ்டிரர்களும் நைசாமுக்கு எதிராகக் கொள்ளைப் போர் நடத்தினர்; முக்கூட்டு உடன் படிக்கையின்படி அவர் சர் ஜான் ஷோரிடம்[உதவி]கோரி னார்; மிகப்பெரும் மகாராஷ்டிரப் படைக்குப் பயந்து அவர் இதை மறுத்தார். நைசாம் அதன் பிறகு பிரெஞ்சுக் காரர்களின் ஒத்துழைப்பைப் பெற்றார்; உதவிக்கு இரண்டு பட்டாளங்களை அவர்கள் இவருக்கு அனுப்பினர்; மேலும், பிரெஞ்சு பதவி வேட்டைக்காரர்களை அதிகாரி களாகக் கொண்ட 18,000 சிப்பாய்கள் அடங்கிய படை யையும் [அவர்] திரட்டினார்.

**நவம்பர் 1794.** பேஷ்வாவான இளம் மாது ராவ் IIன் தலைமையில், 150 பீரங்கிகளுடனும் 1,30,000 ஆட்களுடனும் மத்திய இந்தியாவுக்குள் மகாராஷ்டிரர்கள் நுழைந்தனர். (இப்படைக்கு ஜெனரல் தி புனவன் என்பவரின் தலைமையில் 25,000 ஆட்களை தௌலத் ராவ் சிந்தியா கொடுத்து உதவியிருந்தார்; பேரார் ராஜா 15,000 ஆட்களையும், ஹோல்கார் 10,000ஐயும், பிண்டாரிகள் 10,000 ஐயும், கெய்க்குவாராகிய கோவிந்த ராவ் 5,000ஐயும், பேஷ்வா 65,000ஐயும் கொடுத்திருந்தனர்.) ஹர்தா என்னுமிடத்தில் சேனைகள் சந்தித்தன.

**நவம்பர் 1794.** நைசாம் அலி பெருந்தோல்வி அடைந்து, பணிந்து, £ 30 லட்சம் உடனே செலுத்துவதாகவும், ஆண்டொன்றுக்கு £ 35000 கொடுக்கும் நிலங்களைத் தருவதாகவும், தனது மிகத் திறமைவாய்ந்த அமைச்சரை மகாராஷ்டிரர்களிடம் பிணையாக ஒப்படைப்பதாகவும் ஏற்றுக் கொண்டார்.—ஆங்கிலேயர்களின் "அழிவழக்கான நடுநிலைமை"யால் நியாயமாக ஆத்திரமுற்று, தன்னுடைய சம்பளத்திலிருந்த பிரிட்டிஷ் துருப்புக்களை நைசாம் கலைத்துவிட்டு, மேலும் [சில] பிரெஞ்சுப் பட்டாளங்களைத் திரட்டி, ரெய்மாந் என்பவரை அவைகளின் தலைவராகச் செய்து, ஹைதராபாத்தில் வைக்கப்படவிருக்கும் பிரெஞ்சுப் படைப்பகுதி ஒன்றின் சம்பளத்திற்காக மிக்க வரும்படி தரும் குர்பா மாகாணத்தைப் பிரெஞ்சுக் காரர்களிடம் ஒப்படைத்தார். கம்பெனிப் பிரதேசத்தின் எல்லைகளில் இருந்த துண்டு நிலத்திற்காக ஷோர் குறுக்கிட்டார். சில சம்பவங்களுக்குப் பிறகு இவ்விவகாரம் அங்கிலேயிலேயே விடப்பட்டது.

**அக்டோபர் 1795.** மாதவ ராவ் II தற்கொலை; அவரது ஒன்றுவிட்ட சகோதரராகிய, திறமைசாலியும் எதையும் செய்யத் தயங்காதவருமாகிய பாஜி ராவ் (ரகோபாவின் புதல்வர்)

அடுத்தபடியாகப் பதவியேற்ருர். — பாஜிராவ், நாஹ பர்னவிஸ், சிந்தியா (தௌலத் ராவ்) ஆகியவர்களுக்கிடையில் நடைபெற்ற சதிகளின் (பக். 164—168 பார்க்க) விளைவாக—

டிசம்பர் 4, 1796—பாஜி ராவ் — சிறிது காலம் தனது சகோதரர் சிம்ஞஜியால் பதவி கைப்பற்றப்பட்டு விலகியிருந்த அவர் நைசாம், பர்னவிஸ் முதலியோரின் உதவியுடன் பூஹவில் மீண்டும் பதவியில் அமர்த்தப்பட்டார்; அவர் இப்பொழுது நாஹ பர்னவிஸைப் பதவியிலிருந்து நீக்கி, அவரைத் தனது அரண்மனையில் மிக ஆழமான நிலவறையில் அடைத்தார்; இப்பொழுது அவர் சிந்தியாவைத் தொலைத்துக்கட்ட வேண்டும்; சிந்தியாவுக்குத் தருவதாக வாக்களித்திருந்த ஜாகீரைத்தர அவர் வெளிப்படையாக மறுத்து, சர்ஜி ராவ் கட்கே (சிந்தியாவின் அதிகாரியான துரோகி)யின் மூலமாகப் பூஹவிலிருந்து சிந்தியாவின் துருப்புக்களிடையில் கோரமானதொரு கலகத்தைத் தூண்டிவிட்டார். இதைப்பற்றி சிந்தியாவுக்கு ஒன்றுமே தெரியாது); இவ்வாருக சிந்தியாவுக்கு எதிராகப் பூஹ மக்களைக் கிளப்பிவிட்டு, அவரை வடதிசைக்குத் திருப்பியனுப்பிஞர்.

1796. கல்கத்தாவில் கம்பெனியின் படை (பிரிட்டிஷ் அரசுப் படை அல்ல) அதிகாரிகள் கலகம்; கம்பெனியின் சிவில் பணியில் இருந்தவர்களைவிட இவர்களுக்குக் குறைவாகச் சம்பளம் கொடுக்கப்பட்டது; இவர்கள் சம்பள உயர்வு முதலியன கோரினர். (பக். 168 பார்க்க). சர் ராபர்ட் அபர்குரோம்பி (கான்பூரில் படைத்தலைவர்)யின் தலையீட்டால் இது விலக்கப்பட்டது. (1766ல் கிளைவின் கீழ் நடந்த கலகத்துக்குப் பிறகு இது இரண்டாவதாகும்.)

**1797.** **சென்னையில் மேயரின் நீதிமன்றம்** *(***1726***ல்* **ஜார்ஜ I ஆல்** *நிறுவப்பட்டது)* **ஜார்ஜ் IIIன்** *சட்டம்* **36***வதால் நீக்கப் பட்டு,* **லண்டன் நகரக் காலாண்டு அமர்வு** *(*City of London Quarter Sessions — *மொ-ர்)* *நீதி மன்றத்தின் மாதிரியில்* **பதிவாளர் நீதி மன்றம்** *(*Recorder's Court— *மொ-ர்.)* *நிறுவப்பட்டது. (மேயர்* **பெயரளவிலான** *நீதிபதி ; பதிவாளர்* **உண்மை** *நீதிபதி.) (பக். 169, குறிப்பு 1, பார்க்க.*

**1797.** **ஔத் நவாப் ஆசப் உத்தௌலாவின்** *மரணம் (சோம்பலும் காமக்கேளிக்கையும் மிகுந்த வாழ்க்கைக்குப் பிறகு). அவரது* **புகழ்பெற்ற குமாரர் வசீர் அலி** *என்றவர்* **ஆங்கிலேயர்***களால் அரியணையில் அமர்த்தப்பட்டா***ர்.** *பிறகு இவரை ஆங்கிலேயர்களே பதவியிலிருந்து நீக்கி, ஆசப்பின் சகோதரர்* **சாதத் அலி***யைப் பதவியிலமர்த்தினர்; இவருடன் ஆங்கிலேயர்கள்* **உடன்படிக்கை** *செய்து கொண்டனர்;* **ஔத்தைக் காப்பதற்கு 10,000 பிரிட்டிஷ் துருப்புக்கள்***;* **ஆண்டுக்கு 76 லட்சம் ரூபாய்கள் தந்து** *[நவாபால்]* **பேணப்பட வேண்டியது;** **அலகாபாத் கோட்டை** *அவைகளின் தலைமை ஸ்தலமாக இருக்கும்;* **கவர்னர்ஜெனரலின் அனுமதியின்றி நவாப் உடன்படிக்கை ஏதும் செய்துகொள்ளக் கூடாது.**

**மார்ச் 1798.** **சர் ஜார் ஷோர்** *இங்கிலாந்து திரும்பி* **டேய்ன்மத் பிரபு***வாக்கப்பட்டார்.*

## [VIII] வெல்லெஸ்லி பிரபுவின் நிர்வாகம் 1798—1805

*இவர் கல்கத்தாவில் வந்து சேர்ந்த பொழுது,* **திப்பு சாகிப்** *பழிவாங்கத் துடித்துக்கொண்டிருந்தார்;* **நைசாம் ஹைதராபாத்தில் ரெய்மாந்தின் தலைமையில் 14,000 பிரெஞ்சுக்காரர்களடங்கிய படையையும்,** *36 பீரங்கிகளையும் வைத்திருந்தார் ;* **சிந்தியா திபுவைனின்** *தலைமையில் பிரெஞ்சு அதிகாரிகளால் நடத்தப் பட்ட* **40,000 சிப்பாய்களைக்** *கொண்ட படையுடனும்,* **460** *பீரங்கிகளுடனும் டெல்லியில் ஆண்டுகொண்டிருந்தார். கஜானு*

**1799. நான்காவது, கடைசி, மைசூர் போர்.** *(மரீஷியஸிலிருந்து* **பிரெஞ்சுப்** *படை ஒன்றைத் திப்பு சாகிப் கேட்டுப் பெற்றார் ; அதன் மேல் வெல்லெஸ்லி போர்ப் பிரகடனம் செய்தார்.) ஹைதராபாத்திலிருந்த* **பிரெஞ்சுத் துருப்புக்களை** *விலக்கி விட்டு* **பிரிட்டிஷ் துருப்புக்களை** *வைத்துக்கொள்ளுவதற்கு நைசாமை வெல்லெஸ்லி இணங்கச் செய்தார். பேஷ்வாவும் நைசாமும் உடன்படிக்கையின்படி தங்களது கடமைகளை நிறைவேற்றினர்;* **சிந்தியாவும் நாகபுரி ராஜாவும்** *வெல்லெஸ்லிக்கு உதவி புரியவும், அவருடன் நேச ஒப்பந்தம் செய்து கொள்ளவும் மறுத்தனர் ; இங்கிலாந்திலிருந்த* **கமிஷனர் குழு** *திப்புவுக்கெதிரான போருக்குச் சம்ம*

**பிப்ரவரி 5, 1799.** *20,000 ஆங்கிலேயர்கள், 100 பீரங்கிகள், 20,000 சிப்பாய்கள், சுதேசிக் குதிரைப் படை ஆகியவைகளுடன் வெல்லெஸ்லி மைசூரின் மீது தனது படையெடுப்பைத் தொடங்கினார் ; படைத் தளபதி* **ஹாரிஸ்—மாலவல்லியில்** *(மைசூரில்)* **நடந்த போரில்—**

இங்கு திப்பு தோற்கடிக்கப் பட்டார் — கர்னல் வெல்லெஸ்லி (பின்பு வெலிங்டன் பிரபுவாக ஆனவர்) முதல் தடவையாக இந்திய மண்ணில் தோற்றமளித்தார்.

**மே 3, * 1799.** ஸ்ரீரங்கப் பட்டணம் பிடிபட்டது. திப்பு சாகிப்பின் பிணம் (தலை முதலிய உறுப்புகள் மூலமாகக் குண்டு ஊடுருவி) மதிலுடைப்புக் கருகில் காணப் பட்டது. (வெல்லெஸ்லி மார்க்விஸ் ஆக்கப் பட்டார்) மைசூரின் பழைய இந்து வம்சத்தில் (திப்புவால் பதவியிலிருந்து நீக்கப் பட்ட வம்சம்) தோன்றிய ஐந்து வயது குழந்தைக்கு மைசூரை வெல்லெஸ்லி கொடுத்து விட்டார்; பூரணையா அவருக்கு அமைச்சரானர். (அந்தக் குழந்தை 1868 வரை வாழ்ந்தான்; அதன் பின் நான்கு வயதான அவனது சுவீகாரப் புதல்வன் பட்டமேற்றான்.) பூரணையாவுடன் செய்யப் பட்ட உடன் படிக்கை ஆங்கிலேய மேலாதிக்கத்தின் கீழ் நடைமுறையில் மைசூரைக் கொண்டு வந்தது; ஆங்கிலேயர்களின் பயிற்சிக்கும் உத்தரவுகளுக்கும் கீழ்ப் பட்ட இராணுவம் ஒன்றை மைசூர் வைத்துக் கொள்ள வேண்டும்; ஆங்கிலேய அரசாங்கத்தின் கொடையாக ராஜ்யம் கருதப்பட வேண்டும்; நிர்வாகம் கேடுற்ற பொழுது, அல்லது இராணுவத்துக்கான ஆண்டு உதவித் தொகை செலுத்தப் படாத பொழுது, உதவித் தொகை செலுத்தப் படுவதற்குத் தேவையானதென்று எவ்வளவு பிரதேசத்தைக் கம்பெனி கருதுகிறதோ அவ்வளவு பிரதேசத்தைக் கைப் பற்றிக்கொள்ளும்

* மே 4 என்று வில்க்ஸ். மைசூர் வரலாற்றைச் சுட்டிக் காட்டும் முயற்சியில் இந்தியாவின் தென் பகுதியின் வரலாற்றுச் சித்திரங்கள், தொகுதி III-ல் லண்டன், 1817ல் எழுதினார்

உரிமை கம்பெனிக்கு உண்டு; கம்பெனிக்கு ஆண்டு தோறும் £ 3,10,000த்தை [மைசூர்] செலுத்த வேண்டும்; இதிலிருந்து திப்புவின் வாரிசுகளுக்கு ஆண்டுத் தொகை £ 96,000த்தைக் கம்பெனி தந்தது; நைசாமுக்கு [மைசூர் செலுத்திய] ஆண்டுத் தொகை £ 2,40,000த்தில், £ 28,000 மைசூர் சேனையின் பிரதம தளபதிக்கும் (ஏனெனில் இந்த ஆசாமி நிபந்தனையின்றி சரணடைந்திருந்தார்), £ 92,000 பேஷ்வாவுக்கும் கொடுக்கப்பட வேண்டும்; பேஷ்வா இதை வாங்க மறுத்து விட்டார். இப்பொழுதிலிருந்து இந்தப் பிரதேசமானது நைசாமுக்கும் கம்பெனிக்குமிடையில் பங்கிடப்பட்டு விட்டது—இதன் பிறகு மைசூரில் ஆபத்து மிக்க கலகம் ஒன்றே ஒன்றுதான் [தோன்றிற்று]. துந்தியாவாக் என்பவரின் கலகம்; சில மாதங்களுக்குப் பிறகு அது ஒடுக்கப் பட்டு, அவரே கொல்லப் பட்டார்.—ஹைதராபாத்துக்கு மேலும் அதிக பிரிட்டிஷ் துருப்புகளை அனுப்பும் படி நைசாம் கோரினார்; அவைகளின் செலவுக்காக, இன்னும் "கொடை மாவட்டங்கள்" என்று வழங்கப் படுகிற பகுதியைக் கொடுத்தார்.

**1799.** தஞ்சாவூரை ஆங்கிலேயர்கள் இணைத்துக் கொண்டனர் (பக் 175ஐப் பார்க்க); இவ்வரசு 120 ஆண்டுகளுக்கு முன், சிவாஜியின் சகோதரர் வெங்கோஜியால் நிறுவப்பட்டது.

**கர்னுடகத்தை இணைத்துக் கொள்ளல்.** (பக். 176, 177)— 1795ல் ஊதாரியான "கம்பெனி நவாப்" முகமது அலி இறந்தார்; அவருக்குப் பின் பட்டத்துக்கு வந்தவரும், அவரது மகனுமான உதாரி உம்தத் உல் உம்ரா 1799ல் இறந்தார்; அவரது உடன் பிறந்தார் மகன் அசீம் உல்

உம்ராவை வெல்லெஸ்லி நவாபாக்கினர். இவர் தனது வாழ்க்கைச் செலவுக்காக ஆண்டு தோறும் வருவாயில் ஐந்தில் ஒன்று தருவதாக உறுதி பெற்ற பின், கர்னுட்கத்தை ஆங்கிலேயர்கள் இணைத்துக் கொள்வதற்கு உடன் பட்டார்.

**1799 - 1801.** ஔத்தின் ஒரு பகுதியை வெட்கங் கெட்ட வகையில் இணைத்துக் கொள்ளல்.

**1800.** வெல்லெஸ்லி ஔத் நவாப் சாதத் அலியைத் தனது துருப்புகளைக் கலைத்து விட்டு, ஆங்கிலேயத் துருப்புக்களை அல்லது ஆங்கிலேய அதிகாரிகளின் தலைமையில் சிப்பாய்களை வைத்துக் கொள்ளும் படியும், இந்த பிரிட்டிஷ் படைப் பகுதிகளுக்குக் கொட்டிக் கொடுக்கும் படியும் உத்தரவிட்டார்! இதன் பொருள்: ஔதில் இராணுவத் தலைமை முழுவதையும் கம்பெனியின் கைக்கு மாற்றவேண்டும் என்பதும் இந்த வியாபாரத்தில் தனது அடிமைத் தளைக்குத்தானே செலவுப் பணம் கொடுக்க வேண்டும் என்பதும்தானே! வெல்லெஸ்லிக்கு எழுதிய கடிதம் ஒன்றில், இவ் விதத்தில் நாட்டின் சுதந்திரத்தைப் பலியிடுவதைக் காட்டிலும் தனது புதல்வர்களில் ஒருவர் நவாபாகும் பொருட்டுத் தானே ராஜினமா செய்வதாக சாதத் எழுதினர்! வெல்லெஸ்லி தனது பதில் தபாலில், சாதத் அலி உண்மையில் பதவி துறந்து விட்டதாகவும், அரச பொக்கிஷம் முழுதும் இப்பொழுது கம்பெனியிடம் ஒப்படைக்கப் படவேண்டும் என்றும், அந்த நாடு முழுதும் ஆங்கிலேயர்களுடையது என்று அறிவிக்க வேண்டும் என்றும், ஆங்கிலேயக் கவர்னர்—ஜெனரல் கொடுத்த கொடை என்ற முறையிலேயே பின்வரும் ஒவ்வொரு நவாபும் அரியணையைப் பெற்றிருக்க வேண்டும் என்றும், வெல்லெஸ்லி ஒரு

பொய் உரைத்தார். அதன் மேல், தனது கடிதத்தில் பதவி துறத்தலைத் தனது விருப்பம் என்ற முறையில் மட்டுமே குறிப்பிட்டிருந்த சாதத் அலி, அதை இப்பொழுது வாபஸ் பெற்றார். வெல்லெஸ்லி துருப்புகளை அனுப்பினார்; நவாப் இணங்கும்படி நிர்பந்தப் படுத்தப் பட்டார்; தனது துருப்புக்களில் பெரும் பகுதியைக் கலைத்து விட்டு, அதற்குப் பதிலாகப் பிரிட்டிஷ் துருப்புக்களை அவர் ஏற்றுக் கொண்டார்.

நவம்பர் **1800**. எஞ்சியிருந்த சுதேசித் துருப்புக்களைக் கலைத்துவிடவேண்டும் என்றும், அவைகளுக்குப் பதிலாகப் புதிய பிரிட்டிஷ் படைகள் வைக்கப்படப் போவதை உத்தேசித்து உதவித் தொகையை 55 லட்சம் ரூபாயிலிருந்து 76 லட்சமாக அதிகரிக்கும்படியும் வெல்லெஸ்லி கோரினார். அவ்வளவு அதிக கப்பத்தைச் செலுத்தத் தன்னால் "இயலாது" என்று நவாப் பயனின்றி ஆட்சேபனை செய்தார்! அதன்பிறகு, அலகாபாத், ஆசம்கார், கோரக்பூர், தெற்கு தோவாப் * இன்னும் சில பகுதிகள்—எல்லாம் சேர்ந்து மொத்தமாக ஆண்டு வரும்படி 14, 52, 347 தந்தன—ஆகியவைகளை அவர் [பிரிட்டிஷ்காரர்களுக்குக்] கொடுத்துக்கப்பம் கட்டுவதிலிருந்து தன்னை விடுதலை செய்து கொண்டார். கவர்னர்-ஜெனரலின் சகோதரர் ஹென்றி வெல்லெஸ்லி (பின்னர்கௌலிபிரபு) யின் மேற்பார்வையின் கீழ் அமைந்த கமிஷன் ஒன்று அப்பிரதேசங்களின் நிலவரித் திட்டத்தை அமைத்தது.

* தோவாப் எனபது இரு ஆறுகளுக்கு இடைப்பட்ட நிலம்.

**1800.** **காபூலின் அரசர் சமான்** (1757-ல் டெல்லியைப் பிடித்து, 1761-ல் பாணிபட்டுச் சண்டைக்குப்பிறகு **காபூலை** *[மீண்டும்] வென்று, அங்கு ஒரு துரானிய வம்சத்தை [மீண்டும்] நிறுவிய **அகமதுகான் அப்தாலி** யின் குமாரரான **தைமூர்ஷாவின்** குமாரர்); இவர் **திப்பு சுல்தானுடன்** பேச்சுவார்த்தைகள் நடத்திக்கொண்டிருந்தார்; எனவே இவரால்தாக்குதல் ஏற்படும் என்று கம்பெனி அஞ்சியது ; பகைவரின் படையெடுப்புக்குத் தடையாக இருக்கும் பொருட்டு **வெல்லெஸ்லி ஔதை** இணைத்துக் கொண்டதற்கு முக்கிய காரணம் இது தான் **சமான்** பல சமயங்களில் எல்லைவரைப் படைகளை கொண்டுவந்து, "**இஸ்லாம் மதத்தின் பாதுகாவலன்**" என்றமுறையில் இந்தியாவிலிருந்த முகம்மதியர்களுக்கு வேண்டுகோள் விடுத்து, பற்பல இந்து ராஜாக்களிட மிருந்துகூட உறுதிமொழிகளைப் பெற்றார். நெப் போலியன் கிழக்கில்கூட சதி செய்துகொண்டிருந்தார்; **பிரான்ஸ், பாரசீகம், ஆப்கானிஸ்தானம்**—இந்தக்கூட்டைக் கண்டு கல்கத்தாவிலிருந்த "அதிகாரிகள்" நடுங்கினர். ஆகவே, காப்டன் **மால்கம்** என்பவரின் தலைமையில் **பாரசீகத்துக்குத் தூது!** [இதற்குக்] கொள்ளைப் பணம் செலவாயிற்று ; "**ஷாவிலிருந்து ஒட்டகம் ஓட்டி வரை**" எல்லாவற்றையும் அவர் "விலை கொடுத்து வாங்கினார்" **டெஹ்ரானில்** கையெழுத்திடப்பட்ட, **கீழ்வரும் உடன் படிக்கையைச்** செய்தார் ; **பாரசீகத்திலிருந்து ஒவ்வொரு**

* இங்கு மார்க்ஸ் உபயோகித்த புத்தகத்தில் ஒரு தவறு இருக்கிறது ; ஏனெனில் இங்குப்பேசப்படுகின்ற நகரம் காண்டகார்; காபூல் அல்ல. ஜேம்ஸ் மில் போன்ற பல பிரிட்டிஷ் ஆசிரியர்கள், ஏதோ காரணத்தினால், காபூலை அகமது ஷாவின் தலைநகராகக்கருதுகின்றனர்; ஆனால் அவர் ஆட்சி செலுத்தி இறந்த இடம் காண்டகார்தான்.

பிரெஞ்சுக்காரரையும் பாரசீக மன்னர் வெளியேற்ற வேண்டியது ; இந்தியாவின் மீதான எல்லாத் தாக்குதல்களுக்கும் ஆதரவு மறுத்து, தேவைப்பட்டால் அவைகளை ஆயுதமேந்தியும் எதிர்க்க வேண்டியது ; அயல் நாட்டு வாணிகத்துக்கானத் தனது ஆதரவு அனைத்தையும் ஆங்கிலேயர்களுக்குத் தரவேண்டியது.

**1802.** வெல்லெஸ்லி தனது ராஜிநாமாவைக் கமிஷனர் குழுவிடம் சேர்ப்பித்தார் ; ஆனால் அவர்களது வேண்டுகோளின் பேரில் 1805 வரை [இந்தியாவில்] தங்கியிருந்தார் ; உண்மை என்ன வென்றால், அவர் கம்பெனியுடன் சண்டை போட்டுக் கொண்டார் ; காரணம் தனிப்பட்ட வியாபாரிகளின் உரிமைகளை இந்தியாவுக்கும் விஸ்தரிக்க வேண்டும் என்று அவர் விரும்பினார்.

**அந்நூற்றாண்டின் தொடக்கம்.** ஆங்கிலேயர்கள் நீங்கலாக ஒரே பெரும் சக்திதான் [இந்தியாவில் இருந்தது] அதுதான் மகாராஷ்டிரர்களுடையது; இவர்கள் ஐந்து முக்கியகட்சிகளாகப் பிரிந்து, ஒருவருக்கொருவர் பெரும்பாலும் விரோதம் பூண்டே இருந்தனர். (1) மகராஷ்டிரர்களின் பெயரளவிலான மேலான தலைவர் பேஷ்வா இப்பொழுது பாஜிராவ்; பூனாவில் ஆட்சி செய்தார் ; இங்குக்கூறப்படாத சிறு அரசுகள் பாதி சுதந்தர முடையவைகளாகவும், தங்களது பரம்பரை அரசர் என்ற வகையில் பேஷ்வாவுக்கு நிலமானிய முறையில் பாதி கீழ்படிந்தும் இருந்தன ; (2) மகாராஷ்டிரக் குடும்பங்களில் மிகப் பலம் பொருந்திய [குடும்பத்தின் பிரதிநிதியான] தௌலத்ராவ் சிந்தியா குவாலியரில் இருந்தார் ; டெல்லி முதலிய பிரதேசங்களைப் பெற்றிருந்தார் ; (3) ஜஸ்வந்த்ராவ் ஹோல்கார் இந்தூரில் இருந்தார் ; சிந்தியாவின் ஜென்ம விரோதி ; (4) நாகபுரி ராஜா ரகோஜி

**பான்ஸ்லே;** எதற்கும் யாருடனும் போர்ச்செய்யத்தயங்காதவர் ; (5) **குஜராத்தின் கெய்க்குவார் பதேசிங் ;** மகாராஷ்டிர அரசியிற் போராட்டங்களில் எப்பொழுதும் கலந்து கொண்டதில்லை.

**1800.** **நானுபர்னவிஸ்** சிறையில் இறந்தார். **சாகர் நகரை** (**இந்தூரில்,** சிந்தியாவுக்குச் சொந்தமானது) ஹோல்கார் கொள்ளையடித்ததால் சிந்தியா **பூனவை** விட்டு, ரோஹில்லாத் தலைவர் **அமீர்கானுடன்** கூடிக்கொண்டு **மாளவத்தை**-இதுவும் சிந்தியாவுக்குச் சொந்தமானதே-நாசப்படுத்தனர்—சிந்தியாவின் படைகளும் ஹோல்காரின் படைகளும் **உஜ்ஜெயினி** (மாளவத்தில்)யில் சந்தித்தன ; **சிந்தியா தோற்கடிக்கப்பட்டார் ;** உதவி கோரி பூனவுக்கு ஆள் விடுத்து—

**1801**— அங்கிருந்து **சரஜிராவ் கட்கே** யின் தலைமையில் **படைகளைப்** பெற்றார். இந்த நேசப் படைகள் **அக்டோபர் 14-ல் ஹோல்காரைத் தோற்கடித்து,** அவரது தலைநகர் இந்தூர் மீதுபடையெடுத்து, அதைச்சூறையிட்டன; **ஹோல்கார் கந்தேஷுக்கு** ஓடி, சுற்றியிருந்த பிரதேசத்தை நாசப்படுத்தினர் ; **சந்தோர்** வரை முன்னேறி பிறகு சிந்தியாவுக்கெதிராகப் பேஷ்வாவின் பாதுகாப்பைக் கோரி தான் தனது படைகள் எல்லாவற்றுடனும் அவரிடம் வருவதாகப் பேஷ்வாவுக்குத் தெரிவித்தார்.

**1802.** சிறிது காலத்துக்கு முன்பு தான் பிடித்த இளம் கொள்ளைக்காரத் தலைவர் **விட்டாஜி**—ஹோல்காரின் சகோதரர்—யை மிகக் கொடுமையாகக் கொலைசெய்து விட்டிருந்த **பாஜிராவுக்கு** இச்செய்தியானது வெளிப்படையான போர்த்துவக்கத்துக்கு ஒரு வெறும் திரையாகவே தோன்றியது. பூனவிலிருந்த பிரிட்டிஷ் ஸ்தானிகர் **கர்னல் குளோஸ்** ஹோல்காருக் கெதிராகப்

பேஷ்வாவுக்குத் தர முன் வந்த கம்பெனியின் இராணுவ உதவியை, அவர் பிடிவாதமாக மறுத்தார்; சிந்தியா விரைந்து முன் சென்று, பூனுவுக்கருகில் முகாமடித்தார்.

அக்டோபர் 25, 1802, பெரும் போர். ஹோல்கார் வென்றார்; பேஷ்வா அகமது நகருக்கு சுமார் 50 கல் தொலைவிலுள்ள சிங்கார் என்னுமிடத்துக்கும், அங்கிருந்து (கம்பெனிக்குச் சொந்தமான) பஸ்ஸீனுக்கும் ஓடினார். பூனுவில், தான் தங்கிய இரண்டு மாதங்களில், பேஷ்வாவின் சகோதரர் அமிர்தராவை ஹோல்கார் அரியணை மீது அமர்த்தினார்; சிந்தியா வடக்கே [சென்றார்.]

1802. பாஜிராவுக்கும் கர்னல் குளோஸுக்குமிடையில் பஸ்ஸீன் உடன்படிக்கை: பேஷ்வா பீரங்கிகளுடன் 6,000 பிரிட்டிஷ் காலாட்படையை வைத்துக் கொள்ள வேண்டியது; அவைகளின் வாழ்க்கைச் செலவுக்காக, ஆண்டு வருவாய் 25 *லட்சம் ரூபாய் தரும்' தக்காணத்திலுள்ள சில மாவட்டங்களைக் கம்பெனிக்குத் தரவேண்டியது; தனது பணியில் பிரிட்டிஷ்காரரல்லாத வேறு எந்த ஐரோப்பியர்களையும் வைத்துக்கொள்ளக்கூடாது; நைசாமுக்கும் கெய்க்குவாருக்கும் எதிரான தனது உரிமைக் கோரிக்கைகளையெல்லாம் நடுவர் என்ற முறையில் கவர்னர்-ஜெனரலின் தீர்ப்புக்கு அனுப்ப வேண்டியது; அவரது ஒப்புதல் இன்றி அரசியல் மாற்றங்கள் எதையும் செய்யக்கூடாது; தற்காப்பு ஒப்பந்தம் ஒன்றில் பரஸ்பரம் தாங்கள் கட்டுண்டிருப்பதாக இரு தரப்பினரும் தங்களைக் கருத வேண்டும்—தங்களது சுதந்திரத்தை இல்லாமற் செய்து ஆங்கிலேயர்களைத் தங்களுக்கு மேலானஒரு அரசாக ஏற்றுக்கொள்ளச் செய்யும். இந்தத் " துணை உடன்

* 26 லட்சம் என்கிறார் ஸ்மித், ஆக்ஸ்போர்டின் இந்திய வரலாறு, 1923.

படிக்கை'' யைக் கண்டு மகாராஷ்டிரர்கள் அனைவரும் ஆத்திரமுற்றனர்—இதன் விளைவு, ஹோல்காரின் நடவடிக்கைகள் ; அவர்—

**1803—** ஆங்கிலேயர்களுக்கெதிராகஒருமகாராஷ்டிரக் கூட்டணி [அமைத்தார்;] சிந்தியா, அமிர்தராவ், பான்ஸ்லே [நாகபுரி ராஜா] ஆகியவர்களை அது கொண்டிருந்தது ; ஹோல்கார் சேர இணங்கினார் ; ஆனால் பின்னால் தனது வாக்குறுதியைக் காப்பாற்றத் தவறிவிட்டார் ; கெய்க்குவார் நடுநிலைமை வகித்தார்.

## பெரும் மகாராஷ்டிர யுத்தம்

## 1803 — 1805

**ஏப்ரல் 17, 1803.** சிந்தியாவும் பான்ஸ்லேயும் நாகபுரியில் சந்தித்து, அமிர்த ராவுடன் சேருவதற்காக உடனே பூனாவுக்குப் படையுடன் சென்றனர். — வெல்லெஸ்லீ பிரபு துருப்புக்களைக் ஆயத்தப்படுத்த உத்தரவிட்டார். ஜெனரல் வெல்லெஸ்லி (வெல்லிங்டன்) முதல் தடவையாக படைத் தலைமை மேற்கொண்டு மைசூர் படையுடன் (சுமார் 12.000 பேர்கள்), பாஜி ராவை மீண்டும் அரியணையில் அமர்த்துவதற்காகச் செல்வதாகக் கூறிக் கொண்டு, விரைந்து படை செலுத்தி பூனா மீது முன்னேறினார்;ஹோல்கார்சந்தோருக்குத் திரும்பினார்; வெல்லெஸ்லி பூனா வைப் பிடித்தார்; அமிர்த ராவ் சிந்தியாவின் முகாமுக்கு ஓடினார். —கூட்டாளிகளான மகாராஷ்டிரர்கள் பூனா மீது படையுடன் சென்றனர்; கூட்டுப் பேச்சு

கள் பயனளிக்கவில்லை; ஆனால் இடையில் சில மாதங்கள் கழிந்தன. தேவையான உத்தரவுகளையெல்லாம் இட்டு விட்டு, கூட்டுப் படைகளின் முகாமிலிருந்து கர்னல் காலின்ஸை ஜெனரல் வெல்லெஸ்லி திருப்பியழைத்தார்; போர் ஆரம்பித்தது.

ஜெனரல் வெல்லெஸ்லியின் உத்தரவுகளின்படி, குவாலியரில் பெரோன் என்பவரின் தலைமையிலான சிந்தியாவின் ரிசர்வ் படையை ஜெனரல் லேக் தாக்க வேண்டியது; அதே சமயம், இரண்டு படைப் பிரிவுகள் பரோச்சில் சிந்தியாவின் பிரதேசங்களையும், கட்டாக் (வங்காள ராஜதானி) கில் ஹோல்காரின் பிரதேசங்களையும் பிடிக்க வேண்டும். ஹைதாரபாத், கோடை மாவட்டங்கள் ஆகியவைகளின் பாதுகாப்புக்காக சுமார் 3000 பேர்கள் நிறுத்தப்பட்டனர்; பிரதான சேனையானது — 17,000 பேர்கள் — வெல்லெஸ்லியுடன் இருந்தது.

ஆகஸ்டு 1803. வெல்லெஸ்லி அகமதுநகரைப் பிடித்தார்; கர்னல் உடிங்டன் பரோச்சைப் பிடித்தார்; ஜெனரல் பேக் அலிகரின் (டெல்லி மாகாணம்) அரண் மீது தாக்குதல் தொடுத்து, செப்டம்பர் 2ந் தேதி கோட்டையைப் பிடித்தார்! செப்டம்பர் 4ந் தேதி அந்த இடம் ஒப்பந்தத்தின் பேரில் சரணடைந்தது.

செப்டம்பர் 3*, 1803. அஸ்ஸேய்ப் பெரும்போர்; மகாராஷ்டிரர்கள் ஜெனரல் வெல்லெஸ்லியால் தோற்கடிக்கப்பட்டனர். ஏறத்தாழ அதே சமயத்தில் ஹார்கோர்ட்,

* செப்டம்பர் 23 என்கிறார் பர்க்ஸ்.

கட்டாக்கைப் (வங்காள விரிகுடாவில்) பிடித்தார்; ஸ்டீபென்ஸன் பர்ஹான்பூர் கோட்டையையும், சாத்பூராக் குன்றுகளில் அசிர்காரரையும் பிடித்தார். சிந்தியா வெல்லெஸ்லியுடன் தற்காலிகப் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்து கொண்டார்; பரோக்கிலிருந்துவந்த ஸ்டீபென்ஸனின் படையுடன் வெல்லெஸ்லி சேர்ந்து கொண்டு பான்ஸ்லேயின் பலம்பொருந்த அரணமைந்த இடமாகிய காவில் காரை நோக்கி சென்றார்.

நவம்பர் † 28,1803. அர்காவ்ன் (எல்லிச்பூருக்குஅருகில்)சண்டை வெல்லெஸ்லி வென்றார்; பான்ஸ்லே ஓடினார்; நாகபுரி (பேராரின் தலை நகர்)க்கு எதிராகப் படையெடுத்துச் செல்லும்படி கர்னல் ஸ்டீபென்சன் அனுப்பப்பட்டார்; பான்ஸ்லே சமாதானம் வேண்டினார்; இதனால் —

டிசம்பர் 18††, 1803—பான்ஸ்லேக்கும் கிழக்கிந்திய கம்பெனியின் சார்பில் மவுன்ட்ஸ்டூவர்ட் எல்பின்ஸ்டனுக்கும் இடையில் தேவகாவ்ன் உடன்படிக்கை: பேராரின் பிரதேசங்களை ஆங்கிலேயர்கள் விட்டு வைத்தனர்; ராஜா கட்டாக்கைக் கம்பெனிக்குக் கொடுத்து, பல மாவட்டங்களை நைசாமுக்குக்குக் கொடுத்தார்; எல்லா பிரெஞ்சுக்காரர்களையும், இங்கிலாந்துடன் போரில் ஈடுபட்டிருந்த ஐரோப்பியர்களையும் விலக்கினார்; எல்லாத் தகராறுகளையும் கவர்னர் — ஜெனரலின் தீர்ப்புக்கு விடுவதாக [ஒப்புக் கொண்டார்].

† நவம்பர் 29 என்கிறார் பர்க்ஸ்.

†† டிசம்பர் 17 என்கிறார் பர்க்ஸ்

செப்டம்பர் 14. அலிகரைப் பிடித்த பின் நேராக டெல்லி நோக்கி முன்னேறிய லேக், அந்நகருக்கு ஆறு மைல் தூரத்தில் பிரெஞ்சு அதிகாரிகளின் தலைமையிலான சிந்தியாவின் படைகளைச் சந்தித்து, அந்தப் பிரெஞ்சுக்காரர்களைத் தோற்கடித்து, அன்று மாலை டெல்லியைப் பிடித்து குருடாக்கப் பட்ட ஷா ஆலத்தை (83 வயது) பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் அரியணையில் மீண்டும் அமர்த்தினர்.

அக்டோபர் 17. பரத்பூர் ராஜாவிடமிருந்த ஆக்ரா லேக்கிடம் ஒப்பந்தத்தின் பேரில் சரணடைந்தது. — தக்காணத்திலிருந்தும் டெல்லியிலிருந்தும் வந்த விரோதியின் பெரும் படைக்கெதிராக லேக் கிளம்பினர்; பயங்கரப் போருக்குப் பிறகு லேக் வெற்றி பெற்றார் —லஸ்வாரி (டெல்லிக்குத் தெற்கில் 128 கல் தொலைவில் ஒரு கிராமம்) என்னுமிடத்தில்; சிந்தியா வீழ்ச்சி.

டிசம்பர் 4, *1803. லேக்குக்கும் (கம்பெனியின் சார்பில்) சிந்தியாவுக்குமிடையில் அஞ்சன்காவ்ன் உடன்படிக்கை; ஜெய்ப்பூருக்கும ஜோத்பூருக்கும்வடக்கிலிருந்த தனது பிரதேசங்கள் அனைத்தையும் சிந்தியா கொடுத்தார்; பரோச்சையும் அகமதுநகரையும் கொடுத்தார்; நைசாம், பேஷ்வா, கெய்க்குவார், கம்பெனி ஆகியோருக்கு எதிரான தனது கோரிக்கைகள் அனைத்தும் கைவிட்டார்; கம்பெனியால் சுதந்திரமானவை என்று அங்கீகரிக்கப் பட்ட எல்லா அரசுகளின் சுதந்திரத்தையும் தானும் அங்கீகரிக்க வேண்டியிருந்தது; எல்லா அந்நியர்களையும் நீக்கி விடுவதாகவும், எல்லாத் தகராறு

* டிசம்பர் 30 என்கிறார் பர்க்ஸ்.

களிலும் கம்பெனியின் தீர்ப்புக்குப் பணிவதாகவும் ஏற்றுக் கொண்டார். — கவர்னர் ஜெனரல் வெல்லெஸ்லி பேரரரை நைசாமுக்கும், அகமதுநகரைப் பேஷ்வாவுக்கும் கொடுத்து, கட்டாக்கைக் கம்பெனிக்காக வைத்துக் கொண்டார்; அதே சமயத்தில், பரத்பூர், ஜெய்ப்பூர், ஜோத்பூர் ஆகியவைகளின் ராஜாக்களுடன் உடன் படிக்கைகள் செய்து கொண்டார்; கோகாத் (சிந்தியா வின் குவாலியர் பிரதேசத்தில்) ராஜா வுடனும் உடன் படிக்கை செய்து கொண்டார்; அவருக்கு சிந்தியாவின் தளகர்த்தார் அம்பாஜி இங்கிலியா வுடன் குவாலியர்நகரை யும் [தருவதாக உறுதி கூறினர்].

**1804** முற்பகுதி. ஹோல்கார் (தனது உறுதி மொழியின்படி மகாராஷ்டிரர்களின் கூட்டணியில் சேருவதற்குப் பதி லாக, 60,000 குதிரைப் படையினருடன் சிந்தியாவின் பிரதேசங்களைக் கொள்ளையடித்து விட்டு) பிரிட்டிஷ்காரர் களின் துணையான ஜோத்பூர் ராஜாவின் பிரதேசத்தைப் படையெடுக்க ஆரம்பித்தார்; இதனால் வெல்லெஸ்லி, லேக் ஆகியவர்களின் வெற்றி பெற்ற படைகள் நெருங்கின; ஹோல்கார் ஜெய்ப்பூரிலிருந்து பின் வாங்கி சம்பல் நதிக்கு அப்பால் சென்றார்; அங்கு அவரைப் பின் தொடர்ந்து செல்லும்படி சிறு படையுடன் அனுப்பப்பட்ட கர்னல் மான்சனை மிகச் செம்மையாக முறியடித்தார்; பீரங்கிகள், சாமான் மூட்டைகள், முகாம் தளவாடங்கள், படைப் பிரிவின் பண்டங்கள் ஆகியவைகளை இழந்து, தனது காலாட் படையில்கிட்டத் தட்ட ஐந்து பட்டாளங்களையும் இழந்து, உயிர் தப்பிய பரிதாபகரமான ஆட்களுடன் கடைசியில் மான்சன் ஆக்ரா வந்து சேர்ந்தார். — ஹோல்கார் அடுத்தபடியாக டெல்லியை — பயன் விளையாதவாறு — தாக்கி

சுற்றியிருந்த பிரதேசத்தை நாசப்படுத்தினர்; சகல வேகத்துடனும் ஜெனரல் லேக்அவரைப்பின்தொடர்ந்து அவரது படையை எட்டிப் பிடித்தார்.

**நவம்பர் 13, 1804.** தீக் சண்டை (பரத்பூர் பிரதேசத்தில்); ஹோல்கார் தோற்கடிக்கப்பட்டு மதுராவுக்கு (யமுனை நதிக்கரையில், ஆக்ராவுக்கு வடக்கில்) ஓடினர்; பரத்பூர் ராஜாவுக்குச் சொந்தமான சண்டையின் பொழுது ஆங்கிலேயர்களின் மேல் சுட்ட தீக்கோட்டை சண்டையின் வெற்றிக்குப் பிறகு, கடுந்தாக்குதல் செய்து பிடிக்கப்பட்டது.

**1805.** லேக் வெற்றியின்றி பரத்பூரைத் தாக்கினர்; ஆயினும் அதன் ராஜா ஆங்கிலேயர்களுடன் வழிக்கு வந்தார். ஹோல்கார் இந்தியாவுடன் சேர்ந்து கொண்டார்; ஹோல்கார், பரத்பூர் ராஜா, ரோகில்லரான அமீர்கான் ஆகியோரின் படைகளுடன் சிந்தியா தனது படைகளையும் சேர்த்து, அப்புதிய கூட்டுக்குத் தலைவராக இப்பொழுது இருந்தார். உண்மையென்ன வென்றால், கவர்னர் ஜெனரல் வெல்லெஸ்லி சிந்தியா குடும்பத்தின் பழைய இருப்பிடமான குவாலியரை,[1] கோகாத் ராஜாவுக்கு கொடுத்த பொழுது, தனது தளபதி அம்பாஜி இங்கிலியா தன்னைக் கேட்காமலேயே ஆங்கிலேயர்களுடன் உடன்படிக்கை செய்து கொண்டு, அந்நகரைக் கொடுத்துவிட்டார் என்று சிந்தியா ஆட்சேபித்தார். சிந்தியாவின்

1 இங்கு மார்க்ஸ் உபயோகித்த புத்தகத்தில் ஒரு தவறு இருக்கிறது. கோகாத் ராஜாவுக்குக் குவாலியரைத் தருவதாக வெல்லெஸ்லி உறுதி கூறினர்; ஆனல் அப்படிச் செய்ய அவர் விரும்பவில்லை. எனவே ஒருபிரிட்டிஷ் படையை அங்கு வைத்தார்.

கூற்று சரிதான் என்று ஜெனரல் வெல்லஸ்லி கூறினர்; ஆனால், தனக்கு குவாலியரைத்திருப்பித் தர வேண்டும் என்ற சிந்தியாவின் கோரிக்கையை கவர்னர் ஜெனரல் வெல்லெஸ்லி மறுத்து, அவரை வன்மையாகக் கண்டித்தார். இதன் விளைவாக சிந்தியாவின் தலைமையில் ஒரு புதிய கூட்டணி உருவாயிற்று; சிந்தியா 40,000 ஆட்களுடன் ஆங்கிலேயர்களுக் கெதிராகப் போர்க்களத்தில் இறங்கினர்; ஆனால் வெல்லெஸ்லிக்குப் பின் பதவிக்கு வந்த சர் ஜார்ஜ் பார்லோ குவாலியரை சிந்தியாவுக்குத் திருப்பிக் கொடுத்து, அவருடன் புதிய உடன்படிக்கையைச் செய்து கொண்டார்.

ஜூலை 20, 1805. கவர்னர் ஜெனரல் வெல்லெஸ்லி, தனது பதவிக் காலம் முடிவுற்று, இங்கிலாந்துக்குக் கப்பலேறினர்.

வெல்லெஸ்லியின் நிர்வாகச் சீர்திருத்தங்கள். 1793ல் (தலைமை நீதிமன்றத்துக்குப்பதிலாக) காரன்வாலிஸ்பிரபு அமைத்ததொரு நீதி மன்றமாகிய சதர்திவானி அதாலத்துக்குப்பதிலாக—இதற்குக் கவர்னர் ஜெனரலும் கவுன்சில் உறுப்பினர்களும் மறைவாக (closed door—மொ. ர்)த் தலைமை தாங்கினர்—வெல்லெஸ்லி

1801— பொது மக்களுக்கும் திறந்துள்ள ஒரு தனியான நீதி மன்றத்தை நிறுவினர்; இதற்கு முறைப்படி நியமிக்கப்பட்ட தலைமை நீதிபதிகள் தலைமை தாங்கினர்; இவர்களில் முதல்வர் கோல்புருக். அதே ஆண்டில், காரன்வாலிஸுக்கு முன்பு கல்கத்தாவில் வழங்கியகொள்கையின் படி, சென்னையில் சதர் திவானி அதாலத்துக்குப்பதி

லாக தலைமை நீதி மன்றம் ஒன்று [நிறுவப்பட்டது]. இந்த நீதிமன்றம் 1862 வரை நீடித்திருந்து, அவ்வாண்டில் அதற்குப் பதிலாக உயர் நீதிமன்றம் அமைக்கப் பட்டது. ஜார்ஜ் IIIஆல் நிறுவப்பட்ட பதிவாளர் நீதிமன்றம் நீக்கப்பட்டு அதன் அதிகாரங்கள் புதிய தலைமை நீதிபதிகளாலும் துணை நீதிபதிகளாலும் மேற் கொள்ளப்பட்டன. (சட்டம் 39-40, ஜார்ஜ் III C. 79ன் படி இது செய்யப்பட்டது. திவாலாகிப்போன கடனாளிகள்—இந்தியாவில் அப்பொழுது வரை தனியாகக் கவனிக்கப்படாத ஒரு வித சிறு குற்றவாளிகள்—பற்றி கவனிப்பதற்கு இப் புதிய நீதிமன்றத்துக்கு இதே சட்டம் அதிகாரமளித்தது.) இதே சட்டம், துணைக் கடற் படை இலாகா நீதியதிகாரத்தை இந்தியாவின் ராஜதானிப் பட்டணங்களிலிருந்த முதன்மையான நீதிமன்றங்களுக்கு விஸ்தரித்தது. இவ்வாறாக, புதிய ஐரோப்பிய [ஆங்கிலேய]த் தன்மை எங்கும்

வில்லியம் கோட்டைக் கல்லூரி என்று பெயரிடப்பட்ட பெருங் கல்லூரி ஒன்றைக் கல்கத்தாவில் வெல்லெஸ்லி பரபு நிறுவினார்; அது (1) இங்கிலாந்திலிருந்து அனுப்பப்பட்ட படத்துறை சாராத, ஒன்றுந் தெரியா இளைஞர்களுக்குக் கல்வி நிலையமாகவும் (2) சட்டம், மதம் ஆகிய விஷயங்களைப் பற்றி சுதேசி மக்கள் விவாத புரியும் மன்றமாகவும் இயங்கும். இக் கல்லூரியை நடத்தும் பொறுப்பைக் கல்வித் துறையிடம் கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர்கள் ஒப்படைத்தனர். அதே சமயம், தங்களது குமாஸ்தாக்கள் இந்தியாவுக்குப்பயணமாகு முன்பாகவே அவர்களுக்குப் பயிற்சியளிப்பதற்காக இங்கிலாந்தில் ஹெயிலிபரிக் கல்லூரியைக் கம்பெனி நிறுவியது.

## [IX] காரன்வாலிஸ் பிரபுவின் இரண்டாவது நிர்வாகம் 1805

*(அவர் ஜூலை 20ல் கல்கத்தாவில் வந்து இறங்கினர்)*

**ஆகஸ்டு 1.** *காரன்வாலிஸ் பதவி யேற்றார்;* **நாடு சேர்க்காமையே தனது கொள்கை** *என்று அவர் அறிவித்தார்;* **யமுனைக்கு மேற்கிலுள்ள பிரதேசம் அனைத்தையும் கைவிட்டு விடப்** *போவதாக அவர் சொன்னர்;* **லேக் (இவர் பேரன்** **ஆக்கப்பட்டிருந்தார்; பிறகு* **1807**ல் *வைகவுண்ட்* ஆக்கப்பட்டார்) ஆட்சேபித்தார்.*

**அக்டோபர் 5. கிழவர் காரன்வாலிஸ் இறந்தார்; கவுன்சிலின்** *மூத்த உறுப்பினரும்,* **நாடு சேர்க்கும் கொள்கையின் உறுதியான எதிரி***யுமான* **சர் ஜார்ஜ் பார்லோ** *அடுத்தபடியாகப் பதவியேற்றார்.*

## [X] சர் ஜார்ஜ் பார்லோவின் நிர்வாகம் 1805—1806

**1805ன் பின் பகுதி. சிந்தியாவுடன் உடன்படிக்கை :** **அஞ்சன் காவ்ன் உடன்படிக்கையின்** *படி நடப்பதாக நிபந்தனையின் பேரில்* **கோகாத்தையும் குவாலியரையும்** *சிந்தியா பெற்றார்; சிந்தியாவின் சம்மதமின்றி, ராஜப்புத்திரப் பிரதேசத்திலுள்ள சிந்தியாவுக்கு நிறை செலுத்தும் அரசுகள் எதனுடனும்* **உடன்படிக்கை யொன்றும் பிரிட்**

*)வை பிரபுப் பட்டவகையைச் சேர்ந்தவை.*

டிஷ் அரசாங்கம் செய்யாது என்று பார்லோ உத்தரவாதமளித்தார். சிந்தியா பணிந்த பிறகு, ஹோல்கார் அவரது முகாமை விட்டுச் சென்று, தனது வழக்கமான, இரக்கம் சிறிது மற்ற கொடுமையுடன் சட்லெஜ் நதிக்கு அருகிலுள்ள பிரதேசத்தைக் கொள்ளையிட்டு நாசப்படுத்தத் தொடங்கினர்; சட்லெஜுக்கு அப்பாலிருந்த நாட்டின் பெரும் தலைவரான ரஞ்சித்சிங்கின் உதவியுடன் லேக் அவரைப் பின் தொடர்ந்தார்; ஹோல்கார் சுத்தமாக முறியடிக்கப் பட்டு, உடன்படிக்கை வேண்டி கெஞ்சிக் கொண்டு ஓடினர்.

ஜனவரி 1806. லேக் பிரபு ஹோல்காருடன் உடன்படிக்கை கையெழுத்திட்டார்; அதன்படி ராம்புரா, டோங்க், பண்டி, மேலும் பண்டிக் குன்றுகளுக்கு வடக்கிலுள்ள எல்லா இடங்கள் ஆகியவற்றின் மேலுள்ள உரிமைகள் அனைத்தையும் ஹோல்கார் கைவிட வேண்டியது. பண்டியைக் கம்பெனிக்கு வழங்கிய இந்த உடன்படிக்கைக்கு—நாடு சேர்த்தல்!—மேல் அங்கீகாரம் கொடுக்க சர் சார்ஜ் பார்லோ மறுத்து விட்டார்; ஆங்கிலத் துருப்புகளைச் சம்பல் நதிக்கு அப்பாலிருந்து பின் வாங்கும்படி உத்தர விட்டார்; அதன் மேல் உடனடியாக பண்டி ராஜாவின் பிரதேசங்களை ஹோல்கார் மறுபடியும் கொள்ளையிட்டுப் பாழாக்கினர்.—அதேமாதிரி ஆங்கிலேயரின் துணையான ஜெய்ப்பூர் ராஜாவை மகாராஷ்டிரச்சிப்பாய்க் கூட்டங்களுக்கு இரையாக பார்லோ விட்டு விட்டார். இதன்விளைவாக தான் செய்வதை உடனேயே தலைமைக் காரியாலயத்தில் தள்ளுபடி செய்து விடுவதாகஇருந்தால் தான் இனி எப்பொழுதுமேஉடன்படிக்கை செய்யமுடியாது என்று கூறிவிட்டு, லேக் பிரபு சிவில் அதிகாரங்கள் அனைத்தையும் பார்லோவின் கையில் ஒப்படைத்து விட்டார்.

ஹோல்கார், தனது சகோதரரையும், தன் உடன் பிறந்தார் புதல்வரையும் ஆத்திரத்தில் கொலை செய்துவிட்டதால் புத்தி சுவாதீன மிழந்து, பைத்தியம் பிடித்த நிலையில் 1811-ல் இந்தூரில் இறந்தார்.

**1807.** பார்லோவை விலக்கிவிட்டு மிண்டோ பிரபு அவர் பதவிக்கு வந்தார் ; இவரும் தலையிடாக் கொள்கையைப் பின்பற்றப் போவதாக உறுதி பூண்டே இந்தியாவுக்கு வந்தார் ; ஜுலை 31, 1807ல் மிண்டோ கல்கத்தா வந்து சேர்ந்தார் ; பார்லோ சென்னை அரசாங்கத்துக்கு மாற்றப் பட்டார்.

## [XI] மிண்டோ பிரபுவின் நிர்வாகம் 1807—1813

**ஜுலை 1807.** வேலூரில் (சென்னை ராஜதானி) சிப்பாய்கள் கலகம் ; அவ்வூரின் கோட்டையில் தான் திப்புவின் புதல்வர்கள் கைதிகளாக [வைக்கப்பட்டிருந்தனர்]; அவர்களின் சார்பில் அவர்களது மைசூர்க்கார ஊழியர்கள் கலகம் ; அவர்கள் திப்புவின் போர்க் கொடியை உயர்த்தினர் ; கர்னல் கில்ஸ்பி, ஆர்க்காட்டின் துப்பாக்கி ஏந்திய குதிரைப் படையுடன் சென்று, கலகக்காரர்களில் பலரைக் கொன்று, அவர்களை ஒடுக்கினர்—ஆயினும் மிண்டோ பிரபு அவர்களைக் “ கௌரவமாக ” நடத்தினர்.

**1808.** சட்லெஜுக்கு மேற்கிலுள்ள பிரதேச முழுவதற்கும் ராஜாவான சீக்கியர் ரஞ்சித்சிங் (வெற்றி பெற்ற ஆப்கானியர் சமான்ஷாவால் கொடுக்கப்பட்ட மாவட்டமாகிய லாகூருக்கு ராஜாவாக அவர் முதன் முதலில் தொடங்

கினர்) சட்லெஜைக் கடந்து, சர்கிந் பிரதேசத்தில் நுழைந்து—பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் [இது இருந்தது]-பாட்டியாலா ராஜாவின் மாகாணத்தைத் தாக்கினர்; அவருக்கெதிராகக் கர்னல் மெட்காப்பை மிண்டோ அனுப்பினர். இவர் பிறகு ரஞ்சித்சிங்குடன் முதல் உடன் படிக்கை செய்தார்; ரஞ்சித்சிங் சட்லெஜுக்கு அப்பால் பின் வாங்கினர்; அந்நதிக்குத் தெற்கில் தான் பிடித்திருந்த நிலத்தை ஒப்படைத்து விடுவதற்குச் சம்மதித்தார். ஆனல், சட்லெஜின் வடகரையிலிருந்த சீக்கியப் பிரதேசத்தைத் தொடுவதில்லை என ஆங்கிலேயர்கள் உறுதி கொடுத்தனர். ரஞ்சித்சிங் தனது உறுதிமொழிகளை நாணயத்துடன் கடைப்பிடித்தார்.

**1809.** பட்டாணியக்கொள்ளைக் குலத்தின் இப்பொழுது அங்கீகரிப்பட்டத் தலைவரான அமீர்கான், பேரார் ராஜா பான்ஸ்லேயின் பிரதேசங்களைக் கொள்ளையிட்டார்; இவர் ஆங்கிலேயர்களின் துணைவர் என்ற முறையில் மிண்டோவிடம் முறையிட்டார்; ஆனல், சுணக்கத்துடன் அனுப்பப்பட்ட ஆங்கிலேயப் படை நாகபுரி வருமுன், இவர் சாத்பூராக் குன்றுகளுக்கு அப்பால் எதிரியைப் பின்னேக்கி விரட்டி விட்டார்.

**பாரசீகத்துக்கு இரண்டாவது தூது:** நேப்போலியனைப் பற்றிய மிருகபயத்தினல், லண்டனிலிருந்துசர் ஹார்போர்டு ஜோன்ஸ் என்பவரும், கல்கத்தாவிலிருந்து சர் ஜான் மால்கம் என்பவரும் தூதர்களாக டெஹ்ரானுக்கு அனுப்பப்பட்டனர் [1808]; யார் முதன்மையானவர், முதலியன பற்றி அவர்களுக்குள் சண்டை (பக். 194). பிறகு இவர்கள் இருவரையும் நீக்கிவிட்டு டெஹ்ரானில் நிலவரத் தூதராக இங்கிலாந்திலிருந்து சர் கோர் அவுஸ்லி அனுப்பப்பட்டார்; அதே சமயத்தில்—

**காபூலுக்கு மூன்ருவது தூது,** *மிண்டோ பிரபுவால் அனுப்பப் பட்டது;* **சமான்ஷாவின்** *சகோதரரும், அவருக்குப்பின் பட்டமேற்றவருமான* **ஷாஷுஜா** *அப்பொழுது அரியணையிலிருந்தார்; அனுப்பப்பட்ட தூதர்* **மவுண்ட் ஸ்டுவர்ட் எல்பின்ஸ்டன்,** *கிளர்ச்சியினுல் ஷாஷுஜா பதவியிலிருந்து விரட்டப் பட்டதால் [எல்பின்ஸ்டன்] தோல்வியுற்ருர்;* **ஷாஷுஜாவுக்குப்** *பின் அரசரான* **மாமூது, பிரெஞ்சுக்காரர்கள், ரஷ்யர்கள் ஆகியோரின் பாதுகாப்பை** *ஏற்றுக் கொண்டார்.*

**சென்னை ராஜதானி:** *இங்குகூடபிரான்சை நினைத்து சதா கிலி—ஏனெனில், அப்பொழுது நடைமுறையிலிருந்த ஒரு* **உத்தரவின்** *படி,* **தங்களது படைகள் உபயோகிக்கும் கூடாரங்களை அளிக்கும் உரிமை தலைமை தாங்கி நடத்தும் அதிகாரிகளுக்கு இருந்தது;** *இது "லாப"த்துக்கு நல்ல வழியாக இருந்தது. இப்பொழுது சென்னையின் தலைவராயிருந்த* **சர்ஜார்ஜ் பார்லோ** *இந்தத் தொந்தரவை நயமற்ற முறையில் ஒழித்துக் கட்டினுர்; மேலும், அவர் படைத்தலைவரான* **ஜெனரல் மக்டோவலைப்** *பதவியிலிருந்து விலக்கினுர்.*—**கூடார வழக்கம் ஒருவித ஏமாற்றுதலைப் போன்றதே** என்று, **பார்லோவின் உத்தரவின்** *பேரில் அதை ஒரு அறிக்கையில் கண்டனம் செய்த* **குவார்ட்டர் மாஸ்டர் ஜெனரலான கர்னல் மன்ரோவை** *ஜெனரல் மக்டோவல்* **கைதுசெய்து விட்டார்** *என்ற காரணத்துக்காக; பிறகு இதையடுத்து* **உயர் பதவியிலிருந்த நான்கு அதிகாரிகளையும்** *சஸ்பெண்டு செய்தார்; படைமுழுவதிலும் கிளர்ச்சிக் கொந்தளிப்பு; [அதிகாரிகள்]கவர்னருக்குத் துடுக்கான ஆட்சேபனைக் கடிதத்தை அனுப்பினர். பார்லோ* **சுதேசி அதிகாரிகளை அழைத்து** *சீக்கிரமே அவ்வதிகாரிகளைப் பணியச் செய்தார்.*

**1810. பாரசீகக் கடற்கொள்ளைக் காரர்களுக் கெதிராகப்படை யெழுச்சி.** 1810ன் முற்பகுதியிலிருந்தே பாரசீக வளை குடாவில் கடற்கொள்ளைக் காரர்கள் கூட்டமொன்று இருந்தது ; இவர்கள் ஆங்கிலேய வர்த்தகத்தைச் சேதப்படுத்திக் கொண்டிருந்தனர் ; பிறகு கம்பெனிக் குச் சொந்தமான **மினர்வா** என்ற கப்பலொன்றைப் பிடித்துக் கொண்டனர் ; மிண்டோ பம்பாயிலிருந்து படையெடுப்பு ஒன்றை அனுப்பினுர் ; அது **மல்லியா** (குஜாரத்)விலிருந்த கடற் கொள்ளைக் காரர்களின் தலைமையிடத்தைக் கைப்பற்றி, **மஸ்கத் இமாமின் உதவி** யுடன், **பாரசீகத்தில் ஷிராஸ்** என்ற இடத்திலிருந்த அவர்களது கோட்டையைக் கடுமையாகத் தாக்கித் தீயிட்டது ; இதனுல் கொள்ளைக்காரர்களின் " கூட் டிணைப்பு " உடைக்கப்பட்டது.

**மக்காவோவுக்குப் படை யெழுச்சி.** வர்த்தகப் போட்டியினுல் உந்தப்பட்ட கம்பெனியின் வேண்டுதலுக்கிணங்க, **மக்காவோவில்** சீனப்பேரரசரின் பாதுகாவலின் கீழிருந்த **போர்ச்சுக்கீசியக் குடியேற்றத்தை** அழிப்பதற்காக **மிண் டோ** அங்கு கப்பல் அனுப்பினுர் ; அங்கு அனுப்பப் பட்ட படை வெற்றியின்றி வங்காளத்துக்குத் திரும் பியது ; **மக்காவோவில் ஆங்கிலேய வர்த்தகத்தை சீனப் பேரரசர் உடனே நீக்கிவிட்டார்.**

**மரீஷியஸையும் பூர்போனையும் கைப்பற்றல்:** **இங்கிலாந்துடனுன பிரெஞ்சுப் போரின் பொழுது, மரீஷியஸ், பூர்போன் ஆகியத் தீவுகளின் மீதான பிரெஞ்சுத்தாக்குதலினுல் கம்பெனியின் வர்த்தகம்** அதிகமாகப் பாதிக்கப்பட்டிருந்தது. இதற்கு ஒருமுடிவு கட்டுவதற்காக **கர்னல் கீட்டிங்கின் தலைமையில் ஒரு படையெழுச்சியை** மிண்டோ அனுப்பினுர் ; அவர்

முதலில் மரீஷியஸுக்கு 200 கல் தொலைவிலுள்ள ரோத்ரீக்தீவைப் பிடித்தார்.

**மே 1810.** அவர் ரோத்ரீக்கைத் தனது நடவடிக்கைகளுக்கு மூலத் தளமாக ஆக்கினார்; பூர்போன் தீவின் மீதான முதல் தாக்குதல்; துருப்புக்கள் இறக்கப்பட்டன; செயின்ட்பால் நகரமும் துறைமுகமும் தாக்கப்பட்டு, நான்கு பீரங்கி அடுக்குகள் தாக்கப்பட்டு, மூன்று மணிநேரச் சண்டைக்குப் பிறகு அவ்விடம் பிடிக்கப்பட்டது; எதிரியின் கப்பற்படை ஆங்கிலேயக் கப்பற்படையால் முற்றுகையிடப்பட்டுச் சரணடைந்தது.

**ஜூலை.** பூர்போன் தீவில் மேலும் பல பிரெஞ்சு நிலையங்கள் பிடிக்கப்பட்டபின், தலைநகரான செயின்ட் தெனி வீழ்ந்தது; பிரெஞ்சுப் படை முழுவதும் சரணடைந்தது. கர்னல் வில்லபி படைத் தளகர்த்தராக இருத்தப்பட்டு, ஆயுதக் கிடங்கு ஆங்கிலேயர்களின் பண்டக் கிடங்காக மாற்றப்பட்டு, பிரெஞ்சுத்தீவு எனப்படும் மரீஷியஸின் மீது தாக்குதல் தொடுப்பதற்கு அங்கு தயாரிப்புகள் செய்யப்பட்டன.—கடலில் 11 ஆங்கிலயக் கப்பல்களை பிரெஞ்சுக்காரர்கள் பிடித்தனர்.

**அக்டோபர் 29, 1810.** மரீஷியஸுக்கு எதிராக அனுப்பப்பட்ட படை 1,000 போர் வீரர்களை அங்கு இறக்கியது; அக்டோபர் 30'ல்* பிரெஞ்சுத் தளபதி மரீஷியஸைச் சரண்செய்தார்; அதை இப்பொழுதுவரை ஆங்கிலேயர்கள் வைத்திருந்தனர். ஆனால் பூர்போன் தீவு 1814 ல் பிரெஞ்சுக்காரர்களிடம் மீண்டும் ஒப்படைக்கப்பட்டது.

**1811.** மிண்டோ ஜாவாவுக்கெதிராகப் படையொன்று அனுப்பினார். முதலில் பிடிக்கப்பட்டது. நறுமணத் தீவாகிய

*டிசம்பர் 9 என்கிறார் பர்கஸ்.

அம்பாய்னு; அங்குதான் 1623 ல் டச்சுக்காரர்கள் பயங்கரப் படுகொலை நிகழ்த்தினர்; சீக்கிரமே ஐந்து சிறிய மொலுக்காத் தீவுகள் பிடிக்கப்பட்டன; சீக்கிரத்திலேயே பண்டா நீய்ரா பிடிக்கப்பட்டது (அதே போல் மொலூக்காத்தீவும்). (இப்படையெழுச்சி முழுதுக்கும் காரணம், டச்சு வர்த்தகத்தின் மீது கிழக்கிந்தியக் கம்பெனி கொண்டிருந்த பொருமை.)

ஆகஸ்டு 4. 1811. இரவின்பொழுது ஆங்கிலேயர்கள் படேவியாவில் (ஜாவாவின் தலைநகர்) இறங்கினர். தற்காப்புக்காக கொர்னீலிஸ் கோட்டையில் டச்சுப்படை திரண்டிருந்தது.

ஆகஸ்டு 5, நடவடிக்கை; கர்னல் கில்ஸ்பியால் படேவியா பிடிக்கப்பட்டது. பிறகு சீக்கிரமே, படையெழுச்சியின் தளபதியான சர் சாமுவேல் ஆச்முடி ஜாவாவில் பலம் பொருந்திய இடங்களையெல்லாம் பிடித்தார்; பிரெஞ்சுக்காரர்களும் டச்சுக்காரர்களும் பணிந்தனர்; ஜாவாவின் கவர்னராக சர் ஸ்டாம்போர்டு ராபில்ஸ் நியமிக்கப்பட்டார்.

பிண்டாரிகளின் தோற்றம்: குதிரையேறிய கொள்ளைக்காரர்கள், தொழிலால் திருடர்கள். (பிண்டாரிகள் = மலைவாழ்பவர்கள்; மாளவத்தில் ஹோல்கார், சிந்தியா ஆகியவர்களின் பிரதேசங்களிலும், போபாலிலும்—விந்திய மலை—வசித்த ஒரு குலம்; கொள்ளைக்காரர்கள், தப்பித்து ஓடிய குற்றவாளிகள், சேனைகளிலிருந்து ஓடிப் போனவர்கள், துணிகரநாடோடிகள் ஆகியோர்களின் கூட்டங்கள்; பானிப்பட்டுச் சண்டையின்பொழுது மகாராஷ்டிரர்களின் தரப்பில் 1761 ல் இவர்கள் முதலில் தோன்றினர். பேஷ்வா பாஜிராவின் ஆட்சியில், எத்தரப்பு

அதிகம் கொடுத்ததோ அத்தரப்பில் எப்பொழுதும் அவர்கள் சேர்ந்து கொண்டனர்.

**1808.** ஹீரன், பாரன் என்ற இரு சகோதரர்கள் அவர்களுக்குத் தலைவர்களாயிருந்தனர்; அவர்களது மரணத்துக்குப் பின், ஜாட் குலத்தைச் சேர்ந்த சிட்டு என்ற ஒருவர் தலைமையை மேற்கொண்டு, ராஜா என்று தான் பட்டம் தரித்துக் கொண்டார்; அவரது உதவிக்காக ஒரு சிறு நிலப்பகுதியை சிந்தியா அவருக்குக் கொடுத்தார்; இதே வழியில் மற்றையப் பிண்டாரியத் தலைவர்களும் சிறு ஜாகீர் தாரர்கள் ஆயினர்; இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு ரோகில்லரான அமீர்கானுடன் சிட்டு சேர்ந்து கொண்டார்; 60,000 பேர்களைக் கொண்ட ஒரு படையுடன் அவர்கள் மத்திய இந்தியாவைக் கொள்ளையடிக்க ஆரம்பித்தனர். அவர்களைத் தாக்குவதற்கு மிண்டோ பிரபுவுக்கு அனுமதிதர இயக்குநர் குழு மறுத்துவிட்டது; இம்மறுப்பானது காரன்வாலிஸின் தலையிடாக் கொள்கையின் அடிப்படையில் விளைந்தது.

**சென்னையில்** ரயத்வாரி முறை, சர் தாமஸ் மன்றோவால் ஏற்படுத்தப்பட்டது; சென்னை ராஜதானியின் ரெவின்யூ நிர்வாகத்தின் அடிப்படை என இது முதலில் ஏற்றுக் கொள்ளப்பட்டது; இது நிரந்தரமானதாக 1820 வரையிலும் அமைக்கப்படவில்லை. இது கீழ்க்கண்டவாறு இயங்கிற்று: பயிர்கள் அவைகளின் மிகுதியையும் தரத்தையும் மதிப்பிடுவதற்குப் போதிய அளவு முற்றியிருக்கும்பொழுது, ஆண்டு முதலிலேயே அரசாங்கத்தின் வருவாய் அதிகாரிகள் ஆண்டு வரி நிர்ணயம் செய்தனர்; இக்காலத்தில் அரசாங்க வரியானது, விளைச்சலில் மூன்றிலொரு பாகத்துக்குச் சமமானதாக இருந்தது. ஆண்டுதோறும் தனக்கு வழங்கப்பட்ட பட்டா (அ) குத்தகை

ரசீதில் மதிப்பிடப்பட்டு. எழுதியிருப்பதன்படி இவ் வரிக்குக் குடியானவர் பொருப்பாளியாகக் கருதப் பட்டார். எதிர்பாராத வெட்ப, தட்ப நிலை காரணமாக விளைச்சல் குன்றினால், விளைச்சல் குன்றிய நிலத்தின் வரிச் சுமையை ஏற்றுக் கொள்ளுவதற்காக அக்கிராம முழுவதுக்கும் விகிதப்படி வரிவிதிக்கும்படி உத்தரவிடப்பட்டது; பட்டாவை ஏற்றுக் கொண்டபின், தன் நிலத்தைப் பயிரிட மறுத்த விவசாயி ஒருவனின் வேண்டுமென்ற பிடிவாதத்தினால் அத் தகைய விளைச்சல் குறைவு [ஏற்பட்டது என்று நம்பப் பட்டால்], அபராதம் மூலமாக அல்லது அடி உதை மூலமாகவும்கூட அவனைத் தண்டிப்பதற்குக் கலெக் டர் அதிகாரம் பெற்றிருந்தார். பட்டாவை வழங்குவதற்கும் அல்லது வழங்காது நிறுத்திவைப்பதற்கும் கலெக்டர் முழு உரிமை பெற்றிருந்ததால், ஒவ்வொரு ஆண்டிலும் ஒவ்வொரு மாவட்டத்தின் மீதும் அவர் முழு அதிகாரம் பெற்றிருந்தார்.

**அக்டோபர் 1813.** மிண்டோ பிரபு இங்கிலாந்து திரும்பினார்; அவரது பதவியில் அப்பொழுது மோய்ராப்பிரபு என்று அழைக்கப்பட்ட ஹேஸ்டிங்ஸ்பிரபு [நியமிக்கப்பட்டார்].

**பார்லிமென்ட் நடவடிக்கைகள். மார்ச், 1, 1813ல்** கிழக் கிந்தியக் கம்பெனியின் சாசனம் மீண்டும் காலாவதி யாயிற்று.

**மார்ச் 22, 1813.** விவகாரங்களை விளக்கமாக ஆலோசிப்ப தற்காக காமன்ஸ் சபை தன்னை ஒரு கமிட்டியாகச் செய்து கொண்டது. வெல்லப்பட்ட அந்நாடு உரிமைப்படி கம்பெனிக்குச் சொந்தமே ஒழிய அரசாங்கத்துக்கு அல்ல என்று இந்தியா இல்லத்திலிருந்த இயக்குநர் குழு வாதாடியது; அதே போல, அதன் [கம்பெனியின் வியாபார] ஏகபோகம் தேவையானது; முதல் சாசனத்தின் அடிப்படையின்படியே, மீண்டும் 20ஆண்டு

காலத்துக்குப் புதியதொரு சாசனம் வேண்டுமென்று அவர்கள் கோரினர்.—கமிஷனர்கள் குழுவின் தலைவரான பக்கிங்ஹாம்ஷயர் பிரபு இவ்வாதங்களையெல்லாம் எதிர்த்தார். இந்தியா இங்கிலாந்துக்குச் சொந்தம், கம்பெனிக்கு அல்ல [என்றார் அவர்]; பிரிட்டிஷ் குடிகள் அனைவருக்கும் தடையிலா இந்திய வர்த்தகம் வேண்டும்; கம்பெனியின் ஏகபோகம் ஒழிக; உண்மையில், இந்தியாவின் ஆட்சியை அரசாங்கம் தன்கையில் எடுத்துக்கொண்டால் நன்றாக இருக்கும்.

மார்ச் 23. மந்திரி சபையின் சார்பில் காசில்ரீ பிரபு பிரேரேபித்தார்: கம்பெனியின் சாசனம் 20 ஆண்டுகளுக்கு நீடிக்கப்பட வேண்டும்; சீன வர்த்தகத்தில் கம்பெனி ஏகபோகம் பெற்றிருக்க வேண்டும்; ஆனால் இந்திய வர்த்தகமானது கம்பெனிக்கு ஊறுவிளையாதவாறு, சில கட்டுப்பாடுகளுடன் உலகுக்குப் பொதுவாக்கப்பட வேண்டும்; படைத் தலைமையையும், தங்களது சிவில் ஊழியர்களையும் மற்ற ஊழியர்களையும் நியமிக்கும் அதிகாரத்தையும் கம்பெனி தொடர்ந்து பெற்றிருக்கும்.

ஜூலை பின் பகுதி. இந்த— காசில்ரீயின் — மசோதா மிகச் சிறு திருத்தங்களுடன் நிறைவேற்றப்பட்டது (மேலும் தெரிந்துகொள்ள பக். 200 ஐப் பார்க்க). இந்தியா முழுவதையும் முழு அதிகாரத்துடன் தன் கையில் எடுத்துக் கொள்ளும்படியும், பொதுப் போட்டிப் பரீட்சை மூலமாக சிவில் பணியில் ஆட்களை நியமிக்கும்படியும் கிரென்வில் பிரபு அரசாங்கத்தைத் தூண்டினார்.

அதே ஆண்டில், கல்கத்தா மேற்றிராசனத்துக்கு (See of Calcutta—மொ.ர்.) ஒரு பிஷப் நியமிக்கப்பட்டதன் மூலமாக இந்தியாவில் கிறித்தவ மதம் வெளிப்படையாகப் புகுத்தப்பட்டது.

# [XII] ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் நிர்வாகம் 1813—1822

**அக்டோபர் 1813.** ஹேஸ்டிங்ஸ் பிரபு கல்கத்தா வந்து சேர்ந்தார். 1811ல் ஜஸ்வந்த் ராவ் ஹோல்கார் *மரணம்; அவரது விதவை மனைவி துளசிபாய், இதர பல நேசர்கள் முதலியவர்களுக்குப் பிறகு, பட்டாணியக் கொள்ளைக் காரத் தலைவரான* கபூர்கானுடன் *நான்காண்டுகள் வாழ்ந்தாள்;* இந்தூர் அரசாங்கம் *முழுதும் அவரது அதிகாரத்திலேயே [இருந்தது].*—1813ல், *சுற்றியிருந்த பிரதேசத்தைச்* சிந்தியா *கொள்ளையடித்தார்; [ஆனால்] ஆங்கிலேய அரசாங்கம் மிக லேசாகப் பயமுறுத்தியதும் நிறுத்திவிட்டார்.*—ரோகில்லர் தலைவர் அமீர்கான் *இந்தியாவின் தலை சிறந்த படைகளில் ஒன்றின் தலைவராக [இருந்தார்]; அதில்* அவரது துணிகர நாடோடிகளின் கூட்டங்களும் ஹோல்காரின் படைகளும் *இருந்தன; பிண்டாரித் தலைவர்* கிட்டு*விடமிருந்துதான் வேறுபட்டுப் பிரிந்த பிறகு,* 1811*ல்* அமீர்கான் *அதன் படைத்தலைவரானார்*—பேஷ்வா பாஜிராவ் *ஆங்கிலேயர்களது* கட்டுப் *பாட்டின் கீழ் கொதித்துக் கொண்டிருந்தார். அவரது அவையில் ஸ்தானிகராக இருந்த* மவுன்ட்ஸ்டுவர்ட் எல்பின்ஸ்டன் *ஆற்றலுடன் செயலாற்றியதால், பாஜிராவின் நிலைமை மேலும் "அதிகத் தாழ்வு" [உற்றது];* அகமதாபாத் *பிரதேசத்தைப் பற்றி* கெய்க்குவாருடன் தகராறுகள் *இருந்தன; உடன்படிக்கையின்படி, நடுத்தீர்ப்பு செய்யும்படி* ஆங்கிலேயர்கள் *கோரப்பட்டனர். ஆகவே* கங்காதர சாஸ்திரியைக் *கெய்க்குவார் பூனாவுக்கு அனுப்பினார்; பம்பாய்த் தலைவர்* இச்*செயலை அங்கீகரித்தார்; பேஷ்வாவுக்குப் பிடித்த ஆளான* டிரிம்பக்ஜி டேங்லியா *என்ற தீயவர்* கங்காதர சாஸ்திரிக்கு *எதிராகச்*

சதி செய்து, அவர் குஜராத் திரும்பியதும் புரந்தரில் தனது உடந்தைகளைக் கொண்டு அவரைக் கொலை செய்வித்தார். பேஷ்வாவின் எதிர்ப்பு முதலியவை களுக்கெல்லாம் மாருக (பக். 202 ஐப்பார்க்க) டிங்லியா வைத் தன்னிடம் ஒப்புவிக்கும்படி அவரை எல்பின் ஸ்டன் வற்புறுத்தி, மேலும் விசாரணை செய்வதற்காக டங்லியாவைச் சிறையில் தள்ளினர். ஹேஸ்டிங்ஸ் நிர்வாகத்தை மேற்கொண்ட பொழுது நிலைமை இவ் வாறிருந்தது ; கஜானு காலியாயிருந்ததை அவர் கண்டார்.

**1814.** நேபாளத்துக் கூர்க்காக்கள் ; ராஜபுத்திர இனத்தவர் ; துவக்கத்தில் ராஜபுதனத்திலிருந்து வந்து, இமயமலை யின் அடிவாரத்தில் நேபாளத்தில் தராய்ப் பகுதியை வென்று அங்கு குடியேறினர். பல அரசாங்க மாற்றங் களுக்கு உள்ளாகி, 18ம் நூற்றுண்டின் இடைப் பகுதியில், "நேபாள ராஜா" என்று பட்டம் தரித்துக்கொண்ட ஒரு தலைவரின் ஆட்சியின்கீழ் அவர்கள் [இருந்தனர்]. அவர் தனது எல்லைகளை விரிவுபடுத்தினர் ; இதனுல் ரஞ்சித் சிங்குடனும், பிரிட்டிஷ்காரர்களின் பாதுகாப் பின் கீழிருந்த சிற்றரசர்களுடன் சில சமயங்களிலும் எல்லைத் தொடர்பு ஏற்பட்டது ; எனவே சர் ஜார்ஜ் பார்லோவுடனும் மிண்டோ பிரபுவுடனும் அவர் ஏற் கெனவே சச்சரவுகள் கொண்டிருந்தார்.—இணைத்துக் கொள்ளப்பட்ட பிரதேசமாகிய ஔதில் பிரிட்டிஷ் பாதுகாப் பின் கீழிருந்த 200 கிராமங்களைக் கொண்ட மாவட்டம் ஒன்றை 1813ன் பிற்பகுதியில் கூர்க்காக்கள் கைப்பற்றி யிருந்தனர். அக்கிராமங்களை 25 நாட்களுக்குள் திருப்பி ஒப்படைத்துவிட வேண்டும் என்று ஹேஸ்டிங்ஸ் பிரபு கேட்டார் ; அதன் மேல் புட்வலில்

பிரிட்டிஷ் மாஜிஸ்டிரேட் ஒருவரைக் கூர்க்காக்கள் கொலை செய்தனர்.—அதையடுத்து—

(அக்டோபர்) 1814—கூர்க்காக்களுக்கெதிராகப் போர் அறிவிப்பு: சட்லெஜ் நதிக்கரையில் அமர்சிங்கின் தலைமையிலிருந்த கூர்க்காப்படையை ஜெனரல் கில்ஸ்பி தாக்க வேண்டியது; இரண்டாவது படைப் பிரிவு ஒன்று ஜெனரல் உட் என்பவரின் தலைமையில் பட்வாலை நோக்கிச் செல்ல வேண்டியது; மூன்ருவது, ஜெனரல் ஆக்டர்லோனியின் தலைமையில் சிம்லாவை நோக்கிச் செல்லவேண்டியது; நான்காவது படைப்பிரிவு, ஜெனரல் மார்லியின் தலைமையில், நேராகத்தலைநகர் கட்மண்டுவை நோக்கி முன்னேற வேண்டியது. போர்ச் செலவுகளுக்காக ஔத் நவாபிடமிருந்து இருபது லட்சம் கடன் வாங்கப் பட்டது.

அக்டோபர் 29. கில்ஸ்பி கலங்கா கோட்டையைத் தாக்கினர்; இது 500 கூர்க்காக்களால் பாதுகாக்கப்பட்டது; உடனடியாகத் தாக்குதல் தொடுக்கும்படி உத்தரவிட்டு, தானே அதற்குத் தலைமை தாங்கினர்: அவரே குண்டால் தாக்குண்டார்; 700 அதிகாரிகளையும் போர் வீரர்களையும் இழந்து, படைப்பிரிவு தனது முகாமுக்குத் திரும்பியது. இப்பொழுது படைத் தலைமையானது ஜெனரல் மார்டின்டேல் என்பவரால் மேற்கொள்ளப் பட்டது; இவர் பயனற்ற முற்றுகையில் பல மாதங்களை வீணக்கினர்; உடைப்பு ஏற்படுத்தப்பட்டு, கடைசியாகக் கோட்டை பிடிக்கப்பட்டபின், தாக்குதலுக்கு முன்னிரவில் அதைப் பாதுகாத்தவர்கள் தங்களது பண்டங்கள் அனைத்தையும் எடுத்துக்கொண்டு அதை விட்டுச் சென்றுவிட, கோட்டை காலியாயிருந்தது [காணப்பட்டது].

**ஜெனரல் உட்,** தனது படையைவிட மிகவும் குறைந்த எண்ணிக்கையுள்ள ஒரு படையின் மேல் வெற்றி கொண்டபின், *பீதியுற்று, பிரிட்டிஷ் எல்லைக்குப் பின் வாங்கி, எஞ்சிய போர் நடவடிக்கையின் பொழுது முழுதும் ஒன்றுஞ் செய்யாமலிருந்து விட்டார்.*

**1815. ஜெனரல் மார்லி** *எல்லைக்கு வந்து,* **கட்மண்டு** *மீது தாக்குதல் தொடுப்பதற்குத் தாக்குமியந்திரங்களின் வருகையை எதிர்பார்த்து, 1815ன் முதற் பகுதிவரை அங்கேயே இருந்தார்; செல்லும்பொழுது தனது படைப் பிரிவை, வலுவற்ற இருபகுதிகளாக அவர் பிரித்தார் ;* **ஒவ்வொன்றும் கூர்க்காக்களால் தாக்கப்பட்டுத் தோற்கடிக்கப்பட்டன ;** *மார்லி அங்குமிங்கும் படையுடன் சென்று,* **பிப்ரவரி 10, 1815ல் தன்னந் தனியாக எல்லையைக் கடந்து ஓட்டப் பிடித்தார் !**

**மே 15.** *பல மாதங்கள் வெற்றிகரமான கை கலப்புகள், முற்றுகைகள் ஆகியவற்றுக்குப் பிறகு* **அமர்சிங்*மலோன் (சட்லெஜின் இடது கரையில்** *ஒரு வலுவான மலைக் கோட்டை)* **என்ற** *இடத்திற்குப் பின் வாங்கியிருந்ததால்,* **ஜெனரல் ஆக்டோர்லோனி மலோனைப்** *பீரங்கிக் குண்டுகளால் ஒரு மாதம் தாக்க, அது* **மார்ச் 15ல் வீழ்ந்தது. முற்றுகையின் பொழுது அமர்சிங் கொல்லப்பட்டார்.—** *இதற்கிடையில் குமாவோன் மாவட்டத்திலுள்ள* **அல்மோரா** *வீழ்ச்சியுற்றதால், ஆக்டர் லோனியை எதிர்த்த* **கூர்க்காக்களின் சப்ளைகள் எல்லாம் துண்டிக்கப்பட்டன.** *அவர்கள் வழிக்கு வந்தனர்,*

** அமர் சிங்கின் தளபதி பக்திசிங், என்கிறார் மில். வால்*

**1816.** *நீண்ட பேச்சுவார்த்தைகளுக்குப் பிறகு,* **மீண்டும் போர் நடவடிக்கை.** *மலைகள் வழியாக மிகவும் சிரமத்துடன்* **மக்வன்பூர்** *சென்று, சர் டேவிட் ஆக்டர்லோனி கூர்க்காக்களைப் பெரும் சேதத்துடன் பின்னால் தள்ளினார் ; பிறகு* **அவர்களுடன் உடன்படிக்கை** *செய்து கொண்டார்; இவ்வுடன்படிக்கையை அவர்கள் நாணயத்துடன் காப்பாற்றினார்கள் ; தங்களது நாட்டில் மட்டுமே இருக்கும்படி அவர்கள் விதிக்கப்பட்டு, தாங்கள் வென்ற* **பிரதேசத்தில் பெரும்பாலானவைகளைக் கொடுக்க** *வேண்டியிருந்தது ; இப்போர் இங்கிலாந்துக்கும் நேபாளத்துக்கு மிடையில் தொடர்புகளை ஏற்படுத்தி வைத்தது;* **பல கூர்க்காக்கள் ஆங்கிலேயப் படையில்** *சேர்ந்து வலுக்கட்டாயமாக* **கூர்க்கா ரெஜிமெண்டுகளாக** *அமைக்கப்பட்டனர் ;* **இவைகள் 1857ம் ஆண்டில் சிப்பாய் கலகத்தின் பொழுது ஆங்கிலே** *யர்களுக்கு மிகப் பெரும் உதவியாயிருந்தன.*

**கூர்க்காப்போரின்** *ஆரம்ப காலத்தில் கம்பெனிக்கு நேர்ந்தபல தோல்விகளினால், சுதேசிச் சிற்றரசர்களிடையில்குறிப்பாக* **ஹாத்ராஸ், பரெய்லி***(இரண்டும்***டெல்லி மாகாணங்களில்***) ஆகிய இடங்களில்கிளர்ச்சி விளைந்தது.*

**1816—1818. பிண்டாரிகள். 1815-ல்** *இக் கொள்ளைக்காரர்களில் 50,000—60,000 பேர்கள் மத்திய இந்தியாவைக் கொள்ளையிட்டு நாசமாக்கினர்; அதேசமயம்* **அமீர்கான் எல்லையைப்** *பயமுறுத்திக் கொண்டிருந்தார் ;* **மகாராஷ்டிரச்** *சிற்றரசர்களும் விரோதப் போக்குடன் சேனைகளைத் திரட்டிக் கொண்டிருந்தனர்.* **அமீர் கானுக்கு எதிராக,** *நேச ஒப்பந்தங்கள் மூலமாக ஒருபலம் பொருந்திய கூட்டிணைப்பு அமைப்பதற்கு* **ஹேஸ்டிங்ஸ்** *செய்த முயற்சிகள் வீணாயின (206).*

**அக்டோபர் 14, 1815.** *பிண்டாரிகளின் பெருங்கூட்டம் ஒன்று நைசாமின் பிரதேசங்களைத் தாக்கிக் கொள்ளை யிட்டன.*

**பிப்ரவரி 1816.** *பிண்டாரிப் படைகளில் சுமார் பாதி பகுதி யினர்* **குண்டூர் சர்க்கார்ப் பகுதிகளை** *(கம்பெனியின் பிர தேசம்) ப் படையெடுத்து, அதைப் பாலைவனமாக்கி, அவர்கள் மீது சென்னைப் படைமுறையான தாக்குதல் தொடுக்குமுன்பாக மறைந்து விட்டனர்.*

**பேரார் ராஜா ரகோஜி பான்ஸ்லே இறந்தார் ;** *அவரது ஒன்று விட்ட சகோதரர்* **அப்பாசாகிப்** *அடுத்து-பதவிக்கு வந் தார் ; இவர்* **பான்ஸ்லேயின் புதல்வரைக் கொன்று, ஒரு உடன் படிக்கையின் மூலம் கம்பெனியையும் சமாதானப் படுத்தினர் ;** *இவ்வுடன்படிக்கையின்படி* **8000 ஆங் கிலேயர்களைக் கொண்ட துணைப்படை ஒன்று நாகபுரியில்** *[வைக்கப்பட வேண்டியது].*

**நவம்பர் 1816. கம்பெனிப் பிரதேசத்தில் மீண்டும் பிண்டாரி களின் படையெடுப்பு ; நாகபுரி படை போர்களத்தில்** *இறங்கியதும், அவர்கள் தனித்தனிக் கூட்டங்களாகப் பிரிந்து தங்களது பிரதேசத்துக்குள் சென்று மறைந்து விட்டனர்.*

**1817. ஆண்டு ஆரம்பத்தில்,** *1.20,000 பேர்களுடன் ஹேஸ் டிங்ஸ் தானே போர்க்களம் புகுந்தார் (பிரிட்டிஷ் கொடியின் கீழ் [இந்தியாவில்] திரட்டப்பட்ட* **மிகப் பெரும் படை** *இது தான்).* **பண்டி, ஜோத்பூர், உதயபூர் ஜெய்பூர், கொட்டா ஆகியவைகளின் ராஜாக்களுடன்** *அவர்* **நேச ஒப்பந்தங்கள்** *செய்து கொண்டார் ; பிறகு,* **நடுநிலைமை உடன்படிக்கை** *ஒன்று செய்து கொள்ளும் படி* **சிந்தியா** *நிர்பந்திக்கப் பட்டார்.*

மகாராஷ்டிர அரசுகளின் அழிவு. டிரிம்பக்ஜி டங்லியா சிறையிலிருந்து தப்பிச் சென்று, மீண்டும் பூனவில் பாஜிராவின் தலைமை ஆலோசகராக ஆனார்; "பிண்டாரிகளுக்கெதிராகத் தற்காப்பு" செய்வதாக நடித்து, பாஜிராவ் ஆங்கிலேயர்களுக் கெதிராகப் பகை ஆயத்தங்கள் செய்தார். எல்பின்ஸ்டன் பம்பாயிலிருந்து துருப்புக்களை வரும்படி உத்தரவிட்டு, போரா, சமாதானமா, என்பது பற்றி 24 மணி நேரத்தில் முடிவு செய்யும்படியும் தனது தலையாய கோட்டைகளில் மூன்றையும் டிரிம்பக்ஜி டங்லியாவையும் சரண் செய்யும்படியும் பாஜிராவுக்குத் திட்டவட்டமாகக் கூறினார். பாஜிராவ் தயங்கினார்; பம்பாய் துருப்புக்கள் தோன்றின; பேஷ்வா பணிந்து, எல்லாக் கோட்டைகளையும் கம்பெனிக்குக் கொடுத்து டங்லியாவைப் பிடிப்பதாக உறுதி கூறினார்; இப்பொழுது ஒரு உடன் படிக்கை கையெழுத்திடப் பட்டது; அதன்படி மகாராஷ்டிர அரசாயினும் சரி, அந்நிய அரசாயினும் சரி, வேறு எந்த அரசின் வக்கீல்களை*யும் தன்து அவையில் எப்பொழுதும் ஏற்றுக் கொள்வதில்லை என்றும், முழுதும் பிரிட்டிஷ் ஸ்தானிகரின் ஆணைகளின் படியே நடப்பதாகவும் பேஷ்வா உடன் பட்டார். இவ்வாறாக, மகாராஷ்டிரர்களின் இறைமை அழிந்து, நாகபுரி அல்லது இந்தூர் அரசவையின் தரத்துக்குப் பூன அரசவையும் தாழ்ச்சியுற்றது. மேலும் சாகர், பண்டேல்கந்து, இன்னும் இதர சில இடங்களையும் கம்பெனிக்கு அவர் (பேஷ்வா) கொடுக்கவேண்டும். பாதுகாப்புக்காக, [பூனவிலிருந்து] இரண்டு கல் தொலைவிலிருந்த பிரிட்டிஷ் முகாமுக்கு எல்பின்ஸ்டன் வந்துவிட்டார்; பிரிட்டிஷ் துருப்புக்கள் அங்கேயே நகராமல் தங்கியிருந்தன. சுமார் ஒரு மாதத்துக்குப் பிறகு

* தூதர்கள்.

ஆங்கிலேயர்களுக்கெதிராகச் செயல் படுவதற்காகக் குதிரை வீரர்களையும் துருப்புக்களையும்கொண்ட படைகளைத் திரட்டும் வேலையில் பேஷ்வா ஈடுபட்டிருந்த பொழுது கண்டு பிடிக்கப்பட்டார்.

**நவம்பர் 5, 1817.** ஓரளவு பெரிய சுதேசிப்படை, பிரிட்டிஷ் படைப்பகுதிகளுக்கு அருகில் முகாமிட்டிருக்க, பூனுவில் (பிரிட்டிஷ்) ஸ்தானிகாலயம் தாக்கப்பட்டுத் தீயிடப்பட்டது. இதையடுத்து விளைந்த கை கலப்பில் **பேஷ்வாவின் பயிற்சியற்ற புதிய படைகள்**தோற்கடிக்கப் பட்டன ; அவரும்—பாஜிராவ்—

**நவம்பர் 17, 1817—சரணடைந்தார். 1669-ல்** சிவாஜியால் துவக்கி வைக்கப்பட்ட **மகாராஷ்டிர அரசின் இறைமை** முடிவுற்றது.

**நாகபுரி ராஜாவின் வீழ்ச்சி.** அப்பாசாகிப்பும் பாஜிராவைப் போல அதே முறையில் நடந்து கொண்டார்—படை திரட்டல் முதலியன ; **பிரிட்டிஷ்ஸ்தானிகர்** திரு. **ஜெங்கின்ஸ்** அதைக்கண்டு பிடித்து விட்டார்.

**செப்டம்பர் 1817.** **அப்பாசாகிப்** தனது **அவையில் பிண்டாரித் தூதர் ஒருவரை** வெளிப்படையாக வரவேற்றார்.

**நவம்பர் 1817.** **மகாராஷ்டிர படைகளின் பிரதம தளபதி**யாகத் தன்னை (அப்பாசாகிபை) பேஷ்வா நியமித்திருப்பதாக அவர் ஜெங்கின்ஸுக்கு அறிவித்தார் ; பேஷ்வா கம்பெனியுடன்போர்கொண்டிருப்பதால், இந்தநியமன மானது நாகபுரியைக்கம்பெனியுடன்போரில்ஈடுபடுத்தி விடும் என்று ஜெங்கின்ஸ் பதிலளித்தார். அதன்மேல். (பிரிட்டிஷ்) **ஸ்தானிகரகத்தை அப்பாசாகிப்** தாக்கினார். **—சிதாபல்டிக் குன்றுகளில்** சண்டை. சண்டையில் [தங்களுக்கு] மோசமான துவக்கத்துக்குப் பிறகு ஆங்கிலே

யர்கள் வென்றனர். நாகபுரி பிடித்துக் கொள்ளப்பட்ட்து. அப்பா சாகிப் பதவியிலிருந்து நீக்கப்பட்டு, ஜோத்பூரில் அகதியாக இறந்தார். இந்த அரசு 1826 வரை ஆங்கிலேயர்களால் நிர்வகிக்கப்பட்டது; அவ்வாண்டில் பிரிட்டிஷ் பாதுகாப் பின் கீழ் ஓரிளைஞரைஅவர்கள் அரியணையில் அமர்த்தினர்; அவர் இப்பொழுது வயது எய்தியிருந்ததால் பதவியேற நியமிக்கப்பட்டிருந்தார்.

ம்கார் வம்சத்தின் விழ்ச்சி. துளசிபாய், தனது காதலனும், கம்பெனியின் மிகப் பெரிய விரோதியுமான பட்டாணியத் தலைவர் கபூர்கானை உண்மையான ஆட்சியாளராகச் செய்திருந்தாள். அவரை நீக்கவேண்டுமென்று சர் ஜான் மால்கமும் சர் தாமஸ் ஹிஸ்லாப்பும் கோரினர். அவள்—ராணி—போருக்கு ஆயத்தம் செய்தாள்; ஆனால் இந் தூரில் ஓரிரவில் அவளுக்கு விரோதமான கட்சியினர் அவளைப் பிடித்து, தலையைச் சீவி, அவளது உடலை ஆற்றில் எறிந்து விட்டனர்.

**1817.** இளையவரான மல்ஹார் ராவ் ஹோல்கார் உடனே அரசரென அறிவிக்கப்பட்டு, பெயரளவில் அவரது தலைமையில், ஆனல் உண்மையில் கபூர்கானின் தலைமையில் ஒரு படை கிளம்பியது.

**டிசம்பர் 21, 1817.** மகாராஷ்டிரர்களின் பயங்கரமான பீரங்கிக் குண்டுத் தாக்குதலுக்கு ஊடே ஆங்கிலேயர்கள் சிப்ரா நதியைக் கடந்து, அவர்களின் பீரங்கிகளைக் கைப்பற்றினர். மகித்பூரில் தீர்வான போர்; ஆங்கிலேயர்கள் சிரமமான போருக்குப் பிறகு வெற்றியுற்றனர். மல்ஹார் ராவின் சகோதரி புனுபாய் பிடிபட்டு, தனது சகோதரரிடம் அனுப்பப்பட்டாள்.—இதன் பிறகு

விரைவில் உடன்படிக்கை: ஜஸ்வந்த் ராவின் குமாரர் மல்ஹார் ராவ் ஹோல்கார் ராஜாவாக அங்கீகரிக்கப்பட்டார்; ஆனால் அவரது அதிகாரம் குறைக்கப்பபட்டு, ராஜ்யம் சிறிதாக்கப்பட்டது.

சுமார் 1817ன் இறுதிவரை, பிண்டாரிகள் தீர்வானச் சண்டைக்கு வராமல் அங்குமிங்கும் திரிந்துகொண்டிருந்தார்கள். தங்களுக்கு நண்பர்களான மகாராஷ்டிரச் சிற்றரசர்கள் வீழ்ச்சியுற்றது கருதி, கரீம்கான்,சிட்டு,வாசீல் முகம்மது என்ற அவர்களது தலைவர்கள் மூவரும் தீவிரமாகக் காரியத்தில் இறங்க முடிவு செய்தனர்; அவர்கள் தங்களது துருப்புக்களை ஒரே இடத்தில் குவித்தனர்; இதுதான் ஹேஸ்டிங்ஸ் விரும்பியது; மாளவத்திலிருந்த கொள்ளைக்காரர்களின் கோட்டைகளை வளைத்து நெருங்கும்படியும், அவைகளைச் சுற்றி ஒழுங்கான காப்பு வளையம் அமைக்கும்படியும், அவர் ராஜதானியின் பல்வேறு சேனைகளுக்கும் உத்தரவிட்டார்; அம் மூன்று தலைவர்களும் ஓட்டம் பிடித்தனர்; அவ்வாறே தாமும் செய்ய முயன்ற அவர்களது படைப் பிரிவுகள் மூன்றும் ஓடியபொழுது [பிரிட்டிஷ்காரர்களால்] தாக்கப்பட்டன; கரீம் கானின் சேனை ஜெனரல் டோங்கின் என்பவரால் அழிக்கப்பட்டது. சிட்டுவின் படை ஜெனரல் பிரௌன் என்பவரால் சிதறடிக்கப்பட்டது; அவர்களது மூன்றாவது படைப் பிரிவு, தாக்கப்படுவதற்கு முன், நாலாபக்கங்களிலும் ஓட்டம் பிடித்தது. வாசீல் முகம்மது தற்கொலை செய்துகொண்டார்; சிட்டு போருக்குப் பிறகு காட்டில் இறந்து கிடந்தார்; சமாதானத்தைக் காப்பதாக உறுதி கூறிய பின், திரும்பிச் சென்று ஒரு சிறிய ஜாகீரில் குடியேறி வசிப்பதற்கு கரீம்கான் அனுமதிக்கப்பட்டார். பிறகு எப்பொழுதுமே மீண்டும் ஒன்று சேராதபடி பிண்டாரிகள் கலைக்கப்பட்டுவிட்டனர்; அமீர்கான், கபூர்கான் ஆகியோரின் தலைமை

யின் கீழிருந்த பட்டாணியர்களும் இவ்வாறே நசுக்கப் பட்டனர்.

சிந்தியாதான் இப்பொழுது ஒரு படையுடன் அல்லது சுதந்திர மானவர் என்ற ஒரு சிறிது நடிப்புடன் விளங்கிய ஒரே தலைவர்; ஆயினும் கம்பெனி மீது பரிபூரணமாகச் சார்ந் திருக்குமாறு செய்யப்பட்டிருந்தார்.—இந்தியா இப்பொழுது

ஆகஸ்டு 1817. பயங்கரக் கடுமையுடன் இந்தியாவில் காலரா நோயின் முதல் தோற்றம்; கல்கத்தாவுக்கருகில் ஜெஸ் ஸார் ஜில்லாவில் அது முதலில் தோன்றி, ஆசியாவி னூடே ஐரோப்பாக் கண்டத்துக்குச் சென்று அதை அழித்து, அங்கிருந்து இங்கிலாந்துக்கும், அவ்விடமிருந்து அமெரிக்காவுக்கும் அது பரவியது. கல்கத்தாவிலிருந்து புதிய படை ஒன்றின் வருகையினால் இத் தொத்துநோய் கொண்டு வரப்பட்டு நவம்பர் 1817ல் ஹேஸ்டிங்ஸின் சேனை அதனால் பீடிக்கப்பட்டு, பண்டேல்கந்தின் தாழ் நிலத்தின் வழியாக ஹேஸ்டிங்ஸின் சேனை சென்றுகொண் டிருந்த பொழுது அது கடுமையடைந்தது; செத்துக் கொண்டிருந்தவர்களும் செத்தவர் சடலங்களும் பல வாரங்களாகப் பாதையில் சிதறிக் கிடந்தன.

ஜனவரி 1, 1818. பேஷ்வா (இவர் பூனாவிலிருந்து தெற்கு நோக்கி ஓடிவிட்டிருந்தார்) வுடன் டிரிம்பக்ஜி டங்லியா சேர்ந்துகொண்டார். 20,000 ஆட்களுடன் இவர்கள், காப்டன் ஸ்டான்டன் என்பவரின் தலைமையின் கீழிருந்த ஒரு ஆங்கிலேயப் படையுடன் போரிட்டனர்; பயங்கரமான சண்டைக்குப் பிறகு ஸ்டான்டன் வெற்றி பெற்றார்; மகாராஷ்டிரர்கள் முறியடிக்கப்பட்டு ஓடினர். ஜென ரல் ஸ்மித் பின்னர் படைத்தலைமை பூண்டு சதாரா மீது படையெடுத்தார்; அது உடனே சரணடைந்தது.

பாஜிராவ் ஓட்டம் பிடித்தார்; இறுதியில் சர் ஜார்ஜ் மால்கம் என்பவரிடம் சரணடைந்தார்; அவர் அரியணையிலிருந்து நீக்கப்பட்டு விட்டதாக மால்கம் அறிவித்தார். உண்மையில் மகாராஷ்டிர அரசர்களைச் சேர்ந்தவரும் (இவ்வரசர்கள் தங்களது அமைச்சர்களாகிய பேஷ்வாக்களால் பதவியிலிருந்து நீக்கம்பட்டிருந்தனர்) சிவாஜியின் வழித் தோன்றலுமான சதாரா ராஜாவை உரிமைப்படியான அரசராக ஹேஸ்டிங்ஸ் பிரபு ஆக்கினர்; பேஷ்வா அரசாங்க ஓய்வு ஊதியம் பெறுபவர் ஆனர்; இவ்வாருக, 1708ல் சதாரா ராஜா சாஹு தனது பேஷ்வாவாக பாலாஜி விஸ்வநாத்தை நியமித்ததற்கு முன்னிருந்த நிலைமை இப்பொழுது மீண்டும் ஏற்படுத்தப்பட்டது. (1857 ஆம் ஆண்டுக் கலகத்தைச் சேர்ந்த நானுசாகிப், பாஜிராவின் தத்துப்புத்திரர்; பிரிட்டிஷ் அரசாங்கத்தால் பாஜிராவுக்குக் கொடுக்கப்பட்டு வந்த ஆண்டுத் தொகை அவரது மரணத்துடன் நிறுத்தப்பட்டது.) அதுமட்டுமன்றி, அந்தக் கடைசி போர்க் காட்சியில் சில முக்கியமான கோட்டைகளும்—தால்னீய்ர், மலிகாவ்ன், அசிர்கார்—பிடிக்கப்பட்டன. — இந்தியாவில் பத்திரிகைச் சுதந்திரத்தை ஹேஸ்டிங்ஸ் பிரபு பிரகடனம் செய்தார்.

**1819.** சர் ஸ்டாம் போர்டு ராபில்ஸ், ஜோஹூரின், துமாங்கோய் அல்லது கவர்னரிடமிருந்து சிங்கப்பூரைப் பெற்ருர்.

**1820.** நைசாம் பெரும் கடனாளியாக இருந்தார்; காரணம்: ஹைதராபாத் படை வைத்திருப்பதில் அவருக்கு ஏற்பட்ட பெருஞ் செலவுகளும், அவரது அமைச்சர் சந்தர் லால் என்பவரின் அவதூருன, திறமையற்ற நிர்வாகமும் ஆகும். நைசாமுக்குக் கொடுக்கப்பட்ட தொகை அவரால் திருப்பிக் கொடுக்க இயலாத அளவு பெரியதாகும் வரை திருவாளர்கள் பாமர் அண்டு கம்பெனியின்

வியாபார நிறுவனம் அவருக்கு ஆவலுடன் எத் தொகைக் கடன்களையும்கொடுத்தது, பாமர் நிறுவனத் தின் கூட்டாளிகள் ஹைதராபாத்தில் தகுதிக்கு மிகவும் மிஞ்சிய செல்வாக்கு பெற்றனர்; அங்கு அப்பொழுது ஸ்தானிகராயிருந்த திரு மெட்காப் இதில் தலையிடும் படி ஹேஸ்டிங்ஸை வேண்டினார்; மேலும் கடன் கொடுப் பதற்குப் பாமர் அண்டு கம்பெனிக்கு ஹேஸ்டிங்ஸ் தடை விதித்து, வட சர்க்கார்ப் பகுதிகளின் தீர்வைகளை உடனே மூலதனமாக்கும் படி கட்டளையிட்டார்; இவ்விதமாகப் பெறப்பட்ட நிதிகள், கடனைத் தீர்ப்பதற்குப் பயன் படுத்தப் பட்டன. இதன்பிறகு விரைவில் பாமர் அண்டு கம்பெனி முறிந்தது; ஹேஸ்டிங்ஸும் இந் நிறுவ னத்துடன் தொடர்பு பெற்றிருந்தார் என்றும் (அதன் உறுப்பினர்கள் ஒருவருடன் கொண்டிருந்த நட்பினால் என்று கூறப்பட்டது); அக் கம்பெனியின் மிகவும் நேர்மை குறைவான தன்மையுள்ள முந்தைய நடவடிக்கைகளில் பல வற்றுக்கு அவர் அனுமதி யளித்திருந்தார் என்றும்; மெட் காப் எடுத்த நடவடிக்கைகள் மூலமாக, பாமர் கம்பெனி யார்களை மேலும் ஹேஸ்டிங்ஸ் "ஆதரிக்க" இயலாத அளவுக்கு விவகாரமானது விளம்பரமடைந்து விட்ட பொழுது தான் அவர் தலையிட்டார் என்றும்—தெரிய வந்ததால் ஹேஸ்டிங்ஸுக்கு இழுக்கு ஏற்பட்டது.

**1822ன் பின் பகுதி.** ஹேஸ்டிங்ஸ் தனது பதவியை ராஜினமா செய்தார். ஜனவரி 1, 1823ல் இங்கிலாந்து திரும்பினர். நாடு சேர்க்காக் கொள்கையைக் கடைபிடிக்கப் போவதாக விரதம் பூண்டு இவர் இந்தியாவுக்கு வந்திருந்தார்!

# கடைசி கட்டம்

# 1823—1858

(கிழக்கிந்தியக் கம்பெனியின் அழிவு)

## ஆம்ஹர்ஸ்ட் பிரபுவின் நிர்வாகம்

## 1823—1828

**ஜனவரி 1823.** ஹேஸ்டிங்ஸ் சென்றுவிட்ட பிறகு, கவுன்சிலின் மூத்த அங்கத்தினரான திரு. ஆடம் தற்காலிக [க் கவர்னர் ஜெனரல் ஆனார்].—மேற் பார்வைக் குழு ஆம்ஹர்ஸ்ட் பிரபுவை வைசிராய் ஆக்கிற்று.

**ஆகஸ்டு 1823.** கல்கத்தாவில் ஆம்ஹர்ஸ்ட்; உடனே பர்மியர்களுடன் போரில் ஈடுபட்டார். —ஆவாவிலிருந்த பர்மியர்கள் பெகு ராஜ்யத்தைச் சார்ந்திருந்தவர்களாக மட்டுமே தொடக்கத்தில் இருந்தனர்; பின்னர் அவர்கள் சுதந்திர மடைந்தனர்; அவர்களின் தலைவராக அலோம்ப்ரா என்ற ஒரு பதவி வேட்டைக்காரர் [இருந்தார்]; இவர் அவர்களது படைகளை எப்பொழுதும் வெற்றிகரமாகப் போர்களில் தலைமை தாங்கி நடத்தி யிருந்தார்; அவர்கள் சையாமிடமிருந்து தென்னு செரீமை வென்று சீனர்களைப் பல சமயங்களில் தோற்கடித்து அரக்கான் முழுவதையும் கைப்பற்றி, பெகுவிலிருந்த தங்களது மேல் அரசர்களையுங் கூட அடிமைப் படுத்தி, ஆவாவைத் தலைநகராகக் கொண்டு தீபகற்பம் முழுவதற்கும் அரசர்களாயினர். பர்மிய அரசர் தான் "ஐராவதத்தின் அதிபதி நீருக்கும் நிலத்துக்கும் அரசர்" என்று பட்டம் சூட்டிக்கொண்டார்.

**1818.** வலியற்று வீழ்ந்து கிடந்த இந்துக்களுக்கெதிராக வெற்றி பெற்ற ஆங்கிலேயர்கள், வெல்ல முடியாத

பர்மியர்களின் முன் சாய்ந்து விடுவார்கள் என்று ஆவா அரசவையில் ஏற்கெனவே நம்பப்பட்டது; எனவே, கிழக்கிந்தியக் கம்பெனி சிட்டகாங்கையும் இதர சில மாவட்டங்களையும் கொடுத்து விட வேண்டும் என்று கோரி பர்மிய அரசர் கல்கத்தாவுக்கு எழுதினார்; ஏனெனில், அவை தனக்குச் சொந்தமான அரக்கான் பிரதேசத்தின் பகுதிகள் என்றார் அவர். ஆயினும், அவரது "தவறு" பற்றி ஹேஸ்டிங்ஸின் மரியாதையான பதில் வந்ததும் சும்மாயிருந்தார்.

**1822.** பர்மியத் துருப்புகள் தங்களது மகா பந்துலா (பிரதம தளபதி) வின் தலைமையின் கீழ் அஸ்ஸாமை வென்று, சேர்த்துக் கொண்டன.

**1823.** அரக்கான் கடற்கரையோரமிருந்த ஷாபுரி என்ற ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமான தீவை அவர்கள் கைப்பற்றி, அங்கிருந்த சிறிய கோட்டைப் படையைப் படுகொலை செய்தனர். பர்மியர்களை அகற்றுவதற்கு ஆம்ஹர்ஸ்ட் ஒரு படையை அனுப்பி, குற்றவாளிகளைத் தண்டிக்கும் படி கேட்டு ஆவா அரசருக்கு மரியாதையுடன் ஒரு கடிதம் எழுதினார்; அக் குற்றவாளிகள் வெறும் கடற் கொள்ளைக்காரர்கள் என்ற விதத்திலேயே ஆம்ஹர்ஸ்ட் கருதி எழுதினார்.

**ஜனவரி 1824.** ஆங்கிலேயர்களின் இக்கடிதத்தில் பலவீனத்தின் அறிகுறியை பர்மியர்கள் கண்டு, பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் [இருந்த] கச்சார் மாகாணத்தைப் படையெடுத்தனர்; பிரிட்டிஷ் துருப்புக்கள் அவர்களைத் தோற்கடித்து, மணிப்பூருக்கு விரட்டின—கல்கத்தாவிலிருந்து இப்பொழுது இரண்டு படைகள் அனுப்பப்பட்டன; ஒன்று அஸ்ஸாமைப் பிடிப்பதற்கும், மற்றது

ரங்கூனையும் இதர பர்மியத் துறைமுகங்களையும் கைப்பற்றுவதற்கும்.

**1824.** காவற் படை உள் நோக்கி ஓடிப் போனதால், ஒரு உதையுமில்லாமலேயே ரங்கூன் பிடிபட்டது. இப் படையெழுச்சியின் தளபதியான சர் ஆர்ச்சிபால்டு காம்பல் அருகிலிருந்த சில அகழ் அரண்களையும் இதே போலப் பிடித்து, பிறகு நீண்ட எதிர்ப்புக்குப் பிறகு கெம்மென்டைன் (ரங்கூனுக்கு நான்கு மைல் தொலைவில்) என்னுமிடத்தையும் கைப்பற்றினர்; பிறகு வெப்பமான வானிலை காரணமாக அவரது துருப்புக்கள் ரங்கூனில் தண்டுகளில் தங்கின; தேவையான பொருள்கள் இன்மையால் அவரது துருப்புக்களிடையில் காலரா நோய் பரவியது.

**டிசம்பர் 1824.** மகா பந்துலா 60,000 ஆட்களுடன் காம்பவின் சேனையைத்தாக்கினர்; ஆங்கிலேயர்கள் அவரை இரண்டு தடவைகள் தோற்கடித்தனர்; அவர் டோனுபியூவுக்குப் பின் வாங்கினர்; ஆங்கிலேயர்கள் அவரைத் தொடர்ந்து, அப் பட்டணத்தை நெருக்கமாக முற்றுகையிட்டனர்.

**ஏப். 1825.** மகா பந்துலா ஒரு ஏவு கருவியால் கொல்லப் பட்டார்; டோனுபியூவின் கோட்டைப் படை சரணடைந்தது. காம்பல் முன்னேறி புரோம் (மறு பெயர் ப்ரி) பட்டணத்தை, ஒரு குண்டு கூட சுடாமல், கைப் பற்றினர்; அஸ்ஸாம் மீது சென்ற படையின் விளைவை எதிர் நோக்கி, காம்பல் இங்கு ஓய்வெடுத்தார்; கர்னல் ரிச்சார்ட்ஸின் தலைமையின் கீழ் அங்கு அனுப்பப்பட்ட படை ரங்பூரையும் சில்ஹெட்டையும் பிடித்து, அஸ்ஸாமிலிருந்து பர்மியர்களை வெளியேற்றி, பிறகு ஜெனரல் மக்பீன் என்பவரின் தலைமையில் முன்னேறி—

**மார்ச். 1825.** அரக்கானுக்குள் நுழைந்து, அங்கு தைரியத்துடன் காக்கப்பட்ட குன்றுகள் வழியாகச் சென்றது; வெற்றி கொண்ட ஆங்கிலேயர்கள் சமவெளிகளுக்குள் நுழைந்து **அரக்கானின் தலைநகர்** முன் தோன்றினர். ஆவா அரசவையுடன் நடைபெற்ற பேச்சு வார்த்தைகளினால் ஒன்றும் விளையவில்லை.

**நவம்பர். 1825.** காம்பல் **ஆவாவை** நோக்கி முன்னேறினர்; எதிரிகள் அவருக்கு முன்னால் ஓட்டம் பிடித்தனர்.

**பிப்ரவரி 1826. இரண்டு தீர்வான சண்டைகள்;** பர்மியர்கள் தோற்றனர்; ஆவாவிலிருந்து இரண்டு நாள் நடந்து **யாண்டாபோ** என்னுமிடத்தை ஆங்கிலேயர்கள் அடைந்தனர்; **பர்மிய மன்னர் பணிந்தார்.**

**1826. பர்மாவுடன் உடன்படிக்கை : அஸ்ஸாம், ஏ** (தென்னசெரீமின் ஒரு மாகாணம்), **தென்னசெரீம், அரக்கானின் ஒரு பகுதி ஆகியவைகளைக் கம்பெனிக்குப்** பர்மிய மன்னர் **கொடுத்தார்; கச்சார் மாகாணத்தில் தலையிடுவதில்லை** என்றும், போர்ச் செலவுகளுக்காக £ **10 லட்சம்** செலுத்துவதாகவும், ஆவாவில் **பிரிட்டிஷ் ஸ்தானிகர்** ஒருவரை ஏற்றுவைத்துக் கொள்வதாகவும் உறுதி கூறினர்.

**இந்த முதல் பர்மியப் போரினால் (1824—1826)** பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு £ 130 லட்சம் செலவாயிற்று; இங்கிலாந்தில் மக்களின் வெறுப்பைப் பெற்றது.

**அக்டோபர் 1824.** (போரின் பொழுது). ரங்கூன் செல்லும்படி உத்தரவு பெற்று, **பாரக்பூரில்** வைக்கப்பட்டிருந்த **47-வது வங்காள சுதேசிக் காலாட்படை** வெளிப்படையாகக் கலகம் செய்தது. (பக். 218ஐப் பார்க்க.)

**1826. போரின் இறுதியில்** அதே இடத்தில் **மீண்டும் கலகம்** (பக். 218ஐக் காண்க.)

**ஜனவரி 18, 1826**. *பிடிக்க முடியாதது என்று* **கருதப்பட்ட பரத்பூரை கம்பர்மீர் பிரபுவின்** *தலைமையின்கீழ் ஒரு படை வலிமையுடன் தாக்கியது. அப்பிரதேசத்தின் பழங் குடிகளான* **ஜாட்டுகளால், மொகலாயப் பேரரசு சிதைவுற்ற காலத்தில்** *இந்த* **பரத்பூர் அரசு** *நிறுவப்பட்டது. அச்சமயத்தில் [1826] அது* **துர்ஜான்சால்** *என்பவரால் ஆளப்பட்டது; இந்த "ராஜ்ய"த்தை அதன் உரிமை பூர்வமான வாரிசான பல்தேவ் சிங் (குழந்தை) என்ப வரிடமிருந்து இவர் பறித்துக் கொண்டார்; பல்தேவ் சிங்கை ஆதரித்தவர்கள் ஆங்கிலேயர்களை உதவிக்கு அழைத்தனர்; இதனுல் துர ஜான் சாலுக்கெதிராகக் கம்பர்மீர் அனுப்பப்பட்டதும் மற்றவையும் நிகழ்ந் தன. பரத்பூர் வீழ்ந்த பிறகு,* **துர்ஜான்சால்** *ஆங்கிலேயர் களின் கைதியாகக் காசிக்கு அனுப்பப்பட்டு. பல்தேவ் சிங் பிரிட்டிஷ் பாதுகாப்பின்கீழ் ராஜாவாக அமர்த்தப் பட்டார்.*

**1827. பர்மியப் போருக்காகப்** *பிரிட்டிஷ்* **பார்லிமென்டிட மிருந்து நன்றிகளை ஆம்ஹர்ஸ்ட்** *பெற்று, பிரபுவாக்கப் பட்டு,* **பிப்ரவரி 1828**ல் *இங்கிலாந்து திரும்பினுர்.*

## (2) வில்லியம் பென்டிங்க் பிரபுவின் நிர்வாகம் 1828—1835

(**கம்பெனியின் விருப்பத்துக் கெதிராகப் பென்டிங்க் தெரிந் தெடுக்கப்பட்டதற்கு பக். 219ஐப் பார்க்க.**)

**ஜூலை 4, 1828. கல்கத்தாவில் பென்டிங்க்—ராஜபுத்திர அரசாகிய ஜோத்பூரில், ராஜாவான** *ராஜாவான* **மான்சிங்** *என்பவர், அவருடைய கலகக்காரப் பிரபுக்களின் விருப்பத்துக்*

கெதிராக, ஆங்கிலேயர்களால் மீண்டும் அரியணையில் அமர்த்தப்பட்டார்.

**குவாலியர், 1827.** குழந்தையோ அல்லது தத்துப்புத்திரனோ இன்றி தௌலத்ராவ் சிந்தியா காலமானர். ஒரு மகனைத் தத்துஎடுத்துக் கொள்ளும்படி சிந்தியாவின் மனைவி—ராணி—க்கு பெண்டிங்க் உத்தரவிட்டார்; மிக்க நெருங்கிய ஆண் உறவினராகி அலி ஜா ஜங்கோஜி சிந்தியாவை ராணி தேர்ந்தெடுத்தார்; 1833ல் இந்தத் தத்துப் புத்திரர் ராணியுடன் போரில் ஈடுபட்டார்; அரசாங்கத்தை அவரிடம் முழுதும் ஒப்படைத்துவிடும்படி பெண்டிங்க் அப்பெண் மணிக்கு உத்தரவிட்டார்.

**ஜெய்ப்பூரில்,** ராஜாவுக்கும், அவரது தாயாரான ராணிக்கும் முதலமைச்சர் நஞ்சிட்டு, அரசாங்கத்தைக் கைப்பற்றினர். பிரிட்டிஷ் ஸ்தானிகர் தலையிட்டு, அரச குடும்பத்தின் ஒரே பிரதிநிதியான குழந்தை ஒன்றை அரியணையில் அமர்த்தினர். அவர் வயது வரும்வரை ஸ்தானிகரே நாட்டு நிர்வாகத்தை மேற்கொண்டார்.

**ஔத், 1834.** வருவாய்கள் முழுவதையும் விழுங்கிய ஔத் ராஜாவின் ஒழுங்கற்ற நிர்வாகத்தைப் பற்றி திரு. மட்டூக் விசாரணை செய்தார்; கவர்னர் ஜெனரலிடமிருந்து கடும் எச்சரிக்கையொன்று ராஜாவுக்கு வந்தது.

**போபால், 1820.** போபால் ராஜா இறந்தார்; அவரது விதவை மனைவி சிக்கந்தர் பேகம் என்பவர் மட்டுமே நாட்டை நிர்வகிப்பதற்கு எஞ்சியிருந்தார்; அவரது உடன் பிறந்தார் குமாரராகிய உரிமை பூர்வமான வாரிசு, 1835ல் ஆங்கிலேய அரசாங்கத்துக்கு விண்ணப்பிக்க, பெண்டிங்க் தலையிட்டு, அவரை அரியணைமீது அமர்த்தினர்

(இப்பொழுது ஆளுவது, இந்த ராஜாவின் மகளான **பேகம்**).

**குட்கு, 1834.** பென்டிங்க் குட்குவை (தென் மலபார் கடற்கரை) இணைத்துக் கொண்டார். முன்பு **1820**ல் **வீர ராஜா** பதவிக்கு வந்து, தனது உறவினர்களை மொத்தமாகக் கொன்று ஆளத் தொடங்கினார்.

**1834**ல் **வீரராஜா** கம்பெனிமீது போர் தொடுத்தார்: சென்னைச் சேனை அவரது தலைநகரைப் பிடித்துக் கொண்டது; அவர் எல்லாவற்றையும் விட்டுவிட்டார்; வேறு அரச குமாரர்கள் இன்மையால் [இந்த அரசு]

**கச்சார். 1830ல் இணைத்துக்கொள்ளப்பட்டது**; பர்மியப் போரின்பொழுது **பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ்** இருந்தது; ஆனால் **1830**ல் **ராஜா கோவிந்த சந்திரர்** வாரிசு இன்றி **இறந்தார்.**

**மைசூர் 1811.** சிறியவரான ராஜா (**பண்டைய** அரச குடும்பத்தைச் சேர்ந்த இவரை **1799**ல்,—ஐந்து வயதுக் குழந்தையாக—இவரது சிறுபிராயம் வரை **பூரணையாவின்** மேற்பார்வையின் கீழ் வைத்து, மைசூர் அரியணைமீது **வெல்லெஸ்லி** அமர்த்தியிருந்தார்.) வயது எய்தி, பூரணையாவைப் பதவியிலிருந்து நீக்கி விட்டு, கஜானாவிலிருந்த செல்வத்தை விரயம் செய்து, கடனாளியாகி, குடியானவர்களைக் கொடுமையாக நசுக்கினார்; இதனால் **1830**ல், **ராஜ்யத்தின் பாதி பகுதியில் கிளர்ச்சி தோன்றியது**; பிரிட்டிஷ் படை அந்த எழுச்சியை ஒடுக்கியது; **பென்டிங்க் மைசூரை இணைத்துக் கொண்டார்**; ராஜாவுக்கு **40,000** பவுன்கள் **ஆண்டுப் படியும், நாட்டின் வருவாய்களில் ஐந்தில் ஒரு பாகமும் ஒய்வு**

ஊதியமாகத் தரப்பட்டது. வருவாய்களில் ஏற்பட்ட அதிகரிப்பானது, இதில் பிந்திய "பாகத்தின்" மதிப்பை மிகவும் உயர்த்தியிருந்தது. (இவ்வாறாக, தாங்கள் ஓய்வு ஊதியம் தந்ததில்—தாங்கள் இணைத்துக் கொண்ட பொழுது—, பறிமுதல் செய்யப்பட்ட சிற்றரசர்கள், அரச குடும்பத்தைச் சார்ந்தவர்கள் ஆகியோருக்காக ஏழை இந்துக்களின் மீது ஆங்கிலேயர்கள் சுமையை ஏற்றினர்.)

கிளர்ச்சிகள்—வங்காளத்தின் தென்மேற்கிலும், ராம்கர், பாலமாவ், சோட்டா நாகபுரி ஆகிய பிரதேசங்களிலும் வசித்த நாகரிகமற்ற குலங்களாகிய கோலிகள், தங்கார்கள், சாந்தல்கள் ஆகியவர்களிடையிலும், பாங்கூராவுக் கருகிலுள்ள பிரதேசத்தில் வசித்த சோவார்கள் என்பவர்களிடையிலும்—அதிகப் படுகொலையுடன் ஒடுக்கப் பட்டது.—மேலும், கல்கத்தாவுக்கருகில் பரசாத் என்னுமிடத்திலும் கடுங்கலகம்; இங்கு டிட்டுமீர் என்பவரின் தலைமையின்கீழ் முஸ்லீம் மதவெறியர்களுக்கும் இந்துக்களுக்குமிடையில் ரத்தக்களரியான சண்டை. பிரிட்டிஷ் படை கலக்காரர்களை அடக்கியது.

**1827.** ரஞ்சித்சிங் ("லாகூர் சிங்கம்") குடன் சேக் ஆம்ஹர்ஸ்ட் பிரபுவின் சரச சல்லாபம், **1831**ல் வில்லியம் பெண்டிங்க் பிரபுவும் அப்படியே (சட்லெஜ் கரையில் கள் தர்பார்) (பக். 222 காண்க.)

**1832.** சிந்துவின் ஆமீர்களுடன் வர்த்தக உடன்படிக்கை; இதன்படி, ரஞ்சித் சிங்கின் ஒத்துழைப்புடன், சட்லெஜிலும் சிந்து நதியிலும் (ஆங்கிலேயர்களது—மொ.ர்.) போக்குவரத்துக்கு முதன் முதலாக அனுமதியளிக்கப் பட்டது.

பென்டிங்குக்கும் கல்கத்தா அதிகாரிகளுக்குமிடையில் சண்டை. காரணம்: போனஸை "ஒரு படி" (பேட்டா மொ. ர்.)யிலிருந்து "அரைப்படி"யாகக் குறைத்தது (பக். 223). சதி ஒழிப்பு (1. c.) சட்டச் சீர்திருத்தங்களும் தக் கொள்ளைக்காரர்களை ஒழித்தலும் (பக். 224).—சட்டமும் நீதியும் (223—224). 1835ல் சுதேசிகளுக்காகக் கல்கத்தாவில் ஒரு மருத்துவக் கல்லூரியை பென்டிங்க் நிறுவினர்.

**1833.** வட மேற்கு மாகாணங்கள் ஒரு தனிராஜதானியாக ஆக்கப்பட்டன; அவைகளுக்காக ஒரு புதிய [தலைமை] நீதி மன்றமும், ரெவின்யூ போர்டும் அலகாபாத்தில் நிறுவப்பட்டன. இம்மாகாணங்களுக்கு 30 ஆண்டுகளுக்கு நிலவரித் திட்டம் செய்யப்பட்டது (இவ்வேலையைச் செய்து அமைத்தவரும் நிர்வாகித்தவரும் ராபர்ட் போர்டு ஆவார்).

தீபகற்ப. கிழக்கத்தியக் கம்பெனியானது செங்கடல் வழியாக நீராவிக்கப்பல் போக்குவரத்தைத் தொடங்கி, இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கு மிடையில் பயணக்காலத்தை இரண்டுமாதங்கள் குறைத்து இரு நாடுகளையும் நெருக்கமாகக் கொண்டு வந்தது; 1842ல் நிறுவப்பட்ட இக்கம்பெனி தாய்நாட்டு அரசாங்கத்திடமிருந்தும் ஆதரவு பெற்றது.

**1833.** (பார்லிமெண்ட் நடவடிக்கைகள்.) சாசனம் மீண்டும் காலாவதியாயிற்று; முன்பு விவாதிக்கப்பட்ட அதே நுணுக்கங்களைப் பற்றி பழைய விவாதங்கள் மீண்டும் துவக்கப்பட்டன. சீனவுடனான வர்த்தகம் எல்லா வர்த்தகர்களுக்கும் பொதுவாக்கப் பட்டது; தனியார் வர்த்தகத்துக்கெதிரான கம்பெனியின் கடைசி வர்த்தக ஏகபோகம் இவ்வாறு தொலைத்துக்கட்டப்பட்டது—புதிய நான்காவதுராஜதானி—வடமேற்கு மாகாணங்கள்—பார்லிமெண்ட் சட்டம் ஒன்றினல் உண்டாக்கப்பட்டது; மற்றொரு சட்டம் பல்வேறு மாகாணங்களின் ஸ்தல அரசாங்கங்களின் விவகாரங்களில் தலையிட கவுன்சிலுடன் கூடிய

கவர்னர் ஜெனரலுக்கு அதிகப்படியான அதிகாரத்தைக் கொடுத்தது ; ஸ்தல கவர்னர்களுக்குக் கவுன்சில்களும் சட்டம் செய்யும் அதிகாரங்களும் இருக்கமாட்டா. ஐரோப்பியர்களாயினும் சரி அல்லது சுதேசிகளாயினும் சரி, எல்லா நபர்களுக்கும், எல்லா நீதி மன்றங்களுக்கும் கவர்னர்—ஜெனரல் சட்டமியற்றுவார். இந்தியா முழுமைக்கும் ஒரே சட்டத் தொகுப்பு ஒன்றை இயற்றும் சாதகப் பாட்டைப்பற்றி விசாரணை செய்வதற்குக் கமிஷன் நியமிக்கப்பட்டது.

## (3) சர் சார்லஸ் மெட்காப், இடைக்கால கவர்னர்—ஜெனரல் 1835—1836

இவர் ஆக்ராவின் கவர்னராக இருந்தவர் ; தற்காலிகமாக நியமிக்கப்பட்டார் ; இயக்குநர் குழு அவரை கவர்னர் ஜெனரலாக உறுதியாக நியமிக்கும்படி பார்லிமெண்டை வேண்டியது; ஆனால் நியமனம் செய்யும் அதிகாரத்தை முழுமையாகத் தன் கையில் வைத்துக் கொள்ள மந்திரி சபை விரும்பியது ; இப்பதவியை ஹெய்டெஸ்பரி பிரபுவுக்கு மந்திரி சபை அளித்தது. ஆனால் அவர் புறப்படு முன், டோரிகளுக்குப் பதிலாக *விக்குகள் பதவிக்கு வந்தனர்; இவர்களுடைய ஆளான, மேற்பார்வைக்குழுவின் புதிய தலைவரான சர் ஜான் ஹாப்ஹவுஸ் ஹெய்டெஸ்பரியின் நியமனத்தை நீக்கிவிட்டு, ஆக்லந்துபிரபுவை நியமித்தார்.

* டோரி, விக் என்பவை இங்கிலாந்திலிருந்த இரு கட்சிகள்-மொ. ர்.

**1835.** இந்தியாவில் பத்திரிக்கைச் சுதந்திரத்தை மெட்காப் பிர கடனம் செய்தார். லண்டனில் இந்தியா இல்லத்திலிருந்த இயக்குநர்கள் (குழு) ஆத்திரமுற்று இந்தியாவின் சிறந்த அதிகாரிகளில் ஒருவராக இருந்த அவரை மிகவும் மரியாதையற்ற முறையில் நடத்தவே, ஆக்லந்து வந்து சேர்ந்ததும் அவர் சிவில் பணியில் தன் பதவியை ராஜி ஞமா செய்து, இங்கிலாந்து திரும்பினர்.

## (4) ஆக்லந்து பிரபுவின் நிர்வாகம் 1836—1842

**மார்ச் 20, 1836.** ஆக்லந்து கல்கத்தாவில் அதிகாரத்தை மேற்கொண்டார். ஆப்கானியப் போரைத் தொடங்கினர். (பாமர்ஸ்டனின் தூண்டுதலின் பேரில்)

**ஆப்கானிய வம்சங்கள். 1757**ல் ஹகமதுஷா துரானி டெல்லியை வென்றார் ; **1761**ல் மகாராஷ்டிரர்களுக் கெதிராக அந் தப் பயங்கரமான பானிப்பட்டுப் போரைச் செய்தார். (அப்தாலிகள் அல்லது துரானிகள் என்ற ஆப்கானியக்குலத் தின் தலைவர் அவர்.) **1761**ல் அகமதுஷா துரானி ஆப் கானிஸ்தானத்துக்குத் திரும்பி, காபூலில்,* ஆட்சி புரிந் தார். அவர் மரணமுற்றதும் (**1773**), அவரது குமா ரர் தைமூர்ஷா (**1773—1792****) அரியணை யேறினர் ; அவரது ஆட்சியின் கீழ் பரக்சாயி குடும்பம் முன்னுக்கு

* மார்க்ஸ் உபயோகித்த புத்தகம் இவ்விஷயத்தில் தவரு யிருக்கிறது ; ஏனெனில் அகமது ஆண்டு, இறந்தது காண்ட காரில்

** 1793 என்று கூறுகிறது, கேம்பிரிட்ஜ் இந்தியவரலாறு தொகுதி 5, 1929.

வந்தது; அதன் தலைவர் பயாந்தாகான் என்பவர், வன்மையற்ற தைமூரின் முதலமைச்சராக [இருந்தார்]. தைமூர் சீற்ற முற்றிருந்த பொழுது பரக்சாயிகளை மிகவும் அவமதித்து விட்டார்; அவர்கள் கலகம் செய்தனர். அதன் மேல் தைமூர் பயாந்தாகானைப் பிடித்துக் கொன்றார்; பரக்சாயிகள் சதோ சாயிகள் மீது (இதுதான்* அரசர் குடும்பத்தின் பெயர்) வஞ்சினம் உரைத்தனர். தைமூரின் குமாரர்—

**1792—1802.** சமான் ஷா அரியணை ஏறினார். இந்திய எல்லையில் போர் அணிவகுப்புகள் நடத்தி இவர் கம்பெனிக்கு மிகவும் எரிச்சல் மூட்டினார்; இந்தியாவைப் பற்றி அவர் கொண்டிருந்த உள் நோக்கங்கள் பரக்சாயிகளாலும் தனது சகோதரர்களாலும் குலைக்கப்பட்டன; அவரது சகோதரர்களில் நால்வர் [குறித்த ஒரு] பங்காற்றினர். ஷூஜா உல்முல்க், மாமூது பிருஸ், கைசர்—பரக்சாயி கணத்தின் (Olan மொ. ர்.) தலைமைப்பதவிக்கு பயாந்தாகானுக்குப் பின் அவரது குமாரர் பதேகான் வந்தார்.

**1801.** பெரிய படையெடுப்பு செய்து இந்துஸ்தானத்துக்குச் செல்லும் வழியில்பெஷாவரில் சமான்[ஷா] இருந்த

இவ்விஷயத்தில் மார்க்ஸ் உபயோகித்த புத்தகத்தில் தவறு இருக்கிறது. தைமூரின் மரணத்துக்குப் பிறகு சமானை பயந்தாகான் அரியணையில் அமர்த்தினார்; மிகவும் செல்வாக்குப்பெற்றிருந்த முதலமைச்சரைத் தொலைத்துக்கட்டிவிட விரும்பிய சமானால் பயந்தாகான் கொலைசெய்யப்பட்டார். இப்பொழுதுதான். பரக்சாயிகளுக்கும் சதோசாயிகளுக்கும் பகைமூண்டது பொரியரின் ஆப்கானியர்களின் வரலாறு, கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு தொகுதி 5, முதலியவைகளைப்பார்க்க

பொழுது, சமானின் சகோதரர் மாமூதைத் தன்னுடன் சேர்ந்து சதிசெய்வதற்காக பதேசிங் உடன்படச்செய்து தனது போர்க்கொடியை உயர்த்தி, காண்டகாரைக் கைப்பற்றினர்; சமான் விரைந்து திரும்பி வந்து, பிடிக்கப்பட்டு, குருடாக்கப்பட்டு, சிறையிலிடப்பட்டு, சுதந்திர மிழந்து இரங்கத்தக்க நிலையில் நீண்டகாலம் வாழ்ந்தார். உரிமைப்படி பதவியேறிய ஷா ஜுஜாவில் முல்க் உடனே காபூல் மீது படையெடுத்தார்; ஆனால் பதே அவரைத் தோற்கடித்து, அரியணையில்—

**1802—1818.** * மாமூது ஷாவை அமர்த்தினர்; அதே சமயம் பிரூஸ் சதோசாயிகளின் ஹீரட் பிரதேசங்களையும், கைசர் காண்டகார் பிரதேசங்களையும் கைப்பற்றிக்கொண்டனர்.

**1808.** **காபூலிருந்த துரானிப் பிரப்புக்கள் பலரின் தூண்டுதலின் பேரில் ஷா ஷுஜா திரும்பிவந்து, பதவியைக் கைப்பற்றிக்கொண்டவர்களைத் தோற்கடித்து, எல்லோரையும் மன்னித்து, தனது சகோதரர்களையே ஹீரட், காண்டகார் ஆகியவற்றின் கவர்னராக இருக்கும்படி விட்டார். பதேகான் ஓடிப்போய், முதலில் கைசருடன் கூடிச் சதிசெய்து கைசரின் பெயரில் புதிய கலகம் ஒன்று செய்து, தோற்கடிக்கப்பட்டார்; கைசர் மன்னிக்கப்பட்டார்.—பிறகு, ஷா மாமூதின் மூத்தகுமாரர் காம்ரானின் பெயரில் பதேசிங் கலகம் செய்து, கைசரிடமிருந்து வஞ்சகமாகக் காண்டகாரைப் பிடித்தார். கலகம் மீண்டும் ஒடுக்கப்பட்டது; கலகக்காரர்களை இன்னொரு முறையும் ஷா ஷுஜா மன்னித்தார்.—ஒரு கலகத்துக்குத் தலைமை தாங்குவதற்குக் கைசரை பதேகான் இணங்கும்படி செய்தார்; அவர்கள் பெஷாவரைக்

* 1800 என்கிறார் பர்க்ஸ்.

** 1803 என்கிறார் பர்க்ஸ்.

கைப்பற்றினர்; கலகக்காரர்கள் மீண்டும் தோற்கடிக்கப்பட்டனர், மீண்டும் மன்னிக்கப்பட்டனர்.—பதேகான் மீண்டும் கலகம்; இச் சமயம் வெற்றி பெற்றார்; ஷா ஷுஜா ஓடும்படியாயிற்று [1810ல்]; காஷ்மீரத்தில் பிடிபட்டார்; அதன் கவர்னர் கோகினூர் வைரத்தை அவரிடமிருந்து பறித்துக்கொள்ள முயன்றார்; ஷுஜா லாகூரிலிருந்த ரஞ்சித் சிங்கிடம் ஓடினார்; இவர் முதலில் அவரிடம் நட்புடன் இருப்பதாக நடித்து, பிறகு அவரை அவமரியாதையுடன் நடத்தி, கோகினூர் வைரத்தைப் பிடுங்கிக் கொண்டார்; ஷுஜா லூதியானுவுக்குத் தப்பியோடி, அங்கு ராஜா கிஸ்டாவருடன் நண்பராயினார். ஷுஜா காஷ்மீரத்தின்மீது பயனற்ற தாக்குதல் செய்து, லூதியானு திரும்பினார்.

**1816.** மாமூது ஷா பலவீனமான, தகுதியற்ற அரசர்; பதேகான், பரக்சாயிகள் ஆகியோரின் கைகளில் உண்மையான அதிகாரம் முழுவதும் இருந்தது. பதேசிங்கின் ஒரு இளைய சகோதரரான தோஸ்த் முகம்மது, பரக்சாயிகளை அரியணையில் அமர்த்த அவருடன் திட்டமிட்டார்; ஆனால் முதலாவதாக ஆப்கானிஸ்தானம் முழுவதையும் ஒரு குடையின் கீழ் கொண்டுவர அவர்கள் விரும்பினர்; ஹீரட் (இங்கு பிரூஸ் ஆண்டுகொண்டிருந்தார்.) மீது அவர்கள் படையெடுத்தனர்; அவர்களால் ஹீரட் கைப்பற்றப்பட்டு, பிரூஸ் ஓடினார்; ஆனால் அவரது உடன்பிறந்தார் குமாரர் இளவரசர் காம்ரான், பரக்சாயிகள்மீது, குறிப்பாக பதேகான் மீது, வஞ்சினம் உரைத்தார்; அவர் காபூல் சென்று, பதேகானின் இயக்கமானது கலகம் என்பதை, அரைப் பைத்தியமுற்றிருந்த தனது தந்தை ஷா மாமூதை உணரும்படி செய்து, பதேகானைப் பிடித்துக் காபூலுக்குக் கொண்டுவர அவரது அனுமதி பெற்றார்; அப்படியே செய்தார்; மாமூது,

அவரது குமாரர் காம்ரான் ஆகியோரின் முன்னிலையில், மிகவும் மிருகத்தனமான முறையில் படேகான் வெட்டித் தள்ளப்பட்டார் (பக். 230 ஐக் காண்க). பிறகு எல்லா பரக்சாயிகளும் தன்னை ஆதரிக்க, தோஸ்த் முகம்மது பெரும் படையுடன் வந்து, காபூலைக் கைப்பற்றி, மாமூதையும் காம்ரானையும் நாடு கடத்தினர்; அவர்கள் ஹீரட்டுக்கு பிரூஸிடம் ஓடினர்.—பரக்சாயிகள் ஆப்கானிஸ்தானத்து ராஜ்யத்தைக் கைப்பற்றிக் கொண்டனர். தோஸ்த் முகம்மது நீங்கலாக, கீழ்வரும் சகோதரர்களும் படேசிங்குக்கு இருந்தனர்: முகம்மது, இவர் பெஷாவரைக் கைப்பற்றினர்; அசீம்கான் (மூத்த சகோதரர்), தோஸ்த் முகம்மது குடும்பத்தின் தலைவர் என்ற முறையில் இவர் காபூலுக்கு உரிமை கொண்டாடி, அதன்மீது படையெடுத்தார்; அதே சமயம் புர் தில் கான், கோகான் தில் கான், ஷெர் அலி கான் ஆகியோர் காண்ட காரையும்கில்ஜிக்களின் நாட்டையும் கைப்பற்றினர். தோஸ்த் முகம்மது காபூலை அசீம்கானிடம் சரண் செய்து, கசினிக்குப் பின் வாங்கினர்.—தொன்மையான சதோசாயி வம்சத்தின் பிரதிநிதியான இளவரசர் அயூப் என்ற ஒரு பொம்மை அரசரை, பெயரளவில் ஷாவாக காபூலில் அசீம்கான் அமர்த்தினர்; ஆனல் தோஸ்த் முகம்மது, [அதே வம்சத்தின்] மற்ருெரு பிரதிநிதியான சுல்தான் அலியை அமர்த்தினர்; இவர் அயூப்பால் கொல்லப்பட்டார். இதன் பிறகு விரைவிலேயே, தோஸ்த் முகம்மதுவும் அசீம்கானும் சீக்கியர்களுக்கெதிராகப் படையெடுத்திருந்தபொழுது, தனக்கெதிராகத் தனது சகோதரர் தோஸ்த் ரஞ்சித்சிங்குடன் சேர்ந்திருக்கிருர் என்று அசீம்கான் அறிந்து, பெருந் திகிலுற்று ஜலாலாபாத்துக்கு ஓடி, அங்கு 1823ல் இறந்தார்; ரஞ்சித் சிங் பெஷாவரைத் தோஸ்த் முகம்மதுவுக்குக் கொடுத்தார்;

தோஸ்த் ஆப்கானிஸ்தானத்தின் உண்மையான அரசராக ஆனார்; **காண்டகாரிலிருந்த பரக்சாயிகள்** குழப்பமுற்றதொரு நிலையில் காபூலைக் கைப்பற்றிக்கொள்ள—

**1826**ல்—தான், உரிமை கொண்டாடிய மற்றவர்களை விரட்டியடித்துவிட்டு, **தோஸ்த்முகம்மது காபூலின் அதிபதி** [யாக முடிந்தது]. அவர் நன்றாகவும் வரம்புகடவாமலும் ஆட்சிபுரிந்தார்; முடிந்த அளவு **துராணிக் குலங்களை** ஒடுக்குவதற்கு முயன்றார்.

**1834.** **ஷா ஷுஜா, சிந்து** மாகாணத்தில் படை திரட்டி தனது ராஜ்யத்தை மீண்டும் பெற ஒரு புதிய முயற்சி செய்து, தோஸ்த்தின் மீது பொறாமை கொண்டிருந்த அவரது (தோஸ்த்தின் - மொ. ர்) பல்வேறு சகோதரர்களின் ஒத்துழைப்பையும் பெற்றார்.

**1834.** **ஷுஜா** பென்டிங்க் பிரபுவிடமிருந்துதான் நம்பிக்கையுடன் எதிர்பார்த்திருந்த ஆதரவைப் பெறவில்லை; **ரஞ்சித் சிங்** தனது ஆதரவுக்கு மிக அதிக விலை கேட்டதால், ஷுஜா அதை மறுத்துவிட்டார்; **ஷுஜா** ஆப்கானிஸ்தானத்துக்குள் படையுடன் புகுந்து, **காண்டகாரை முற்றுகையிட்டார்;** ஆனால் அந்நகரம் தைரியத்துடன் தன்னைக் காத்து நின்றது; **தோஸ்த் முகம்மது** காபூலிலிருந்து படையுடன் **ஷுஜா**வின் பின் பக்கம் வந்து சேர்ந்தார்; **ஷுஜா** ஒரு எளிய சண்டைக்குப் பிறகு இந்தியாவுக்குத் திரும்பி ஓடினார். — **ரஞ்சித் சிங்** இச் சமயத்தில் **பெஷாவரை இணைத்துக் கொண்டார்; தோஸ்த் முகம்மது சீக்கியர்களுக்கெதிராக மதப்போர் ஒன்று** அறிவித்து, மிகப் பெரும் படையுடன் **பஞ்சாபினுள்** புகுந்தார்; ஆனால், **ரஞ்சித் சிங்கின் சம்பளத்திலிருந்த அமெரிக்கரான ஜெனரல் ஹார்லன்** என்பவரால் இப் படையெடுப்பு குலைக்கப்பட்டது; இவர் ஒரு **தூதராக**

**ஆப்கானிய முகாமில்** நுழைந்து, அங்கு மிகத் திறமையாக சதி செய்ததால், படையில் வெறுப்பு வளர்ந்து, பாதி கலைந்துபோய், வெவ்வேறு வழியாக மறுபடியும் புறப்பட்டுச் சென்றுவிட்டது; **தோஸ்த்** காபூலுக்குத் **திரும்பினார்.**

**1837.*** **ரஞ்சித் சிங் காஷ்மீரத்தையும் முல்தானையும்** பிடித்தார்; அவருக்கெதிராகத் தான் நடத்திய வெற்றியற்ற ஒரு போரில் தோஸ்த்தின் குமாரர் **அக்பர் கான்** பிரசித்தி பெற்றார்.

**பாரசீகம். ஆகா முகம்மதுவும்** அவரது [உடன் பிறந்தார் குமாரர்] **பதே அலியும் அடுத்தடுத்து பதவிக்கு வந்து ஷா மன்னர்களாக** பாரசீகத்தை உயர்த்தியிருந்தனர். **பதே அலிக்கு** இரு குமாரர்கள் இருந்தனர். **ஷா சதாவான அப்பாஸ் மிர்சாவும், முகம்மதுவு**ம்.

**1334.**** **ஹீரட்டின்மீது** படையெடுப்பதற்கு வயதான **பதே அலியை அப்பாஸ் மிர்சா** இணங்கச் செய்தார்; ஆனால் **பதே** அதே ஆண்டில் [1834] இறந்து போனார்; **அப்பாஸ் மிர்சா** [கொல்லப்பட்டார்]; **முகம்மது** அரியணையேறி, **டெஹ்ரானில்** ரஷ்யத் தூதராயிருந்த **சிமோனிச்** **பிரபு**வின் தூண்டுதலின் பேரில், **ஆங்கிலேயர்களின் விருப்பத்துக் கெதிராக—**

**1837—ஹீரட்டை முற்றுகையிட்டார்.** சாக்கு: **ஹீரட்டின்ஷா,** என்று இப்பொழுது அழைக்கப்பட்ட **காம்ரான்,**

***கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு,** தொகுதி 5ன்படி காஷ்மீரம் 1819லும், முல்தான் 1818லும் பிடிக்கப்பட்டன.

1833** என்கிறதுசைக்ஸின் **பாரசீக வரலாறு,** தொகுதி2 லண்டன், 1921.

**முகம்மதுஷா** கேட்ட திறையைச் செலுத்த மறுத்தார், என்பது.

**செப்டம்பர் 1838. ஆங்கிலேயர்களின் வேண்டுதலின் பேரில்** என்று பெயரளவிலும், **உண்மையில், ஹீரட்டிலிருந்த ஆப்கானியக் கோட்டைப் படைக்** கெதிராகத் தாங்கள் ஒன்றும்செய்ய இயலவில்லை **என்பதாலும், பாரசீகர்கள் பின் வாங்கினர்.** அப்பொழுது இன்னும் லெப்டினன்ட்டாகவே இருந்த இளைஞர் **எல்ட்ரெட் பொட்டிங்கர் என்பவர்,** முற்றுகையின்போது ஹீரட் கோட்டைப் படையில் பிரசித்தி பெற்றார்.

**1836.** பாரசீக அரசவையிலிருந்த பிரிட்டிஷ் தூதர், **ஹீரட்டின் மீதான பாரசீகப் படையெடுப்பானது** ரஷ்யப் போர் நடவடிக்கை என்றும், இப்படி இன்னும் பலவற்றையும் கூறி **ஆக்லந்துக்கு எச்சரிக்கை** செய்தார் ; **எனவே—**

**1837**—ஆப்கானிஸ்தானத்துடன் **வர்த்தக உடன்படிக்கை**யையும், மேலும் நெருக்கமான **உறவுகளையும்** ஏற்படுத்திக் கொள்ளுவதற்காக **காப்டன் அலெக்சாந்தர் பர்னஸ்** என்பவரை **ஆக்லந்து காபூலுக்கு** அனுப்பினார் ; **ரஞ்சித்சிங்குக்** கெதிராக ரஷ்ய **உதவியைக் காண்டகார் தலைவர்கள்** கேட்டிருந்தனர் **என்பதையும்,** மேலும் (! ?) **அவர்களின் உதாரணத்தை** தோஸ்த் முகம்மது பின்பற்ற விரும்புவதாகத் **தோன்றியது** என்பதையும், தான் வந்து சேர்ந்ததும் [பர்னஸ்] கண்டார். **பர்னஸ் காபூலில் தங்கியிருந்தபொழுது, ரஷ்யர்களின் ஆணையின்படி பரக்சாயிகள் பாரசீகர்களுடன் உடன்படிக்கையொன்றை உண்மையிலேயே** செய்து கொண்டனர் ; மேலும் **டெஹ்ரானில் ஆங்கிலேயத் தூதராயிருந்த திரு. மக்னீல்** "அவமதிப்பு" டன் நடத்தப்பட்டார், தான் **எந்த**

ஒரு தரப்புடன் உடன்படிக்கை செய்து கொள்ளுகிருரோ, அத்தரப்பு ரஞ்சித்சிங்கிடமிருந்து பெஷாவரைத் தனக்குப் பெற்றுத் தரவேண்டும் என்று தோஷ்த் முகம்மது கேட்கவே, பர்னஸின் தூது ஒரு தோல்வி. ரஷ்யத் தூதர் அவ்வாறு உறுதி கூறினர்; பர்னஸால் அவ்வாறு செய்ய இயலவில்லை; அதன்மேல், தான் ரஷ்யத் தரப்பில் சேருவதாக தோஸ்த் முகம்மது அறிவித்தார்; பர்னஸ் ஆப்கானிஸ்தானத்தை விட்டு புறப்பட்டார்.

**ஜுன் 26, 1838.** ஆக்லந்து பிரபு, ரஞ்சித்சிங், ஷா ஷுஜா ஆகியோருக்கிடையில் லாகூர் முக்கூட்டு உடன்படிக்கை; ரஞ்சித் சிங்குக்காக வேண்டி பெஷாவரையும் சிந்து நதியின் கரைகளிலிருந்த அரசுகளையும் ஷா ஷுஜா பூரணமாக விட்டுக் கொடுத்து விடவேண்டியது; ஆப்கானியர்களுக்கும் சீக்கியர்களுக்குமிடையில் பரஸ்பர ஒத்தாசை: ஆப்கானிஸ்தானத்து அரியணையில் ஷுஜா மீண்டும் அமர்த்தப்பட வேண்டியது; கவர்னர்—ஜெனரலால் நிர்ணயிக்கப்பட வேண்டிய ஒரு தொகைக்குப் பதிலாக சிந்து மாகாணத்தின் மீதான தனது உரிமைக் கோரிக்கைகள் அனைத்தையும் அவர் கைவிட்டுவிட வேண்டியது; தனது உடன் பிறந்தார் புதல்வரான காம்ரானிடம் ஹீரட்டை அப்படியே முழுவதும் விட்டுவிட வேண்டியது; பிரிட்டிஷ் அல்லது சீக்கியப் பிரதேசத்தின் மீது படையெடுக்காதவாறு மற்ற எல்லா அந்நியர்களையும் தடைசெய்ய வேண்டியது.

**அக்டோபர் 1, 1838.** ஆங்கிலேயர்களின் துணைவரான ஷுஜாவை மீண்டும் அரியணையில் அமர்த்துவதற்காக ஆப்கானிஸ்தானத்தின்மீது போர் தொடுக்கும் சிம்லா அறிக்கையை ஆக்லந்து வெளியிடுதல். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் பயனற்ற எதிர்ப்பு; பாமால்* குலைக்கப்பட்டது;

* பாமர்ஸ்டன்.

''ரஷ்ய எதிர்ப்பாளர்'' என்று தன்னை அறிவித்துக் கொண்டு இவர்தான் இந்தப் போலி நாடகம் முழுவதையும் தூண்டி விட்டார். (இதற்கிடையில், பாம்—டெஹ்ரான் அரசவையிலிருந்த ரஷ்யர் சிமோனிச்சுடன் மிகவும் நெருக்கமான உறவுபூண்டிருந்த அதே சமயத்தில், ''பாரசீகத்தைப் பயமுறுத்துவதற்காக''—பாரசீக வளைகுடாவில் கர்ராக்தீவைக் கைப்பற்றிக் கொண்டார்.) ஆக்லந்தின் ஆதரவின் கீழ் போர்ச்சபை கூட்டப்பட்டது. பிரதான [ஆங்கிலேயப்] படை ரஞ்சித்சிங்கின் படையுடன் பிரூஸ்பூரில் சேர்ந்து கொள்ளவேண்டியது; பம்பாய்ப் படை சிம்துநதியின் முகத்துவாரத்துக்குக் கடல் வழியாகச் சென்றது; இம்மூன்று படைப் பிரிவுகளும் சிந்து மாகாணத்தில் ஷிகார்பூரில் சந்தித்து, ஒருசேர ஆப்கானிஸ்தானத்துக்குச் செல்லவேண்டியது. இதற்கு சிந்து மாகாணத்து ஆமீர்களின் ஒத்துழைப்பு கோரப்பட்டது.

**1786.** இந்த அமீர்கள்—தால்புராக் குலத்தின் தலைவர்களான பலுச்சிகள் — ஆப்கானியர்களிடமிருந்து சிந்துவை வென்று, தங்களுக்குள் அந்நாட்டைப் பங்கிட்டுக் கொண்டு, நிலமானிய முறையை அமைத்திருந்தனர்.

**1831.** (வண்டியிழுக்கும் குதிரைத் தொகுதியுடன் [அதை வெகுமதியாகத் தருவதற்காக] ரஞ்சித்சிங்கின் அவைக்குத்தான் சென்று கொண்டிருந்த வழியில்) காப்டன் பர்னஸ் அமீர்களுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தினர்; பிறகு 1832ல் அவர்களுடன் ஒரு முறையான உடன்படிக்கையை வில்லியம் பென்டிங் பிரபு செய்து கொண்டார்; அதன்படி சிந்து நதியில் வர்த்தகம் செய்யும் உரிமை பிரிட்டிஷ் வியாபாரிகளுக்குக் கொடுக்கப்பட்டது.

**1835.** ரஞ்சித்சிங் இந்த அமீர்களுடன் போர் ஒன்று தொடங்கியிருந்தார்; ஆனால் (கிழக்கிந்தியக்) கம்பெனி அவர் அப்போரை நிறுத்துமாறு செய்தது

**1838.** முக்கூட்டு உடன்படிக்கை. சிந்து நாட்டு அமீர்கள் [தங்களது பிரதேசங்களை] அமைதியாகப் பெற்றிருப்பதற்கு உத்தரவாதமளித்தது; நிபந்தனை: கவர்னர்-ஜெனரலால் நிர்ணயிக்கப்படும் தொகையை அவர்கள் ஷா ஷுஜாவுக்குச் செலுத்தவேண்டும்.

**1839**ன் முதற்பகுதி. ஆப்கானிஸ்தானத்து ஷா என்ற முறையில் ஷுஜாவுக்கு அமீர்கள் செலுத்தவேண்டிய கப்பத்தை வசூலிப்பதாகச் சுத்த வெட்கங்கெட்ட சாக்குப் போக்குடன், அமீர்களிடமிருந்து பெருந்தொகையொன்று கேட்பதற்காக பொட்டிங்கர் [சிந்துவுக்கு] அனுப்பப்பட்டார். அவர்கள் கீழ்வருமாறு வாதஞ் செய்தனர்: ஷுஜா, தான் நாட்டிலிருந்து விரட்டப்பட்டிருந்தபொழுது, தாங்கள் 1833ல் உடனடியாகத் தந்த தொகைக்குப் பதிலாகக் கப்பத்திலிருந்து தங்களுக்கு விடுதலையளித்தார்; [ஆனால்] "நிதிகளை"ச் செலுத்தாவிட்டால் அவர்கள் [அமீர்கள்] பதவியிலிருந்து நீக்கப்படுவார்கள் என்றுகூறிப் பொட்டிங்கர் வற்புறுத்தினார்; நியாயமான ஆத்திரத்துடன் அவர்கள் தொகை செலுத்தினர்.

**நவம்பர் 1838.** வங்காளப் படை சட்லெஜை அடைந்தது; அங்கு ரஞ்சித்சிங்கின் சேனை அதனுடன் சேர்ந்து கொண்டது.

**டிசம்பர் 10, 1838.** இந்த ஐக்கியப்படைகள் சர் வில்லபி காட்டன் என்பவரின் தலைமையில் பிரூஸ்பூரிலிருந்து, செல்லும் வழியில் ஒன்று சேருவதற்குக் குறிப்பிடப்பட்ட இடமாகிய ஷிகார்பூருக்கு (சிந்துவில்)ச் சென்றன;

(இந்நடவடிக்கைகள் முழுவதையும் குறித்து ஆத்திரமுற்று, படையின் பிரதம தளபதி சர் ஹென்றி பேன் ராஜினமா செய்துவிட்ட பிறகு); அவைகள்—

ஜனவரி 14, 1839—சிந்து பிரதேசத்தை அடைந்து, பம்பாயி லிருந்து சர் ஜான் கீன் தனது துருப்புக்களுடன் பத்திர மாகத் தட்டா வந்து சேர்ந்து விட்டார் என்று கேள்வி யுற்றன.

ஜனவரி 29, 1839. பிரிட்டிஷ் துருப்புக்களின் கிடங்காக இருக்கும் பொருட்டு, சிந்துநதிக் கரையில் இருந்த பக்கர் கோட்டையைத் தரும்படி (சிந்து) அமீர்களைக் கேட் பதற்காக சர் அலெக்சாந்தர் பர்னஸ் அனுப்பப்பட்டார். அவர்கள் இணங்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர். சிந்துநதியின் இடது (கிழக்குக்) கரை வழியாக ஹைதரா பாத்துக்குப் படை முன்னேறியது; அதே சமயம், பம்பாய்ப் படை வலது கரை வழியாகச் சென்று ஹைதராபாத்துக்கு எதிராகத் தங்கியது; சில ரிசர்வ் படைகளை ஏற்றிவந்த பிரிட்டிஷ்கப்பல் ஒன்று கராச்சி யைக் கைப்பற்றியது; ரிசர்வ் படையினர் அங்கு கரை ஒரு ஆங்கிலேயக் கோட்டையாக மாற்றினர்; எல்லா வற்றிலும் அமீர்கள் கம்பெனிக்குப் பணிந்தனர்; பிரதானபடை ஷிகார்பூருக்கு நடந்து, அங்கு—

1839 பிப்ரவரி இறுதியில், வந்து சேர்ந்தது; சர் ஜான் கீனின் தலைமையிலான பம்பாய்ப் படைக்காகக் காத்திராமல், ஷா ஷூஜா தன்னுடன் வர, போலன் கணவாய்க்கு சர் வில்லபி காட்டன் முன்னேறிச் சென்றார்; 146 மைல்கள் பரந்திருந்த வரண்ட பாலைவனம் ஒன்றை அவர் கடக்க வேண்டியிருந்தது; சேதம் ஏற்பட்டது; சுமைதாங்கி மிருகங்கள் பெரும் அளவில் செத்தன.

மார்ச் 10, 1839. அக்கணவாயின் வாயிலில் இருந்த தாதார் என்னுமிடத்தை அப்படை வரிசை அடைந்தது;

காட்டன் சில நாட்கள் ஓய்வெடுத்தார்; கெலட் பிரதேசத்தின் மெஹ்ராப்கான் விரோதியாக இருப்பதைக் கண்டார்; சப்ளைகள் கிடைக்கவில்லை.

**மார்ச் 1839.** எதிர்ப்பின்றி ஆறு நாட்களில் போலன் கணவாய் கடக்கப்பட்டது; சர் ஜான் கீனின் வருகையை எதிர்நோக்கி குவெட்டாவில் காட்டன் தங்கினர்; மெஹ்ராப்கானுடன் சாதகமான உடன்படிக்கையொன்றைச் செய்து கொண்டார்.

**ஏப்ரல் 1839.** சர் ஜான் கீன் தனது பணியாட்களுடன் குவெட்டாவில் வந்து சேர்ந்து கொண்டார்; அங்கு படை முழுவதும் இப்பொழுது குவிந்தது; ஷா ஷுஜாவும் அப்போர் முகாமில் இருந்தார். மேலும் நடந்த பொழுது அதிகப் பஞ்சமும் நோயும்; சீக்கிரமே நேசப் படைகள் காண்டகாரை அடைந்தன; அந்நகர் சண்டையின்றி சரணடைந்தது.

**1839.** மே முன்பகுதி, ஷுஜா காண்டகாரில் ஆப்கானிஸ்தானத்து ஷாவாக முடிசூட்டப்பட்டார்.

**1839.** ஜுன் பின்பகுதி, படை கசினிக்கு நடந்தது; பலத்த கோட்டை; ஆனல், காப்டன் தாம்சனின் தலைமையிலான எஞ்சினியர்களால் அதன் வாயில்கள் வெடி வைத்துத் தகர்த்து வீழ்த்தப்பட்டன; ஒரு நாட்காலை நகர் தாக்கிப் பிடிக்கப்பட்டது; காவற்படை ஓட்டம் பிடித்தது. தோஸ்த் முகம்மது, ஆங்கிலேயர்கள் காபூலை நோக்கிச் சென்று கொண்டிருந்தபொழுது, அந்நகரிலிருந்து இந்துகுஷ்ஷுக்கு ஓடிப் போனார்; அவர்கள் அந்நகரைச் சண்டையின்றி பிடித்தனர்; பிறகு—

**ஆகஸ்டு 7—ஷா ஷுஜா** காபூலில், மிகப் பெரும் பலம் பொருந்திய பாலா ஹிசாரில் தனது தந்தையின் அரண்

மனையில் அரியணையில் அமர்த்தப்பட்டார்.—ஷுஜா வின் குமாரர் இளவரசர் தைமூரும், புதிய சீக்கியப் படை ஒன்றும் கைபர் கணவாய் வழியாக வந்து, பிறகு சீக்கிரம் காபூலிலிருந்த பிரதான படையுடன் சேர்ந்து கொண்டது.

ஜூன் 27, ரஞ்சித்சிங் மரணமடைந்தார்; சீக்கிய அரசைத் தனது மூத்த புதல்வர் கரக்சிங்குக்கும், கோகினூரை ஜகன்னுதர் ஆலயத்துக்கும் விட்டுச் சென்றார். தற்சமயத் துக்கு பெரும் பிரிட்டிஷ் படை ஒன்றையும் சீக்கியர்களையும் காபூலில் விட்டு வைக்கத் தீர்மானிக்கப்பட்டது; அங்கு 1839 லிருந்து 1841வரை அவை தொந்திரவு ஏதுமின்றி இருந்தன; தாங்கள் மிகவும் பத்திரமாக இருப்பதாக அவர்கள் எண்ணியதால், அரசியல் ஏஜண்டான சர் வில்லியம் மக்னுட்டன் இன்பமும் புத்துணர்ச்சியும் ஊட்டக் கூடியதான ஆப்கானிஸ்தானத்துத் தட்பவெப்பநிலை காரணமாக, இந்துஸ்தானத்திலிருந்து தனது மனைவி யையும் மகளையும், மேலும் படையிலிருந்த அதிகாரி களுக்கு நெருங்கிய உறவினர்களான மற்ற பெண்மணி களையும் காபூலுக்கு வரச் செய்தார்.

அக்டோபர் 15, 1839. பம்பாய்ப் படை சிந்து மாகாணத் துக்குச் செல்லத் தெற்கு நோக்கித் திரும்பி வந்த பொழுது கெலட்டைப் பிடித்து, மெஹ்ராப்கானைக் கொன்று, அவரது நாட்டை நாசப்படுத்தியது.

1840ன் முன்பகுதி. மக்னுட்டனும் காட்டனும் சுத்த மடையர் களாயிருந்ததால், காபூலிலிருந்த மிகப் பெரும் கோட்டையான பாலாஹிசாரை ஷா ஷுஜா தனது அந்தப் புரத்தை (!) அங்கு அமைத்துக் கொள்வதற்காகக் கொடுத்துவிட்டு, அங்கிருந்து தண்டுகளுக்குத் துருப்புக்

களை அகற்றிவிட்டனர். இவ்வாறாக அந்நாட்டிலேயே மிகப் பலத்த கோட்டையானது செனுவாக மாற்றப்பட்டது. காபூலிலேயே ஷா ஷூஜாவுக் கெதிராகத் தொடர்ச்சியான கலகங்கள் பிறகு தோன்றின ; இவை 1840 முழுவதும் நீடித்தன.

நவம்பர் 1840. தோஸ்த் முகம்மது சரணடைவதற்காக ஒரு சிறிய குதிரைப் படையுடன் காபூலுக்கு வந்தார்,— (இதற்கு முன்பு, இவர் பொகாராவுக்கு ஓடிப் போனார். அங்கு இவருக்கு நல்ல வரவேற்பு கிடைக்காததால், ஆப்கானிஸ்தானத்துக்குத் திரும்பி வந்து விட்டார் : பெரும் எண்ணிக்கையில் உஸ்பெக்குகளும் ஆப்கானியர்களும் இவருடன் சேர்ந்து கொண்டனர் ; பிரிகேடியர் டெனியால் தோற்கடிக்கப்பட்டு, ஓட்டியடிக்கப் பட்டார்.)

1840ன் எஞ்சிய நாட்களிலும், 1841 கோடையிலும், காண்டகாரில் பயங்கரமான கலகங்கள், கடுமையாக ஒடுக்கப் பட்டன ; ஹீரட் மக்கள் வெளிப்படையாகவே பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். "உரிமையின்றி அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்ட பிரிட்டிஷ்காரர்" களுக்கெதிராக நாடு முழுவதும் ஆத்திர முற்றது.

அக்டோபர் 1841, பெரும் கைபர் கணவாயில் வசித்த கில்ஜிக் குலங்களின் மிகமிக ஆபத்தான கலகம்; அக்கணவாய் வழியாக இந்துஸ்தானத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்த துருப்புக்களுக்கு ஆட்சேதங்கள் பலவற்றை உண்டாக்கியது ; சிரமத்துடன் அடக்கப்பட்டது.

நவம்பர் 2, 1841. காபூலில் உருவாக்கப்பட்ட இரகசிய சதிக்குப் பிறகு, பர்னஸின் இல்லம் கலகக்காரர்களால் தாக்கப்பட்டது; மற்றும் பல அதிகாரிகளுடன்

பர்னஸூம் கீழ்த்தரமாகக் கொலை செய்யப்பட்டார். கலகத்தை ஒடுக்குவதற்காகப் பல படைப் பகுதிகள் அனுப்பப்பட்டன; ஆனால் தவறுதலாக காபூலின் குறுகிய தெருக்களில் அடைப்பட்டுப் போயின; பல நாட்களாக இந்த வெறிபிடித்த கும்பல் இவ்வாறு எதிர்ப்பின்றி விடப்பட்டது; படையுணவுத் துறையின் கிடங்காக உபயோகிக்கப்பட்ட ஒரு கோட்டையை அவர்கள் தாக்கினர்; ஜெனரல் எல்லின்ஸ்டன் (ஆப்கானிஸ்தானத்தில் காட்டனுக்குப் பதிலாக இப்பொழுது படையின் பிரதம தளபதி) நல்ல முறையில் உதவி செய்யாமல் போகவே, சிறு கோட்டைப் படையுடன் அங்கு நிர்வாக அதிகாரியாக இருந்தவர் அக்கோட்டையைக் காலி செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டார்.—காபூலிலிருந்த கோட்டைப் படையின் உதவிக்கு வருமாறு அப்பொழுது கைபர்கணவாயருகிலிருந்த ஜெனரல் சேல் என்பவருக்கும், காண்டகாரிலிருந்த ஜெனரல் நாட் என்பவருக்கும் மக்னுட்டன் அவசரச் செய்திகள் அனுப்பினர்; ஆனால் தரையின்மீது தடிப்பாகப் படிந்திருந்த பனியானது எவ்விதத் தொடர்பையும் இயலாமற் செய்துவிட்டது; துருப்புக்கள் இருபிரிவுகளாக இருந்தன; ஒன்று திறமை வாய்ந்த பிரிகேடியர் ஷெல்டன் என்பவரின் தலைமையின்கீழ் பாலா ஹிசாரிலும், மற்றது ஜெனரல் எல்பின்ஸ்டன் என்பவரின்கீழ் தண்டுகளிலும். இவர்களிருவருக்கிடையில் சச்சரவு காரணமாக ஒன்றுமே செய்யப்படவில்லை.

**நவம்பர் 1841.** ஆப்கானியர்கள் முறைப்படியான தாக்குதலைத் துவக்கி, அருகிலிருந்த குன்றுகள் சிலவற்றைக் கைப்பற்றினர்; அவர்களை அங்கிருந்து அகற்றுவதற்குப் பயனற்ற முயற்சிகள்.

**நவம்பர் 23, 1841.** பொது நடவடிக்கை ; ஆங்கிலேயர்கள் முழுதும் முறியடிக்கப்பட்டு, தண்டுகளுக்குத் திரும்பினர் ; பேச்சுவார்த்தைகள் பயனில்லை ; சில நாட்களுக்குப் பிறகு, தோஸ்த்தின் சீற்றமிக்க குமாரர் அக்பர் கான் [காபூல்]வந்து சேர்ந்தார்.

**டிசம்பர் 11, 1841.** உணவுப் பொருட்கள் தீர்ந்துவிட்டன ; சுற்றியிருந்த பிரதேசத்தில் வசித்த மக்கள் அவர்களுக்கு சப்ளை செய்ய ஒரு மனதாக மறுத்தனர் ; மக்னுட்டன் கலகக்காரர்களுடன் உடன்படிக்கை யொன்று செய்துகொள்ள வேண்டியதாயிற்று : பிரிட்டிஷ் துருப்புக்களும் நாட்டை விட்டு வெளியேற வேண்டும் ; தோஸ்த் முகம்மது விடுதலை செய்யப்பட வேண்டும் ; ஷாஷுஜா முடியின்றி, ஆனால் ஊறு ஏதுமின்றி, ஆப்கானிஸ்தானத்திலோ அல்லது இந்தியாவிலோ வசிக்கவேண்டும் ; பணம், பாதுகாப்பு, உணவுப் பொருட்கள் ஆகியவற்றையெல்லாம் தந்து, பிரிட்டிஷ் படை பத்திரமாகப் பின்வாங்க உதவுவதாக ஆப்கானியர்கள் உத்திரவாதமளித்தனர். அதன் பிறகு 15,000 பிரிட்டிஷ் துருப்புக்கள் ஆப்கானிஸ்தானத்திலிருந்து தங்களது சோகம் நிறைந்த பின்வாங்குதலைத் தொடங்கினர் ; ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஆப்கானியர்கள், (பிரிட்டிஷ் - மொ.ர்) படைவீரர்களைக் கொள்ளையடித்து, (அப்படியே!) அவர்களது பண்டங்களைப் பிடுங்கிக் கொண்டனர் ; காபூலிலிருந்து துருப்புக்கள் புறப்படுவதற்கு முன்னேயே, மக்னுட்டனுக்கு ஒரு புதிய உடன்படிக்கையை அக்பர் கான் அனுப்பி, அவரைத் தனிப்பட்ட சந்திப்புக்கு அழைத்திருந்தார்.

**டிசம்பர் 23, 1841.** இன்னும் நல்ல க்ஷரத்துக்களைப் படைக்குப் பெறுவதற்காக மக்னுட்டன் அதை ஏற்றுக் கொண்டார்; அவரது இருதயத்தினூடே அக்பர் ஒரு கைத்துப்பாக்கி குண்டைப் பாய்ச்சினர்.

**ஜனவரி 1842.** மக்நாட்டனின் பதவியை **மேஜர் பொட்டிங்கர்** ஏற்றுக் கொண்டார்; நம்பிக்கையை இழந்து கொண்டிருந்த தளகர்த்தர்களை ஒரு திட்டவட்டமான நடவடிக்கையை மேற்கொள்ளுமாறு வற்புறுத்த அவரால் இயலவில்லை; படை பத்திரமாகப் பின்வாங்குவதற்கு வகை செய்யும் ஒரு **இறுதியான உடன்படிக்கையைச்** செய்து காபூலை விட்டுப் புறப்பட்டார்; ஆனால் பிரிட்டிஷ் படைகளைத் தீர்த்துக் கட்டிவிடுவதாக **அக்பர் கான்** சபதமெடுத்திருந்தார். துருப்புக்கள் தங்களது தண்டுகளை விட்டு வெளியேறியவுடனேயே கனத்த பனி பெய்தது; போர்வீரர்களின் சொல்லொணாத் துன்பம்; **மூன்று நாட்கள் நடந்த பின்பு, அப்படை வரிசையின் முன்னணி மலைகளில் ஒரு கணவாயில் நுழைந்தது; அக்பர் கான்** குதிரைப் படையுடன் தோன்றி, (ஆங்கிலேயப் - மொ.ர்) **படை பத்திரமாகப் பின்வாங்குவதற்குப் பிணைகளாக,** பல்வேறு அதிகாரிகளுடன், **பெண்டிர்கள் குழந்தைகள் அனைவரையும்** (திருமதி மக்நாட்டன், திருமதி சேல் ஆகியோர் உட்பட) **சரண் செய்யும்படி** கோரினார்; அவர்கள் ஒப்படைக்கப்பட்டனர். **கணவாயில் சுதேசிகள் மலைகளின் மேலிருந்து** அந்த "பிரிட்டிஷ் நாய்களை"ச் சுட்டுக் கொன்றனர்; **கணவாயின் இறுதியைக் கடக்கும்** வரை நூற்றுக் கணக்கானவர்கள் இவ்வாறு வீழ்ந்தனர்; இறுதியில் பட்டினியால் வாடியவர்களும் காயமுற்றவர்களுமாக **500—600** பேர்கள்தான், தங்களது பின்வாங்குதலைத் தொடருவதற்கு எஞ்சியிருந்தனர். அவர்களுங்கூட, எல்லையை நோக்கிச் சென்ற தங்களது போராட்டம் நிறைந்த பயணத்தின் பொழுது **செம்மறியாடுகளைப் போலக் கொன்று வீழ்த்தப்பட்டனர்.**

**ஜனவரி 13, 1842.** ஜலாலாபாத்தின் (வடமேற்கு மாகாணங்களில் ஷாஜஹான் பூருக்கு அருகில்) மதில்களின் மீதிருந்த காவலாளிகள், எலும்புந்தோலுமான ஒரு சிறு குதிரையின் மீது கந்தலான, ஆங்கிலேயப் படை உடை தரித்த ஒரு மனிதன் வருவதைக் கண்டனர்; குதிரையும் மனிதனும் படுமோசமாகக் காயமுற்றிருந்தனர்; மூன்று வாரங்களுக்கு முன்பு காபூலை விட்டுப் புறப்பட்ட 15,000 பேர்களில் எஞ்சிப் பிழைத்திருந்த ஒரே மனிதரான டாக்டர் பிரைடன்தான் அது; அவர் பட்டினியால் செத்துக் கொண்டிருந்தார்.

**ஜலாலாபாத்தில்** ஆப்கானியர்களால் தொந்தரவுகளுக்குட் படுத்தப்பட்ட. ஜெனரல் சேலின் படைக்கு உதவி செய்யும் பொருட்டு ஒரு புதிய படையை முன்னேறும்படி ஆக்லந்து பிரபு ஆணையிட்டார். ஆக்லந்து அவமானமுற்று இங்கிலாந்துக்குத் திரும்பினர்; அவருக்குப் பின் பெரிய வாய் யானையான எல்லன்பரோ பிரபு பதவிக்கு வந்தார்; இவர் சமாதானக் கொள்கையைக் கடைபிடிப்பதாக உறுதி பூண்டு அனுப்பப்பட்டார்; ஆனல் தான் பதவி வகித்த இரண்டு ஆண்டு காலத்தில் வாளை உறையில் போடவேயில்லை (பாமின் தலைமையின் கீழ்).

## (5) எல்லன்பரோ பிரபுவின் (யானையின்) நிர்வாகம் 1842—1844

**1842ன் முதற் பகுதி.** ஜலாலாபாத்தைக் காப்பாற்றுவதற்காக ஆக்லந்தால் அனுப்பட்ட ஜெனரல் ஒயில்டு என்பவரின் தலைமையிலான படை கைபர்கணவாயில் பெருநாசத்துடன் முறியடிக்கப்பட்டு விட்டது என்றும், ஆங்கி

லேயர்களுடன் மேலும் ஒத்துழைக்க சீக்கியப் படை மறுத்து விட்டது என்றும், ஒயில்டின் படையிலிருந்த சிப்பாய்களும் அம்மாதிரியே கலவரமுற்றிருந்தனர் என்றும் கப்பலிலிருந்து இறங்கியதும் "யானை" கேள்விப் பட்டது.

ரஞ்சித் சிங் இறந்ததும் (ஜூன் 27, 1839), அவரது மூத்த குமாரர் கரக் சிங் பஞ்சாபின் மன்னரானார்; இவர் சயித் சிங் என்ற ஒருவரைத் தனது முதலமைச்சராக்கினார்; இவர் முந்தைய முதலமைச்சரான தியான் சிங் என்பவரால் கொலை செய்யப்பட்டார்; தியான் சிங், கரக்கையும் பதவியிலிருந்து நீக்கி, அவருக்குப் பதிலாக அவரது குமாரர் நாவ் நிகல் என்பவரைப் பதவியிலமர்த்தினார்.

1840ல் கரக் சிங் சிறையிலிறந்தார்; நாவ் நிகலும் தற்செயலாகக் கொல்லப்பட்டார்; ஆங்கிலேயர்களை ஆதரிப்பதாகத் தோன்றிய, ரஞ்சித் சிங்கின் தைரியமிக்க புதல்வர் ஷெர் சிங்கை அழைத்து வரும்படி தியான் ஆள் விட்டார்.

**1842.** ஒயில்டுக்கு உதவியாக ஜெனரல் பொல்லாக்கின் தலைமையில் புதிய படை ஒன்று அனுப்பப்பட்டது; விடுவிக்கப்பட்ட ஒயில்டுடன் அது கைபர் கணவாயில் நுழைந்து, ஜலாலாபாத்தில் ஜெனரல் சேலுக்குப் பதிலாக இருக்க வேண்டியது.

**ஏப்ரல் 5, 1842.** பிரதானபடை முன்னேறுவதற்கு வழி செய்வதற்காக, (கைபர்) கணவாயின் இருமருங்கிலுமுள்ள முகடுகளின்மீது இரு படைப் பகுதிகளை பொல்லாக் ஏறச் செய்தார்; அவ்வாறே செய்யப்

பட்டது; கைபரிகள் தங்களது பிரதேசத்திலேயே தோற்கடிக்கப்பட்டு, கணவாயின் ஆப்கானிய முனைக்கு ஓடினர். எதிர்ப்பின்றி கணவாய் வழியாகச் சென்று 10 நாட்களில் *(ஏப்ரல் 15?)* படை ஜலாலாபாத்தை அடைந்தது; அக்பர்கானின் நேரடித் தலைமையில் நடத்தப்பட்ட அந்நகரின் முற்றுகையானது, முற்றுகையிடப்பட்டவர்களே வெளி வந்து செய்த தாக்குதலால் தோற்கடிக்கப்பட்டது என்றும், அக்பர்கான் பின்வாங்கிச் சென்றுவிட்டார் என்றும், அங்கு அப்படையினர் அறிந்தனர்.

ஜனவரி 1842ல் ஜெனரல் நாட் தனது சிறிய சேனையைக் காண்டிகாரில் குவித்து, பல்வேறு சந்தர்ப்பங்களில் ஆப்கானியர்களைத் தோற்கடித்திருந்தார்; பிறகு அவர் முற்றுகையிடப்பட்டு, பெருந்திறமையுடன் அந்நகரைக் காத்தார்; ஆனால், கசினி எதிரியிடம் சரணடைந்துவிட்டது; ஜெனரல் இங்கிலாந்து, குவெட்டாவிலிருந்து தேவையான பொருட்களைக் கொண்டு வரும் சிறு படையுடன் வந்து நாட் அவர்களின் சேனையுடன்சேர எண்ணினர்; எதிர்த்துப் பின் தள்ளப்பட்டு, பின் வாங்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டார்.

யானை எல்லன்பரோ—இப்பொழுது செருக்கு அடங்கி—அக்டோபர் வரையில் ஜலாலாபாத்தில் தங்கியிருக்கும்படியும், பிறகு ஆப்கானிஸ்தானத்திலிருந்து முழுதும் பின்வாங்கும்படியும், பொல்லாக்குக்கு உத்தரவிட்டார்; நாட் காண்ட்காரரையுங்கூட நாசப்படுத்தி, பிறகு சிந்து நதிக்குப் பின்வாங்க வேண்டியது. ஆங்கிலோ-இந்தியர்கள் அனைவரின் கோபக்கூச்சல்; எனவே—

ஜூலை 1842—ஆப்கானிஸ்தானத்திலிருந்த இராணுவத்தைக் காபூலைப் பிடிப்பதற்கு யானை அனுமதித்தது.—ஆங்கிலேயர்கள் பின் வாங்கிய பிறகு ஷா ஷூஜா மிருகத்தனமாகக் கொலை செய்யப்பட்டுவிட, அக்பர்கான் ஆப்கானிஸ்தானத்து ஷாவாகத் தன்னையே ஆக்கிக் கொண்டார். ஆங்கிலேயப் பெண்மணிகள், அதிகாரிகள், இதரக் கைதிகள் ஆகியோரை டெஜீன் என்னுமிடத்திலிருந்த கோட்டை ஒன்றுக்கு அக்பர் அனுப்பினார்; அங்கு அவர்கள் நன்கு நடத்தப்பட்டனர். அங்கு ஜெனரல் எல்பின்ஸ்டன் இறந்தார்.

ஆகஸ்ட் 1842. காண்டகார், ஜலாலாபாத் ஆகியவைகளின் இரு படைகளும் வெவ்வேறு திசைகளில் காபூலை நோக்கிச் சென்றன; கில்ஜிகளைப் பொல்லாக் பலமுறை தோற்கடித்தார்.

செப்டம்பர் 1842. இருபடைப் பிரிவுகளும் டெஜீனில் (டெஸீன், ஜலாலாபாத்துக்கருகில்) ஒன்று சேர்ந்தன; அக்பர்கான் தோற்கடிக்கப்பட்டார்.

செப்டம்பர் 15, 1842. காபூல் மீண்டும் ஆங்கிலேயர்களது கையில்—பொல்லாக் முன்னேறி வரவே, பிரிட்டிஷ் கைதிகள் இந்துகுஷ்ஷில் பாமியன் என்னுமிடத்துக்கு சாலா முகம்மது என்ற அதிகாரியின் பொறுப்பில் அனுப்பப்பட்டனர்; இவர், அக்பர் தோற்கடிக்கப்பட்டு விட்டதை கேள்வியுற்று, தனக்குப் பாதுகாப்பும் பண வெகுமதியும் தருவதாக உத்தரவாதமளித்தால், கைதிகள் அனைவரையும் விடுதலை செய்வதாகவும், அவர்களுடன் காபூலுக்கு வருவதாகவும் பொட்டிங்கருக்குக் கோரிக்கை விடுத்தார்; பொட்டிங்கர் இந்த உத்தரவாதத்தை அளித்தார்; அதனால்—

**செப்டெம்பர் 20**—தங்களது நாட்டவர்களிடம் கைதிகள் காபூலில் மீண்டும் ஒப்படைக்கப்பட்டனர்.

**அக்டோபர் 1842.** காபூலின் அரண்களில் பெரும்பான்மையான வற்றைத் தகர்த்து விட்டு, பிரிட்டிஷ் படை தடையின்றி கைபர் கணவாய் வழியாகச் சென்று பெஷாவர் பிரதேசங்களினுள் நுழைந்தது; பிரூஸ்பூரில் சீக்கியப் படையின் பிரதம தளபதி, பொட்டிங்கருக்கு விருந்தோம்பினர்.

**1842 பின்பகுதி.** சர் சார்லஸ் நேபியர் என்பவரின் தலைமையில் ஒரு படை சிந்து மாகாணத்தின் அமீர்களுக்கெதிராக முன்னேறியது (ஓரளவு காண்டகார் ரெஜிமென்டுகளையும், ஓரளவு வங்காளத்திலும் பம்பாயிலுமிருந்து அனுப்பப்பட்ட புதிய துருப்புக்களையும் கொண்டு அமைக்கப் பட்டது இப்படை). கிடங்கு, சிந்து நதியின் கரையிலுள்ள சுக்கூர் (சிந்து மாகாணத்தில்).—ஹைதராபாத்தில் அரசியல் ஏஜண்டாயிருந்த கர்னல் அவுட்ரம் என்பாரின் இல்லத்தின் மீது பலுசி குதிரைப் படையின் தீவிரத் தாக்குதல்; அவுட்ரம் மயிரிழையில் தப்பித்து நேபியரின் முகாமுக்கு ஓடினர்; நேபியர் அப்பொழுது ஹல்லா வரையிலும் முன்னேறிச் சென்றிருந்தார்.

**பிப்ரவரி 17, 1843.** ஹைதராபாத்துக்கருகில் மியானி என்னுமிடத்தில் சண்டை. அமீர்கள் 20,000 ஆட்களுடனும், நேபியர் சுமார் 3,000 ஆட்களுடனும், மூன்று மணி நேரப் பயங்கரச் சண்டைக்குப் பிறகு நேபியர் வென்றார்; எதிரிகள் அணிகுலைந்து ஓடினர்; ஆறு அமீர்கள் கைதிகளாகச் சரணடைந்தனர்; ஹைதராபாத் உடனே கைக்கொள்ளப்பட்டு, கொள்ளையிடப்பட்டது(!); ஆங்கிலேயர்கள் அந்நகரில் அரணமைத்துத் துருப்புக்களை வைத்தனர்.

**மார்ச் 1843.** இந்த பிரிட்டிஷ் காவற்படை, வங்காளத்தி லிருந்து வந்த சில "சுதேசி" ரெஜிமென்டுகளையும் சேர்த்து வலுத்தப்படுத்தப்பட்டது; எனவே, நேப் பியரிடம் சுமார் 6,000 ஆட்கள் இருந்தனர்.

**மார்ச் 24, 1843.** மீர்பூரின்அமீர் ஆகிய ஷெர் முகம்மதுவை, தலைநகருக்கருகில் நடைபெற்ற கைலப்பில் நேப்பியர் தோற்கடித்தார்; பிறகு மீர்பூர் நகரம் கைப்பற்றப்பட்டு சூறையிடப்பட்டது! அழுத்து பிடிபட்டது,பாலைவனத்தி லிருந்த பலத்த கோட்டையான உமர்கோட்டை; (பலுசி) காவற்படை கத்தியைக்கூட உருவாமல் அங்கரைச் சரண் செய்தது.

**ஜூன் 1843.** சிந்து குதிரைப் படையைச் சேர்ந்த கர்னல் ஜேகப் ஷெர்முகம்மதுவைத் தோற்கடித்தார்; அதனால் சிந்து நாட்டை வெல்லும் வேலை முழுமையுற்றது அப்பொழு திருந்து பிரிட்டிஷ் மாகாணமான சிந்து, ஆண்டுதோறும் தான் தரும் வருவாயைவிட அதிகச் செலவை அரசாங்கத்துக்கு

**குவாலியர், டிசம்பர் 1843.** அங்கு ஆங்கிலேயத் துருப்புக்கள் தங்களது பண்டைய விரோதிகளுடன் போரிட்டுக் கொண் டிருந்தன. இது விளைந்தவிதம் கீழ்வருமாறு.

**1827.** ஹேஸ்டிங்ஸ் பிரபுவுடன் சாதகமானதொரு உடன் படிக்கையைச் செய்துகொண்டபின் (1814), குழந்தை யின்றி தௌலத்ராவ் சிந்தியா இறந்தார். அவருக்குப்பின் பதவியேறியவர்—

**1827—1843** (அவர்மரணமுற்ற வருடம்)—அப்பொழுது காணப்பட்ட ஒரே ஒரு வாரிசான முகாத் ராவ்; இவர் அலி ஜா ஜங்கோஜி சிந்தியா என்ற பெயருடன் பதவி யேறினர்; இறந்தபொழுது இவருக்குக் குழந்தைகள்

ஒன்றுமில்லை; 13 வயது விதவை மனைவி—தாராபாய்—மட்டுமே இருந்தார்; வாரிசாகப் பதவியேறுவதற்கு அந்தப் பெண்மணி பகீரத் ராவ் என்ற எட்டு வயதுக் குழந்தை யொன்றைத் தத்து எடுத்தார்; அக்குழந்தைக்கு அலிஜா ஜயாஜி சிந்தியா என்ற பட்டம் கொடுக்கப்பட்டது; ரீஜென்ட் பதவிக்கு உரிமை கொண்டாடிய மாமாசாகிப் என்றழைக்கப்பட்ட ஜங்கோஜி சிந்தியா (பக். 245ல் குறிப்புகளைக் காண்க. மாமா = தாய் மாமன், சாகிப் = ஐயா), அரச குடும்பத்தின் மேற்பார்வை யாளர் ஆன, தாதா காஸ்ஜி என்றழைக்கப்பட்ட (தாதா = அப்பாவைப் பெற்ற தாத்தா, அல்லது அண்ணன்—ரஷ்ய மொழியில் = பெற்றோரின் உடன் பிறந்தோர் — காஸ்ஜி = குடும்பத்தின் மேற்பார்வையாளர்). வாலா (இறந்துபோன மகாராஜாவின் தூரத்து உறவினர்) ஆகிய இருவரில், மாமாசாகிப்பை [ரீஜென்டாக] நியமிக்கும்படி (ஆங்கிலேய—மொ. ர்) ஸ்தானிகருக்கு எல்லன்பரோ ஆணையிட்டார்; ஸ்தானிகர் அவ்வாறே செய்தார்; ஆனால் தாராபாய் தாதாவை ஆதரித்தார்; எனவே அரசவையில் இருகட்சிகள் தோன்றின; அதிகக் குழப்பமும் ஓரளவு இரத்தம் சிந்துதலும் நடைபெற்ற பின்னர், மாமா பதவியி லிருந்து நீக்கப்பட்டு, தாதாவானவர் மகாராணி தாரா பாயால் நியமிக்கப்பட்டார்; ஆனால் யானையானது தனது மாமாவே வேண்டுமென்றுகூறி, குவாலியரைவிட்டு வந்து விடும்படி ஸ்தானிகருக்கு உத்தரவிட்டது. யானையை எதிர்ப்பதற்குத் தாதா துருப்புக்களைத் தயார் செய்தார். குவாலியர்ப் படையெடுப்பின் தலைமையை சர்ஹ்யூக்கப் என்பவரை மேற்கொள்ளும்படியும்—

**1843**—சம்பல் நதியைக் கடந்து சிந்தியாவின் பிரதேசத்துக்குள் நுழையும்படியும் எல்லன்பரோ (யானை) உத்தரவிட்

டார்; அதன் பிறகு ராணியும் தாதாவும் பணிவதாகக் கூறினர்; ஆனால் அவர்களது 60,000 ஆட்களடங்கிய படையும் 200 பீரங்கிகளும் போருக்குச் சென்று, [ஆங்கிலேயர்கள் கடந்திருந்த] சம்பல் நதிக்கு அப்பால் அவர்களை விரட்டின.

டிசம்பர் 29, 1843, மகாராஜ்பூருக்கருகில் (குவாலியரில்), 14,000 பொறுக்கியெடுக்கப்பட்ட (மகாராஷ்டிரப்) போர்வீரர்கள், சிறந்தமுறையில் செயல்படுத்தப்பட்ட பல பீரங்கிப் படையுடன் சர்ஹ்யூக்கப்பைத் தாக்கினர்; மகாராஷ்டிரர்கள் மிக்க வீரத்துடன் போர் புரிந்தனர்; பெருத்த சேதத்துக்குப் பின்னர் ஆங்கிலேயர்கள் வென்றனர்.

டிசம்பர் 31, 1843. மகாராணியும், இளம் சிந்தியாவும் பிரிட்டிஷ் முகாமுக்கு வந்து, தாழ்மையுடன் பணிந்தனர்; குவாலியர் அரசு சிந்தியாவுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டது; ராணிக்கு ஓய்வு ஊதியம் கொடுக்கப்பட்டது, மகாராஷ்டிர சேனை 6000 ஆட்களாகக் குறைக்கப்பட்டது [குவாலியரிடமிருந்து] உதவித் தொகை பெறும் பிரிட்டிஷ் படை 10,000 ஆட்களாக அதிகரிக்கப்பட்டது; சிந்தியா தான் பருவம் எய்தியதும் அரியணையேற வேண்டியது; அதுவரை அரசாங்க விவகாரங்களை நிர்வகிப்பதற்கு ஒரு சபை நியமிக்கப்பட்டது.

பிறகு விரைவில், 1844ன் துவக்க காலத்தில், தனது பதவிக் காலம் முடிவுறு முன்பாகவே, தனது "போர் ஆர்வம்" காரணமாக, இயக்குநர் குழுவால் யானை பதவியிலிருந்து விலக்கப்பட்டார்; அவருக்குப் பதிலாக சர் ஹென்றி ஹார்டிஞ் அனுப்பப்பட்டார்.

## (6) ஹார்டிஞ் பிரபுவின் நிர்வாகம்
## 1844—1848

**ஜூன், 1844.** ஹார்டிஞ் கல்கத்தா வந்து சேர்ந்தார். (அவர் சர் ஹென்றி ஹார்டிஞ்சாக வந்தார், "பிரபு"வாக அல்ல)

**1842.** ரஞ்சித் சிங்கின் புதல்வர்களில் ஒருவரான ஷெர் சிங் பஞ்சாபின் அரசராய் இருந்தார்; அவரது முதலமைச்சர் தியான் சிங் என்பவர் ஷெர் சிங்கைக் கொலை செய்யுமாறு அஜித் சிங் என்ற ஒருவரைத் தூண்டினார்; ஆனால் ஷெரின் மூத்த குமாரர் பிரதாப் சிங்கையும் அஜித் கொலை செய்தார்; தியான் சிங்கையும் கூடக் கொலை செய்தார்; தியான் சிங்கின் சகோதரர் சுச்சாத்தும், [குமாரர்] ஹீரா சிங்கும் லாகூரைத் துருப்புக்களுடன் சூழ்ந்து கொண்டு, (அஜித் சிங்கின் தலைமையிலான) கலகக்காரர்களைப் பிடித்து, அவர்கள் அனைவரையும் கொன்றனர். அதன் பிறகு, தன்னையே முதலமைச்சராக்கிக் கொண்ட ஹீரா சிங், ஷெர் சிங்கின் குமாரர்களில் எஞ்சியிருந்த ஒரே ஒருவரான துலீப் சிங் என்பவரை [ராஜாவாகப்] பிரகடனம் செய்தார் (இவருக்கு 10 வயது; திறமை படைத்தவர், லாகூரின் கடைசி மகாராஜா). ராஜ்யத்தில் உண்மையில் மிகப் பெரும் சக்தியாக விளங்கிய சீக்கிய அல்லது * கல்சாப் படையின் எண்ணிக்கையைக் குறைப்பது அல்லது சக்தியைக் கட்டுப்படுத்துவது

* "சமூகம்"; சீக்கியர்களில் சகோதரக் கூட்டுக்கு ஆதி பெயர்; பின்னர் இது சீக்கிய அரசையும், போர்வீரர்களின் ஸ்தாபனங்களையும் கூடக் குறித்தது; சீக்கிய அரசாங்கத்தின் கொள்கைகளுக்கு ஜனநாயகத் தன்மையை இது ஊட்டியது. எனவே சீக்கிய நிலப் பிரபுக்கள் கல்சாவின் சக்தியை முறிப்பதில் நாட்டமுடையவர்களா யிருந்தனர்.

ஹீரா சிங்குக்கு மிகவும் கடினமான பிரச்சினையாயிருந்தது; தனது அதிகாரிகளின் சதிக்கு இரையாக ஹீரா வீழ்ந்தார் (தீர்த்துக்கட்டப்பட்டார்).—ராணிக்குப் பிடித்தவரான பிராமணர் லால் சிங் என்பவர் முதலமைச்சரானார்; பல சிறிய படையெழுச்சிகளுக்குப் பிறகு, கல்சாவை அமைதிபடுத்துவதற்கு ஒரே வழி இங்கிலாந்துக்கெதிரான போர் ஒன்றுதான் என்பதை அவர் கண்டார்.

**1845 வசந்த காலம்.** லாகூரில் போர் ஆயத்தங்கள் செய்யப்படுவது மிக புலனானதால், சட்லெஜின் கிழக்குக் கரையில் 50,000 பேர்களை சர் ஹென்றி ஹார்டிஞ் குவித்து வைத்தார்.

**முதல் சீக்கிய யுத்தம், 1845, 1846.** நவம்பர் இறுதியில், 60,000 சீக்கியர்கள் சட்லெஜைக் கடந்து, பிரூஸ் பூருக்கருகில் ஆங்கிலேயப் பிரதேசத்தில் முகாமிட்டனர். அவர்களை எதிர்ப்பதற்குக் கவர்னர்-ஜெனரல் ஹார்டிஞ்சும் அவரது பிரதம தளபதி சர்ஹ்யூக் கப்பும் உடனே புறப்பட்டனர். ஆங்கிலேயர்களின் துர்ப்பாக்கியங்களுக்குப் பெருங் காரணம் சீக்கியர்களின் வீரம் மட்டுமின்றி, கப்பின் கழுதையொத்த மடத்தனமும் ஆகும் என்பதைக் கவனிக்கவேண்டும்; தெற்கிலிருந்த எளிதில் பயந்துபோன இந்துக்களைச் செய்தது போலவே, துப்பாக்கி முனையால் சீக்கியர்களைத் தாக்கி அவர்களை எதுவும் செய்துவிட முடியும் என்று கற்பனை செய்தார்.

**டிசம்பர் 18, 1845.** பிரூஸ்பூரிலிருந்து சுமார் 20 மைல் தொலைவிலுள்ள முட்கி என்னுமிடத்தில் போர். (தங்களது "சுதேசி ரெஜிமெண்டுகள்" பல ஏற்கெனவே முறிந்துவிட்டன [ஆயினும்]) ஆங்கிலேயர்களின் வெற்றி; இரவின்பொழுது லால் சிங் தனது படையுடன் விலகிச் சென்றார்.

**டிசம்பர் 21, 1845.** சீக்கியர்கள் தாங்கள் முகாம் அமைத்திருந்த **பிரூஸ் ஷா என்னுமிடத்தில் போர்** எல்லாப் பக்கங்களிலும் ஆங்கிலேயர்கள் பெருத்த சேதத்துடன் பின் தள்ளப்பட்டனர்.

**டிசம்பர் 22, 1845. மீண்டும் போர்த் துவக்கம்.** பெரும் சேதங்களுடன் **ஆங்கிலேயர்கள் வென்றனர்**; காரணம்: **தங்களது "தோல்வி"**க்குப் பிறகு—பெரும்பாலான கிழக்கத்திய நாடுகளுக்குத் தோல்வி என்பது கலவரமும், பொதுவான ஓட்டமும்தான்—அடுத்தநாட் காலை ஆங்கிலேயர்கள்வந்து மீண்டும் தாக்குவார்கள் என்று **சீக்கியர்கள்** எதிர்பார்க்கவில்லை. **சீக்கியர்கள் பின்வாங்கினர்**; ஆங்கிலேயர் மிகவும் களைத்துப் போனதால் துரத்திச் செல்ல இயலவில்லை. **லாகூர்மீது தாக்குதல்** தொடுப்பதற்கு **முற்றுகை பீரங்கிகளை** எதிர்பார்த்திருந்தனர்; இவை வந்துகொண்டிருப்பதாக **டிசம்பர் மத்தியில்** செய்தி வந்திருந்தது; லூதியானுவுக் கருகில் **அலிவால்** என்ற சிறு கிராமத்தில் முகாமடித்திருந்த சீக்கியர்கள், வந்துகொண்டிருந்த இராணுவத் தளவாடங்களைத் தாக்குவதை முன்கூட்டியே தடுப்பதற்கு—

**ஜனவரி 28, 1846—அலிவால் போர்**; பலத்த எதிர்ப்புக்குப் பிறகு சீக்கியர்கள் ஆற்றுக்குள் விரட்டப்பட்டனர்.—சில நாட்களுக்குப் பிறகு டெல்லியிலிருந்து தளவாடங்கள் ஆங்கிலேய முகாமில் வந்து சேர்ந்தன.—இதற்கிடையில் லாகூரின் காப்புக்காக **சொப் ராவ்ன்** முதலிய இடங்களில் கிட்டதட்ட 40,000 ஆட்களைக் காவற்படையாக வைத்து, மிகவும் **பலமான அரண்களை** சீக்கியர்கள் கட்டியிருந்தனர்.

**பிப்ரவரி 10, 1846. சொப் ராவ்ன் போர்.** மிகச் சிறந்த, மிகமிக வீரம் பொருந்திய எதிர்ப்புக்குப் பிறகு சீக்கி

யப் படை முழுக்க முறியடிக்கப்பட்டது; **ஆங்கிலேயர் தரப்பிலும் பெரும் சேதம். (கையுடன் கை கலந்து அதிகம் சண்டையிட்டனர்;** ஆங்கிலேயர்கள் இதுவரை செய்த மிகக் கடுமையான சண்டைகளில் ஒன்று.) ஆங்கிலேயர்கள் சட்லெஜை எதிர்ப்பின்றிக் கடந்து **கசூர் (**லாகூருக்குச் சற்று அருகில்) என்ற பலத்த கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டபின், (இளம் ராஜாவான) **துலீப் சிங், குலாப் சிங்கின்** தலைமையின்கீழ் செல்வாக்கு மிக்க பிரபுக்களுடன், பணிவதற்காக அந்த இடத்துக்கு வந்தார். (குலாப் சிங் என்ற **இந்த ஆசாமி ஒரு ராஜபுத்திரர்;** உள்ளத்துக்குள் இவர் சீக்கியர்களின் பெரிய விரோதி என்பது ஆங்கிலேயர்களுக்குத் தெரியும்). **உடன்படிக்கை :** இதன்படி; **பியாஸ், சட்லெஜ் நதிகளுக்கிடையிலுள்ள பிரதேசம்** கம்பெனிக்குக் கொடுக்கப்பட வேண்டும்; நஷ்டஈடாக £ 15.00,000 தரப்பட வேண்டும்; தற்சமயம் **லாகூரில் ஆங்கிலேயத் துருப்புக்கள்** வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

**பிப்ரவரி 20, 1846.** வெற்றிக்களிப்புடன் **ஆங்கிலேயப் படை லாகூரில் நுழைந்தது.** £15,00,000த்தைச் செலுத்துவதற்குப் பொக்கிஷத்தில் பணமில்லாததால், **காஷ்மீரம் கம்பெனியோடு இணைத்துக்கொள்ளப் பட்டது** என்று **ஹார்டிஞ்** அறிவித்தார்; ஆனால் **குலாப்சிங்** அப்பணம் தர முன் வந்தார்; ஆகையால் **காஷ்மீரம்** அவருக்குக் கொடுக்கப்பட்டது. இதுதான் ஹார்டிஞ் தனது போர்ச் செலவுகளைச் சரிக்கட்டிய விதம் **கல்சாப்படையின் துருப்புக்கள்** சம்பளம் தரப்பட்டு. கலைக்கப்பட்டன; **துலீப் சிங்** சுதந்திரமான அரசராக அங்கீகரிக்கப்பட்டார். லாகூரில் **மேஜர் ஹென்றி லார்ன்ஸ் ஆங்கிலேயக் காவற்படையுடன்** இருத்தப்பட்டார்; பிரதான படை, கைப்பற்றப்பட்ட பீரங்கிகளுடன் **லூதியானு**

வுக்குப் பின் வாங்கிற்று.—ஹார்டிஞ்சும் ஷகப்பும் பார்லிமெண்டின் நன்றிகளைப் பெற்று, பிரபுக்களாக்கப்பட்டனர்.—மார்ச் 1848ல் ஹார்டிஞ் இங்கிலாந்து திரும்பினார் ; அவருக்குப் பிற்கு டல்ஹௌசி புரபு கவர்னர்—ஜெனரல் ஆனார்.

## (7) டல்ஹௌசி பிரபுவின் நிர்வாகம் 1848—1856

**ஏப்ரல் 1848.** தனது தந்தை (சாவன்) க்குப்பிறகு 1844 ல் பதவியேறிய முல்ராஜ் என்பவர் முல்தானின் கவர்னர் பதவியிலிருந்து துலீப் சிங்கால் நீக்கப்பட்டு, அவரது பதவியை ஏற்றுக்கொள்வதற்கு சர்தார்கான் என்பவர் வான்ஸ் அக்னியூ (ஒரு சிவிலியண்) என்பவரும், லெப்டினண்ட் ஆண்டர்சன் என்பவரும் உடன் செல்ல, அனுப்பப்பட்டார்.

**ஏப்ரல் 20, 1848.** முல்ராஜ், நகரின்சாவிகளை ஒப்படைத்தார் ; மூன்று நாட்களுக்குப் பிறகு காவற்படை கதவுகளைத் திறக்க, சீக்கியர்கள் விரைந்து உள்ளே நுழைந்து, ஆண்டர்சனையும் வான்ஸ் அக்னியூவையும் கொன்றனர். சீக்கியப் படை வகுப்பு ஒன்றுடன் லாகூருக்கருகில் வைக்கப்பட்டிருந்த இளம் லெப்டினன்ட் எட்வார்ட்ஸ் என்பவர், தனது படையிலிருந்த சீக்கியர்கள் விட்டுச் செல்ல ஆரம்பிக்கவே, பாவல்பூர் ராஜாவிடம் உதவிக்காக அனுப்பப்பட்டு, அதையும் பெற்றார்.

**மே 20, 1848.** அவர் சிந்துக்கரையில் டேராகாசிகான் என்ற இடத்தில், கர்னல் கோர்ட்லாண்ட் என்பவருடன்

சேர்ந்து கொண்டார் ; கோர்ட்லாண்ட்டிடம் 4,000 ஆட்கள் இருந்தனர் ; அவர்களுடன் **பஞ்சிகளின் தொகுதிகள் இரண்டும்** சேர்ந்து கொண்டன ; இவ்வாறு மொத்தம் 7000 ஆட்களைக் கொண்டு, **முல்தானைப்** பிடிப்பதாக அவர்கள் முடிவுசெய்தனர் ; அதிர்ஷ்டவசமான பல்வேறு கைகலப்புக்களுக்குப் பிறகு, முல்தானுக்கு முன்பு **செப்டம்பர் 1848** வரை [ஆங்கிலேயர்கள்] நின்றனர் ; அப்பொழுது, **ஜெனரல் விஷ் என்பவரின் தலைமையிலான** ஒரு பெரிய **ஆங்கிலேயப்படை** அவர்களுடன் சேர்ந்து கொண்டது ; அவர்கள் **முல்தானைச்** சரணடையும்படி கேட்டனர் ; அது மறுக்கப்பட்டது ; இச்சமயம் **ஷேர்சிங்** (இவர் துணை என்று தன்னைக்கூறிக்கொண்டு; லாகூரிலிருந்து இரண்டு மாதங்கட்கு முன்பு வந்திருந்தார்) எதிரிகளுடன் சேர்ந்து கொண்டார் **பஞ்சாப் முழுவதிலும் இப்பொழுது கொந்தளிப்பு, பெஷாவரைத் தருவதாக உறுதி கூறி லாகூர் மந்திரிசபை தோஸ்த் முகம்மதுவின் நேச உறவைப்பெற்றது.** சர் ஹென்ரி லாரன்ஸின் சகோதரரான **சர்ஜார்ஜ் லாரன் பெஷாவரில்ஸ்தானிக**ராயிருந்தார்; **அக்டோபர்24, 1848-ல்** ஸ்தானிகரின் அலுவலகத்தைச் சீக்கியர்கள் பிடித்து ஆங்கிலேயர்களை நல்ல கண்காணிப்புடன் கைதிகளாக வைத்தனர்.

**இரண்டாம் சீக்கியர் யுத்தம். அக்டோபர் 1848, பிரூஸ்பூரியில்** கூடியிருந்த படையுடன் டல்ஹௌசி சேர்ந்துகொண்டார். **அக்டோபர் இறுதியில் கப்** சட்லெஜைக் கடந்தார் ; ஜெனரல் **வீலர் ஜலந்தரில்** அவருடன் சேர்ந்து கொண்டார். **ரவி, சீனுப் நதிகளுக்கிடையிலான தேவாப்** பகுதியில் சீக்கியர்கள் குவிந்திருந்தனர்.

**நவம்பர் 22, 1848. ராம்நகர்ச் சண்டை.** (ஷேர் சிங்கின் தலைமையில் சீக்கியர்கள்.) சீக்கியர்கள் **சீனுப்புக்கு** அப்

பால் பின் வாங்கிச் சென்று விட்டனர்; சீக்கியர்களின் பீரங்கிகளுக்கு எதிரில் செல்லாத பொருட்டு, கப் வடக்காகச் சென்று நதியைக் கடந்தார்.

**டிசம்பர் 2, 1848, சாதுல்லாபூர் கிராமத்தில் சண்டை** (சீக்கியர்கள்) ஷேர் சிங்கின் தலைமையின் கீழ் ஜீலம் நதியை நோக்கிப் பின்வாங்கி அங்கு பலத்த அகழ் அரண் அமைத்துத் தங்கினர்; ஆறு வாரங்கள் ஆங்கிலேயப் படை செயலற்று இருந்தது.

**ஜனவரி 14.* 1849. ஜீலம்** நதிக்கருகிலிருந்த கிராமமான **சிலியன்வாலாவில் சண்டை**; ஆங்கிலேயர்களுக்குப் பெரும் சேதத்தை உண்டாக்கிற்று; 2,300 ஆட்களையும் அவர்கள் இழந்தனர்; **மூன்று ரெஜிமெண்டுகள் அணி குலைந்து போயின;** அவர்கள் சிலியன் வாலாவில் ஓய் வெடுத்தனர்; சீக்கியர்கள் விலகிச்சென்று புதிய இடங்களில் நின்றனர்.

**ஜனவரி 22, 1849. ஜெனரல் விஷ்ஷும் லெப்டினட் எட்வர்ட்ஸும் முல்தானைக் கைப்பற்றினர்** (முல்ராஜ் படையுடன் வெளியே செல்ல அனுமதிக்கப்பட்டார்.) **கப்புடன்** சேர்ந்துகொள்ள ஆங்கிலேயப் படை சென்றது; ஆனால் ஒரு பிரிட்டிஷ் கோட்டைப் படையுடன் லெப்டினன்ட் எட்வார்ட்ஸ் மூல்தானிலேயே தங்கினர்.

**ஜனவரி 26, 1849 முல்தான் பிடிபட்டதைப்பற்றி கப்பின்சேனை** கேள்வியுற்றது; சில நாட்களுக்குப் பிறகு **பஷர்சிங்** பணிய முன் வந்தார்; [ஆனால் ஆங்கிலேயர்கள்] மறுத்துவிட்டனர்.

* ஜனவரி 13 என்கிறார் ஸ்மித், ஆக்ஸ்போர்டு இந்திய வரலாறு.

**பிப்ரவரி 12, 1849.** *பிரிட்டிஷ்படை முழுதும் வடக்கிலிருந்த பொழுது லாகூரின் மீது பாய்ந்து தாக்குவதற்காகத் ஷெர்சிங் திறமையான* **பாரிசப்படை நடத்தல்** *செய்தார்.* **ஆனால் கப்** *விரைந்து வந்து,* **சீனுப்புக்கருகில் குஜரத்** *என்ற கிராமத்தில் அவரைப் பிடித்தார்.*

**பிப்ரவரி 20, 1859.** **குஜரத் சண்டை** *(பிரிட்டிஷ் படையின் பலம் 24,000 ஆட்கள்). ஆங்கிலேயர்களுக்கு,* **ஓரளவு**

**மார்ச் 12, 1849.** **ஷெர்சிங்கும் அவரது படைத் தளபதிகளும் பணிந்தனர்.** *லாகூரைக் கைப்பற்றியபிறகு,* **டல்ஹௌசி பஞ்சாபை இணைத்துக் கொண்டார். துலீப் சிங்** *பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் இருக்கச் சம்மதித்தார். கல்சாப்படை கலைக்கப்பட வேண்டியது ;* **கோகினூர்** *(வைரம், பக். 256, எண் 1ஐப் பார்க்க.) அழகிய விக்டோரியாவுக்கு அளிக்கப்பட வேண்டியது ;* **சீக்கியத் தலைவர்களுக்குச் சொந்தமான நிலச்சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன ;** *தாங்கள் வசிக்குமிடங்களிலிருந்து நான்கு மைல்களுக்குள் தங்களைக் கைதிகளாக அவர்கள் கருதிக்கொள்ள வேண்டியது.* **முல்ராஜுக்கு** *ஆயுள் சிறை தண்டனை விதிக்கப்பட்டது.* **பஞ்சாபில் நிலவரித்திட்டம் செய்யும் பணி சர் ஹென்றிலாரன்ஸின்** *தலைமையிலான ஒரு கமிஷனிடத்தில் விடப்பட்டது; அவருக்கு அவரது சகோதரர்* **சர்ஜான் லாரன்ஸ்** *[பின்னாள்* **கவர்னர் ஜெனரல்)** **உதவி** *செய்வார்.—சிப்பாய் முறையில், ஆங்கிலேய அதிகாரிகளைக் கொண்ட ஒரு* **சிறு சீக்கியப்படை** *அமைக்கப்பட்டது ;* **சாலைகள் போடப்பட்டன.**

**மே 1849.** **கப்** *பதவியிலிருந்து நீக்கப்பட்டு* **சர் சார்லஸ் நேபியர்** *நியமிக்கப்பட்டார். அவருக்கும்* **டல்ஹௌ**

சிக்கும் இடையில் தகராறுகள்; இவை அவரது ராஜ்ஜியமாவில் முடிந்தன.

**1848. சதாராவை இணைத்துக் கொள்ளுதல்.** சிவாஜியின் வம்சத்தைச் சேர்ந்த, **1818 ஹேஸ்டிங்ஸால்** அரியணையில் அமர்த்தப்பட்ட அந்த **ராஜா இறந்தார்;** அவருக்குக் குழந்தை இல்லை; தான் மரணப் படுக்கையிலிருந்த பொழுது ஒரு **மகனைத்** தத்து எடுத்து, அவரைத் தனது வாரிசாக நியமித்திருந்தார். அவரை அங்கீகரிக்க டல்ஹௌசி மறுத்து [சதாராவை] **இணைத்துக் கொண்டார்.**

**1849—1851.** பல மலைக்குலத்தினரின் கலகங்கள்; **சர் காலின் காம்பல், கர்னல் காம்பல், திரு. ஸ்ட்ரேஞ்** முதலியோரால் அவை ஒடுக்கப்பட்டன (பக். 257). **கொள்ளை, கொலை, தீயிடல், சிசுக்கொலை, நரபலி, சதிப் பழக்கம் முதலியவைமீது** ஒரு பொதுவான போர் தொடுக்கப்பட்டது.

**இரண்டாம் பர்மியப் போர், 1852—1853** (ஏப்ரல் **12, 1852**ல் ஆரம்பித்தது; **டோனுபியூ என்ற விட்த்தில் 1853**ல் **மார்ச் 17, 18 தேதிகளில்** நடந்த சண்டைகளின் விளைவாக முடிவுற்றது). **டிசம்பர் 20, 1853ல் பிரகடனத்தின்படி பெகு இணைத்துக் கொள்ளப்பட்டது.**

**1853. பேராரை இணைத்துக் கொள்ளல்;** இங்கு, **ஆக்லந்தால்** அரியணையில் அமர்த்தப்பட்ட **நாகபுரி ராஜா** (1840), சொந்தக் குழந்தையோ அல்லது தத்துப் புத்திரனோ இன்றி இறந்தார்.

**கர்னாடகத்தை இறுதியாக இணைத்துக் கொள்ளல். 1801**ல் "கம்பெனி நவாப்" அரசியல் **வாழ்விலிருந்து விலகி** விட்டார். **1819**ல் அவர் இறந்ததும் அவரது குமாரர் அரியணையில் அமர்த்தப்பட்டார் மரணம் **1825;**

அவரது குமாரராகிய சிறு குழந்தை அடுத்தபடி நவாபாக பிரகடனம் செய்யப்பட்டார்; மரணம் 1853; 1 இப்பொழுது அவரது பெற்றோரின் உடன்பிறந்தாரான அசீம் ஜா பட்டத்துக்கு உரிமை கொண்டாடினர்; ஓய்வு ஊதியம் தரப்பெற்று விலக்கப்பட்டு, சென்னையில் மற்ற எல்லாப் பிரபுக்களிலும் முதலிடம் பெற்றார்; சமீபத்தில் விக்டோரியா ஆர்காட்டு இளவரசர் என்ற பட்டத்தை அவருக்கு வழங்கினர்; ஆசாமி சென்னையில் தனது அரண்மனையில் நிம்மதியாக வாழ்கிறார்.

**1854.** 2 ஜான்சி (பண்டேல்கந்தில் உள்ளது) **இணைத்துக் கொள்ளப்படல்.** ஆதியில் பேஷ்வாவுக்குக் கப்பம் கட்டிய ஜான்சி ராஜா, 1832ல் சுதந்திரமான ராஜாவாக அங்கீகரிக்கப்பட்டார்; சொந்தக் குழந்தையொன்றுமின்றி இறந்தார்; ஆனால் தத்துப்புத்திரர் உயிருடன் இருந்தார். திரு. டல்ஹௌசி அவரை அங்கீகரிக்க மறுபடியும் மறுத்தார்; எனவே, நாடிழந்த ராணியின் சீற்றம்; இவர் பின்னர் சிப்பாய்க் கலகத்தின் மிகப் பிரதானத் தலைவராக இருந்தார்.

நானாசாகிப் என்று மறுபெயர் கொண்ட தந்துபாந்த் என்பவர், பதவியிலிருந்து நீக்கப்பட்டு, ஓய்வு ஊதியம் தரப்பெற்ற பேஷ்வா பாஜிராவின்—இவர் 1853ல் இறந்தார் தத்துப்புத்திரர்; தன்னைத் தத்து எடுத்த தந்தைக்குத் தரப்பட்ட ஆண்டு ஓய்வு ஊதியத்தை—1,00,000 பவுண்கள்—நானாசாகிப் கேட்டார்; அது மறுக்கப்பட்டது. நானா பணிந்து, பின்னர் இந்த "ஆங்கிலேய நாய்களின்" மீது பழிதீர்த்துக் கொண்டார்.

1 1855 என்கிறார் பர்கஸ்.
2. 1853 என்கிறார் பர்கஸ்.

**1855—1856.** சாந்தல்களின் கலகம்; வங்காளத்தில் ராஜ் மஹல் குன்றுகளில் வசித்த பாதி காட்டு மிராண்டிக் குலம்; ஏழுமாதக் கொரில்லாப் போருக்குப் பிறகு, பிப்ரவரி 1856ல் ஒடுக்கப்பட்டது.

**1856** முதற்பகுதி. தனது பழைய அரசாங்கத்தில் தன்னை மீண்டும் அமர்த்துமாறு, பதவியிலிருந்து விலக்கப்பட்ட மைசூர் ராஜா செய்துகொண்ட "தாழ்மையான" விண்ணப்பம் டல்ஹௌசியால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

**1586.** ஔத் இணைத்துக் கொள்ளப்படல்; காரணம்: நவாபின் மோசமான நிர்வாகம். —பஞ்சாப் மகாராஜா துலீப்சிங் கிருத்தவ மதத்தைத் தழுவினர். தற்புகழ்ச்சியுடன் கூடிய "விடைபெறும் செய்தி" ஒன்றை விடுத்து, டல்ஹௌசி விலகினர்; பல சீர்திருத்தங்களை அவர் செய்தார்; அவற்றுள் கால்வாய்கள், ரயில்பாதைகள், மின்சாரத்தந்தி ஆகியவை அமைத்ததும் அடங்கும்; ஔதை இணைத்துக் கொண்டதைத் தவிர்த்து, நிதியில் £ 40 லட்சம் அதிகரிப்புகாணப்பட்டது; கல்கத்தாவுடன் வர்த்தகம் செய்த கப்பல்களின் டன் எண்ணிக்கை கிட்டத்தட்ட இரு மடங்காயிற்று; உண்மையில் பொதுக் கணக்கு களில் குறைபாடுகள் இருந்தன; ஆனால் இது, பொதுப் பணிக்களுக்கான பெருஞ் செலவினால்நேர்ந்தது.—இந்த ஆரவார வாய் வீச்சுக்குப் பதில் கூறும் வகையில் சிப்பாய்ப் புரட்சி *(1857—1859)*.

## 8. கானிங் பிரபுவின் நிர்வாகம், (1856—1858)

பிப்ரவரி 29,1856. கானிங் பதவியேற்ருர். (இந்துக்கள், முகம்மதியர்கள், ஐரோப்பியர்கள் ஆகிய அனைவருக்குமே பொருந்தும் அவருடைய குற்றச்சட்டம் 1861 வரை பூர்த்தியடையவில்லை.)

ஆகஸ்ட் 1856, காலரா; மத்தியஇந்தியாவைநாசப்படுத்தியது; ஆக்ராவில் மட்டும் 15,000 சாவுகள்.

பாரசீக யுத்தம், 1856—1857. (பாம்I): 1855ல் தான் அங்கு "அவமதிப்புடன் நடத்த"ப்பட்டதால் டெஹ்ரானிலிருந்து பிரிட்டிஸ் கமிஷனர் வெளியேறிஞர்.

1856, பாரசீக அரசாங்கம், ஆப்கானியரான ஈசாகான் என்பவரிடமிருந்து ஹீரட்டை கைப்பற்றிக் கொண்டது.

நவம்பர் 1, 1856. கானிங் போர்ப் பிரகடனம் செய்தார்; நவம்பர் 13ல் மஸ்கத்தைத் தாக்குவதற்குப் பம்பாயிலிருந்து பல கப்பல்கள் புறப்பட்டன.

டிசம்பர் 1856 முதற்பகுதி, பாரசீக வளைகுடாவில் புஷையர் (அபு ஷகர்) பிடிபட்டது.

இதற்கிடையில் சர்ஜான் லாரன்ஸ் ஸாக்கும் (இவர் தனது சகோதரர் சர் ஹென்றிக்குப் பதிலாக இப்பொழுது பஞ்சாபில் தலைமைக் கமிஷனராக இருந்தார்)காபூலின் அமீரான தோஸ்த் முகம்மதுவுக்கும் இடையில் பேச்சுவார்த்தைகள் ஆரம்பித்தன. 1857 முதற்பகுதியில் சமரசம்; நேச ஒப்பந்தம்; கடைப்பிடிக்கப்பட்டது.

ஜனவரி 1857, சர் ஜேம்ஸ் அவுட்ரம், படையெழுச்சியின் பிரதம தளபதியாக புஷையரில் படையுடன் சேர்ந்து கொண்டார்.

**பிப்ரவரி 7, 1857.** குஷாப் சண்டை; *அவுட்ரத்தின் கீழிருந்த படை வரிசையால்* சுமார் 8,000 பாரசீகர்கள் *முழுதும் முறியடிக்கப்பட்டனர்.*

**பிப்ரவரி 8, 1857.** அவுட்ரம் *புஷையரிலிருந்த தலைமையகத்துக்குத் தனது படை வரிசையுடன் திரும்பினார்.*

**ஏப்ரல் 1857.** மொகம்மெரா பிடிபட்டது.—அதையடுத்து சமதான உடன்படிக்கை: ஹீரட்டிலும் ஆப்கானிஸ்தானத்திலுமிருந்து நிரந்தரமாக பாரசீகர்கள் வெளியேற வேண்டியது; *டெஹ்ரானில் பிரிட்டிஷ் கமிஷனரை "சகல மரியாதையுடனும்" நடத்த வேண்டியது.*

**1857.** சிப்பாய்க் கலகம். *சில ஆண்டுகளாக* சிப்பாய்ப்படை *மிகவும் ஸ்தாபனங் கெட்டுக் கிடந்தது;* ஔதிலிருந்து **40,000** போர் வீரர்கள் *அதில் இருந்தனர்; ஜாதியும், நாட்டின* உணர்ச்சியும் *அவர்களைச் சேர்த்துப் பிணைத்தன; படை முழுதுக்கும் பொதுவான நாடி ஒன்றே; ஒரு ரெஜிமென்டை மேலதிகாரிகள் அவமதித்தால், மற்றவைகளும் அதைத் தங்களதுகுறையாகக் கருதின; அதிகாரிகள் சக்தியற்றிருந்தனர்; ஒழுங்குக் கட்டுப்பாடு சுணக்கம்;* வெளிப்படையான கலகச் செயல்கள் அடிக்கடி நிகழ்ந்தன; *அதிக அல்லது குறைந்த சிரமத்துடன் அவை ஒடுக்கப்பட்டன;* ரங்கூனைத் தாக்குவதற்காகக் கடல் கடந்து செல்வதற்கு வங்காளப் படை அடியோடு மறுத்துவிட்டது; *இதனால்* சீக்கியப் படைப் பகுதிகளைப் பதிலுக்கு அனுப்ப வேண்டிய *தேவை ஏற்பட்டது* **(1852).** *(இவையெல்லாம்* பஞ்சாப் இணைத்துக் கொள்ளப் *பட்டபின்—1849—ஔதை இணைத்துக் கொண்டபின் மேலும் மேசமாயிற்று—1856.)* யதேச்சாதிகாரச் செய [illegible] *தனது நிர்வாகத்தைத் தொடங்*

கிறுர்; அதுவரை, சட்டதிட்டத்தின்படி உலக முழு வதிலும் பணிசெய்வதற்கு சென்னை, பம்பாய் சிப்பாய்களும், இந்தியாவில் மட்டும் பணி செய்வதற்கு வங்காளிகளும் திரட்டப்பட்டனர்; "பொதுப் பணிக்கு ஆட்திரட்டுதலை" வங்காளத்திலும் சட்டமாக்கினுர் கானிங். ஜாதி முதலிய வற்றை ஒழிப்பதற்கான முயற்சி என்று இதைப் "பக்கிரி கள்" குறை கூறினர்.

**1857** முதற்பகுதி, சமீபத்தில்வழங்கப்பட்ட (பாமின்) துப்பாக்கி ரவைககள் பன்றிகள், பசுக்கள் ஆகிய வற்றின் கொழுப்பு தடவப்பட்டவை; ஒவ்வொரு சிப்பாயும் தனது ஜாதியை இழக்கச் செய்வதற்காக இது வேண்டுமென்றே செய்யப் பட்டது என்றனர் பக்கிரிகள்.

இதனுல், பாரக்பூரிலும் (கல்கத்தாவுக்கருகில்) ராணிகஞ் சிலும் (பாங்கூராவுக்கருகில்) சிப்பாய் எழுச்சிகள்.

பிப்ரவரி 26, பெர்ஹாம்பூரில் (மூர்ஷிதாபாத்துக்குத் தெற்கில் ஹூக்ளிக்கரையில்) சிப்பாய்க் கலகம்; மார்ச்சில் பாரக் பூரில் சிப்பாய்க் கலகம்; இவையனைத்தும் வங்காளத்தில் (பலவந்தமாக ஒடுக்கப்பட்டன).

மார்ச், ஏப்ரல். அம்பாலாவிலும் மீரட்டிலும் இருந்த சிப்பாய்கள் அடிக்கடியும் இரகசியமாகவும் தங்களது பாளையங் களுக்குத் (barracks - மொ.ர்.) தீ வைத்தனர்; ஔத், வட மேற்கு மாவட்டங்களில் பக்கிரிகள் இங்கிலாந்துக் கெதி ராக மக்களுக்கு ஆவேச மூட்டினர். பித்தூர் (கங்கைக் கரையில்) ராஜாவான நானுசாகிப், ரஷ்யா, பாரசீகம், டெல்லிச் சிற்றரசர்கள், ஔதின் முன்னுள் மன்னர் ஆகியோ ருடன் சதி செய்து, கொழுப்புத் தடவப்பட்ட துப் பாக்கி ரவைகளினுல் விளைந்த சிப்பாய்க் குழப்பங்களைப் பயன்படுத்திக் கொண்டார்.

ஏப்ரல் 24. *48வது வங்காளிகள் (படைப் பகுதி), 3வது சுதேசிக் குதிரைப் படை, 7வது ஔதின் பயிற்சியற்ற படையினர் ஆகியோர் லக்னோவில் எழுச்சி; ஆங்கிலேயத் துருப்புக்களைக் கொணர்ந்து சர்ஹென்றி லாரன்ஸால் ஒடுக்கப் பட்டது.

மீரட்டில் (டெல்லிக்கு வட கிழக்கில்) 11வது, 20வது சுதேசிக் காலாட் படை ஆங்கிலேயர்களைத் தாக்கி, அவர்களைத் துப்பாக்கியால் சுட்டு, அப் பட்டணத்துக்குத் தீயிட்டு,ஆங்கிலேயப் பெண்கள், குழந்தைகள் ஆகிய அனைவரையும் கொன்று, டெல்லிக்குச் சென்று விட்டனர்,

டெல்லியில், இரவில், கலகக்காரர்களில் சிலர் குதிரையேறி டெல்லிக்குள் நுழைய, அங்கிருந்த சிப்பாய்கள் (54வது, 74வது, 38வது சுதேசிக் காலாட் படை) கிளர்ந்து எழுந்தனர்; ஆங்கிலேயக் கமிஷனர், பாதிரி, அதிகாரிகள் ஆகியோர் கொல்லப் பட்டனர். ராணுவத் தளவாடக் கிடங்கை ஒன்பது ஆங்கிலேய அதிகாரிகள் காத்துப் போரிட்டு, அதை வெடி வைத்துத் தகர்த்தனர் (இருவர்** உயிரிழந்தனர்); நகரிலிருந்தமற்ற ஆங்கிலேயர்கள் காடுகளுக்கு ஓடி விட்டனர்; அவர்களில் பெரும்பான்மையோர் சுதேசிகளால் அல்லது கடும் வானிலையினால் கொல்லப் பட்டனர்; சிலர் துருப்புக்கள் அகன்று சென்று விட்டிருந்த மீரட்டுக்குப் பத்திரமாக வந்து சேர்ந்தனர். ஆனால் டெல்லி, கலகக்காரர்கள் வசமாயிற்று.

* மே 3 என்கின்றனர் கேயும் மெல்லிசனும், இந்தியப் படைக் கலகத்தின் வரலாறு, தொகுதி 3, லண்டன், 1889—1892.

** ஐந்து, என்கின்றனர் கேயும் மெல்லிசனும், தொகுதி 2.

பிரூஸ்பூரில், 45வது, 57வது சுதேசி (க்காலாட் படை-மொர்), கோட்டையைப் பிடிக்க முயற்சி செய்து, 61வது ஆங்கிலேய (காலாட் படையின-மொ.ர்) ரால் விரட்டியடிக்கப் பட்டது; ஆனால், அவர்கள் பட்டணத்தைக் கொள்ளையிட்டு, அதற்குத் தீ வைத்தனர்; கோட்டையிலிருந்து வந்த குதிரைப் படையினால் அடுத்த நாள் விரட்டியடிக்கப் பட்டனர்.

லாகூரில், மீரட்டிலும் டெல்லியிலும் நடை பெற்ற நிகழ்ச்சிகள் பற்றிய செய்தி எட்டியவுடனே, பொது அணிவகுப்பு செய்து கொண்டிருந்த சிப்பாய்கள், ஜெனரல் கார்பெட்டின் உத்தரவின் பேரில் (பீரங்கிகளுடன் ஆங்கிலேயத் துருப்புக்களால் சூழப் பட்டு) ஆயுதங்கள் பறிக்கப் பட்டனர்.

மே 20. பெஷாவரில் (லாகூரில் செய்தது போலவே) 64வது, 55வது, 39வது சுதேசிக் காலாட் படை ஆயுதம் பறிக்கப் பட்டது; பிறகு, பணி புரிவதற்கு எஞ்சி யிருந்த ஆங்கிலேயர்களும், விசுவாசமுள்ள சீக்கியர்களும், முற்றுகையிடப் பட்டிருந்த நௌஷேரா, மர்தான் ஆகிய நிலையங்களை விடுவித்தனர்; மே இறுதியில், பெரும் நிலையமான அம்பாலாவானது, அருகிலிருந்த நிலையங்களிலிருந்து கொண்டு திரட்டப் பட்ட பல ஐரோப்பிய ரெஜிமென்டுகளால் நிரப்பப் பட்டது; ஜெனரல் ஆன்சன் என்பவரின் தலைமையின் கீழான ஒரு மூலப் படை இங்கு திரட்டப் பட்டது... கோடைப் பருவத்தினால் அங்கு தங்கியிருந்த ஆங்கிலேயக் குடும்பங்களால் நிறைந்திருந்த மலை வாசஸ்தலமான சிம்லா தாக்கப்பட வில்லை.

மே 25. ஆன்சன் தனது சிறு படையுடன் டெல்லி நோக்கிச் சென்றார்; அவர் மே 27ல் இறந்தார்; பதிலுக்கு சர் ஹென்றி பர்னர்ட் அமர்த்தப் பட்டார்; ஜூன் 7ல் ஜென

ரல் வில்சனின் தலைமையான ஆங்கிலேயத் துருப்புக்கள் (மீரட்டிலிருந்து வந்தன; வழியில் சிப்பாய்களுடன் சிறிது கை கலப்பு நிகழ்ந்தது.) ஹென்றி பர்னூர்டு டன் சேர்ந்து கொண்டன. இந்துஸ்தானம் முழுவதும் கலகம் பரவியது; வெவ்வேறான 20 இடங்களில் ஒரே காலத்தில், சிப்பாய் எழுச்சிகளும், ஆங்கிலேயர்களைக் கொல்லுதலும்; பிரதான இடங்கள்: ஆக்ரா, பரெய்லி, மொராதாபாத். சிந்தியா "ஆங்கிலேய நாய்க"ளிடம் விசுவாசமாயிருந்தார்; ஆனால் அவரது "குதிரை வீரர்கள்" அவ்வாறில்லை; பட்டியாலா மகாராஜா—வெட்கம்!—ஆங்கிலேயர்களுக்கு உதவியாக நிறையப் படை வீரர்களை அனுப்பினார்! மெயின்புரியில் (வட மேற்கு மாகாணங்கள்), டிக்கன்சோ என்ற இளம் லெப்டினன்ட் ஆன ஒரு மிருகம், கஜானாவையும் கோட்டையையும் காப்பாற்றினான்.

கான்பூரில், ஜூன் 6, 1857ல் நானாசாகிப் (இவர், கான்பூரில் கிளர்ச்சி செய்து எழுந்த சிப்பாய் ரெஜிமென்டுகள் மூன்றுக்கும் சுதேசிக் குதிரைப் படை ரெஜிமென்டுகள் மூன்றுக்கும் தலைமை பூண்டிருந்தார்; கான்பூர் துருப்புக்களின் தளபதியான சர் ஹ்யூக் விலரிடம் ஐரோப்பியக் காலாட் பட்டாளம் ஒன்றே ஒன்றுதான் இருந்தது; வெளியிலிருந்து புதிய துருப்புக்கள் சிறிதும் அவருக்குக் கிடைத்தன; அவர் கோட்டையையும் பாளையங்களையும் தன் வசம் வைத்திருந்தார்; அங்கு எல்லா ஆங்கிலேயர்களும், பெண்களும், குழந்தைகளும் எல்லோரும் ஓடினர்) சர் ஹ்யூக் விலரை முற்றுகை யிட்டார்.

ஜூன் 26, 1857. கான்பூர் தன்னிடம் ஒப்படைக்கப் பட்டால், எல்லா ஐரோப்பியர்களும் பத்திரமாகத் திரும்புவதற்கு அனுமதிப்பதாக நானாசாகிப் கூறினார்; ஜூன்

27ல் (வீலர் அங்கிபந்தனையை ஏற்றுக் கொண்டதால்), எஞ்சியிருந்தவர்களில் 400 பேர்கள் படகுகளிலேறி, கங்கையில் கீழ் நோக்கிச் செல்ல அனுமதிக்கப் பட்டனர்; இரு பக்கங்களிலிருந்தும் அவர்கள் மீது நானு சுட்டார்; ஒரு படகு தப்பித்து; சற்று தூரம் சென்று தாக்கப்பட்டு, மூழ்கியது; அக் கோட்டைப் படை முழுவதிலும் நான்கு மனிதர்கள் மட்டுமே தப்பினர். பெண்களும் குழந்தைகளும் அடங்கிய ஒரு படகு, ஒரு மணற்கரையில் மாட்டிக் கொண்டு, பிடிபட்டது; அவர்களனைவரும் கான்பூருக்கு நடத்திச் செல்லப்பட்டு கைதிகளாகப் பாதுகாப்பாக அடைத்து வைக்கப்பட்டனர்; 14 நாட்களுக்கு பிறகு (ஜூலையில்) மேலும் பல ஆங்கிலேயக் கைதிகள் பதேகரிலிருந்து (பருக்காபாத்திலிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள ஒரு இராணுவ நிலையம்) கலகக்காரச் சிப்பாய்களால் அங்கு இழுத்து வரப் பட்டனர்.

கானிங்கின் உத்தரவின் பேரில், சென்னை, பம்பாய், இலங்கை ஆகிய இடங்களிலிருந்து துருப்புக்கள் வந்தன. மே 23ல், நீல் என்பவரின் தலைமையில் சென்னையிலிருந்து வந்த புதுப் படை கரை யிறங்கியது. பம்பாய்ப் படை சிந்து நதி வழியாக லாகூர் நோக்கிச் சென்றது.

ஜூன் 17, சர் பாட்ரிக் கிராண்ட் (ஆன்சனுக்குப் பின் வங்காளத்தில் பிரதம தளபதி பதவிக்கு வந்தவர்) என்பவரும், அட்ஜுடன்ட் ஜெனரலான ஜெனரல் ஹாவ்லாக் என்பவரும் கல்கத்தா வந்து சேர்ந்தனர்; உடனே அங்கிருந்து புறப்பட்டனர்.

ஜூன் 6, அலகாபாத்தில் சிப்பாய்கள் கலகம் செய்து, (ஆங்கிலேய) அதிகாரிகளை அவர்களது மனைவி, குழந்தைகளுடன் கொன்று, கர்னல் சிம்சன் என்பவரால் பாதுகாக்

கப்பட்ட கோட்டையைப் பிடிக்க முயன்றனர்; கல்கத்தாவிலிருந்து, புயூசிமல் துப்பாக்கி ஏந்திய சென்னைப் படையுடன் வந்த கர்னல் நீலின் வருகையால் ஜூன் 11ல் சிம்சனுக்கு உதவி கிடைத்தது; நீல் எல்லாச் சீக்கியர்களையும் விரட்டிவிட்டு, கோட்டையைக் கைப் பற்றி, அங்குக் காவற் படையாக பிரிட்டிஷ்காரர்களை மட்டுமே வைத்தார் (வழியில் அவர் காசியைக் கைப்பற்றி, கலகத்தின் முதல் கட்டத்திலிருந்த 37வது சுதேசிக் காலாட் படையைத் தோற்கடித்தார்; சிப்பாய்கள் ஓடி விட்டனர்); எல்லாப் பக்கங்களிலிருந்தும் (ஆங்கிலேயத்) துருப்புக்கள் அலகாபாத்தில் வந்து குவிந்தன.

**ஜூன் 30,** ஜெனரல் ஹாவலாக் அலகாபாத் வந்து சேர்ந்து, படைத்தலைமை பூண்டு, சுமார் 1000 பிரிட்டிஷ்காரர்களுடன் கான்பூரை நோக்கிச் சென்றார்; ஜூலை 12-ல் பதேபூரில் சிப்பாய்களைப் பின்னுக்குத் தள்ளினார்; இப்படிப் பல; மேலும் சில கைகலப்புகள்.

**ஜூலை 16,** கான்பூரின் வெளிப்புறத்தில் ஹாவ்லாக்கின் படை; இந்தியர்களைத் தோற்கடித்தது; ஆனால் கோட்டையில் நுழைவதற்கு நேரம் கடந்துவிட்டது; இரவில் ஆங்கிலேயக்கைதிகள்—அதிகாரிகள், பெண்மணிகள், குழந்தைகள் அனைவரையும் நானா படுகொலை செய்தார்; பிறகு ராணுவ தளவாடக் கிடங்கை வெடி வைத்துத் தகர்த்துவிட்டு, பட்டணத்தைக் கைவிட்டுச் சென்றுவிட்டார்.—ஜூலை 17-ல் ஆங்கிலேயத் துருப்புக்கள் அங்கு நுழைந்தன.—நானாவின் இருப்பிடமான பித்தூர் மீது ஹாவ்லக் படையெடுத்து, எதிர்ப்பின்றி அதைப் பிடித்து, அரண்மனையை அழித்து, கோட்டையை வெடிவைத்துத் தகர்த்து, பிறகு கான்பூருக்குத் திரும்பினார்; அந்நிலையத்தைக் காவற்படை யமைத்துப் பாதுகாப்பதற்கு நீலை அங்கு அவர்

விட்டார்; பிறகு ஹாவ்லக் லக்னேவுக்கு உதவச் சென்றார்; அங்கு, சர் ஹென்றி லாரன்சின் முயற்சிகளை எல்லாம் மீறி, ஸ்தானிகரகம் நீங்கலாக, நகரம் முழுவதும் கலகக்காரர்களின் வசப்பட்டது.

**ஜூன் 30,** அருகாமையிலிருந்த கலகக்காரர்களின் கூட்டத்துக்கெதிராகக் கோட்டைபடை முழுதும் புறப்பட்டுச் சென்றது; பின் தள்ளப்பட்டது; ஸ்தானிகரகத்தில் மீண்டும் வந்து தங்கியது; இவ்விடம் முற்றுகையிடப்பட்டது.

**ஜூலை 4,** சர் ஹென்றி லாரன்ஸ் இறந்தார். (ஜூலை 2ல் ஒரு குண்டு வெடித்து அவரைக் காயப்படுத்தியதன் விளைவாக); கர்னல் இங்லிஸ் படைத் தலைமை ஏற்றார்: முற்றுகையிடுவோர்களுக்கெதிராகச் சில சமயங்களில் வெளி வந்துத் தாக்கி, அவர்கள் மூன்று மாதங்கள் தாக்குப் பிடித்தனர்.—ஹாவ்லக்கின் போர் நடவடிக்கைகள் (பக். 271). அவர் கான்பூருக்குத் திரும்பிய பின்னர், பெருந் திரளான துருப்புக்களுடன் சர் ஜேம்ஸ் அவுட்ரம் அவருடன் சேர்ந்து கொண்டார்; அவரும் பல்வேறு கலக மாவட்டங்களிலிருந்து பல டிடாச்சுடு ரெஜிமென்டுகள் அடங்கிய புதுப் படைகளைக் கொண்டு வந்தார்.

**செப்டம்பர் 19,** ஹாவ்லாக், அவுட்ரம், நீல் ஆகியோரின் தலைமையில் இப்படை முழுவதும் கங்கையைக் கடந்தது. 23ந் தேதி, லக்னேவுக்கு எட்டு கல் தொலைவிலிருந்த, ஔத் அரசர்களின் கோடைக்கால அரண்மனையான ஆலம்பாக்கை அவர்கள் தாக்கினர்.

**செப்டம்பர் 25,** லக்னேவின் மீது இறுதியான பாய்ச்சல் செய்யப்பட்டது; ஸ்தானிகரகத்தை படை அடைந்தது; இங்கு நெருக்கமாக முற்றுகையிடப்பட்டு மேலும் மூன்று மாதங்களுக்கு ஐக்கியப்படை தங்கவேண்டியிருந்தது. (அப்

பட்டணத்தில் நடந்த சண்டையின்பொழுது ஜெனரல் நீல் வீழ்ந்தார்; அவுட்ரம் கையில் கடும் காயமுற்ருர்.)

**செப்டம்பர் 20.** ஜெனரல் வில்சன் என்பவரின் தலைமையில், ஆறு நாட்கள் நடந்த சண்டைக்குப் பிறகு டெல்லி கைப்பற்றப்பட்டது. (விபரங்களுக்கு பக். 272, 273 பார்க்க.) ஹாட்சன், தனது குதிரைப் படையின் தலைமையில் அரண்மனைக்குள் வலிந்து நுழைந்து, கிழ அரசரையும், அரசியையும் (சீனத் மஹல்) பிடித்தார்; அவர்கள் சிறையில் தள்ளப்பட்டனர்; ஆனல் ஹாட்சன் தனது கையாலேயே இளவரசர்களை (சுட்டு)க் கொன்ருர். டெல்லியில் காவற்படை வைக்கப்பட்டு, அமைதி படுத்தப்பட்டது. அடுத்து உடனே கர்னல் கிரேட் ஹெட் டெல்லியிலிருந்து ஆக்ரா சென்று, அதனருகில் ஹோல்காரின் தலைநகரான இந்தூரிலிருந்து வந்த பலத்த கலகக்காரக் கூட்டம் ஒன்றைத் தோற்கடித்தார்.

**அக்டோபர் 10.** அவர் ஆக்ராவைப் பிடித்து, பிறகு கான்பூரை நோக்கிச் சென்ருர்; அங்கு அக்டோபர் 26ல் வந்து சேர்ந்தார்; இடையில் ஆசம்கார், சட்னு (ஹசாரிபாக்குக் கருகில்), காஜ்வா, டெல்லியைச் சுற்றியிருந்த பிரதேசம் ஆகிய இடங்களில், காப்டன் பாய்லூ, மேஜர் இங்கிலீஷ், பீல் (இவர் கடற்படை பிரிகேடுடன் இருந்தார்; தாய் நாட்டிலிருந்து வந்திருந்தபுதுப் படைகளான ப்ரோபின், பேன் ஆகியோரின் குதிரைப் படைகளும் போர் முனையில் நுழைய இருந்தன; தானே விரும்பி வருவோர் ரெஜிமென்டுகளும் கூடத் திரட்டப்பட்டன), ஷவர்ஸ் ஆகியோரின் தலைமையில் கலகக்காரர்கள் தோற்கடிக்கப் பட்டனர். சர் காலின் காம்பல் ஆகஸ்டு மாதத்தில் கல்கத்தாவில் தலைமை பூண்டு, இன்னும் பெரிய அளவில் போர் புரிய ஆயத்தம்செய்தார்.

**நவம்பர் 19, 1857.** லக்னோ ஸ்தானிகரகத்தில் *முற்றுகையிடப் பட்டிருந்த கோட்டைப் படையை* **சர் காலின் காம்பல்** *விடுவித்தார்* (சர் ஹென்றி ஹாவ்லக் நவம்பர் 24ல் இறந் தார்); லக்னோவிலிருந்து

**நவம்பர் 25, 1857** - காலின் காம்பல் கான்பூருக்குச் *சென்றார்; இப்பட்டணம்* கலகக்காரர்கள்வசம் *மீண்டும்* சிக்கி *யிருந்தது.*

**டிசம்பர் 6, 1857.** கான்பூரில் காலின் காம்பலின் வெற்றிகரமான சண்டை; *பட்டணத்தைக் காலியாக விட்டுவிட்டு, கலகக்காரர்கள் ஓட்டம் பிடித்தனர்; தொடரப்பட்டு,* சர் ஹோப் கிரான்ட் *என்பவரால் கடுமையாக வெட்டித் தள்ளப்பட்டனர்.* பட்டியாலாவிலும், மெயின்புரியிலும் *கலகக்காரர்கள் முறையே* கர்னல் சீட்டன் *என்பவரா லும்,* மேஜர் ஹாட்சன் *என்பவராலும் தோற்கடிக்கப் பட்டனர்; இதரப் பல இடங்களிலும்.*

**ஜனவரி 27, 1858,** டெல்லி அரசர், டாவ்ஸ் *முதலியோரின் கீழ் இராணுவ விசாரணைக்கு [க் கொண்டு வரப்பட் டார்]; "கொடுங் குற்றவாளி" என்று (1526-லிருந்து ஆண்ட மொகலாய வம்சத்தின் பிரதிநிதி!) மரண தண்டனை விதிக்கப்பட்டது; இத்தண்டனை* ஆயுள் வரை ரங்கூனுக்கு நாடு கடத்தல் *ஆகக் குறைக்கப்பட் டது.* ஆண்டு *இறுதியில்* அனுப்பப்பட்டார்.

**சர் காலின் காம்பலின், 1858ம் ஆண்டின் போர் நடவடிக்கை.** ஜனவரி 2ல் பரூக்காபாத்தையும், பதேகரையும் *அவர் பிடித்து,* கான்பூரில்தான் இருக்கை *அமைத்துக்கொண் டார்; எல்லா இடங்களிலிருந்தும் கிடைத்த துருப்புக் கள், பண்டங்கள், பீரங்கிகள் ஆகியவைகளையெல் லாம் அங்கு அவர் தருவித்தார்.*—கலகக்காரர்கள் லக்னோ வுக்கருகில் குவிந்திருந்தனர்; சர் ஜேம்ஸ் அவுட்ரம் *அங்கு அவர்களைத் தப்பியோட முடியாமல் செய்து* சண்டை

மே 16, 1858. கல்பிக்கு சில மைல் தூரத்தில் ரோஸ்; கலகக் காரர்களை நெருக்கமாக முற்றுகையிட்டார்.

மே 22, 1858. கல்பியிலிருந்து, நம்பிக்கையற்றுத் தீவிர மாகக் கலகக்காரர்கள் வெளிவந்து தாக்கினர்; அவர்கள் மோசமாக முறியடிக்கப்பட்டு, ஓடினர்.

மே 23, 1858. ரோஸ் கல்பியைக் கைப்பற்றினர். [போர் நட வடிக்கையினாலும்] வெப்பமான கோடையினாலும் களைத்திருந்த தனது போர் வீரர்கள் ஓய்வு கொள்வ தற்காக அங்கு சில நாட்கள் தங்கினார்.

ஜூன் 2. இளம் சிந்தியா (ஆங்கிலேயர்களின் விசுவாசமான நாய்), கடினமான சண்டைக்குப் பிறகு தனது துருப் புக்களால் குவாலியரிலிருந்து துரத்தப்பட்டு, உயிர் தப்பிக்க ஆக்ராவுக்கு ஓடினார். ரோஸ் குவாலியர் நோக்கிச் சென்றார்; ஜான்சி ராணியும்* தாந்தியா தோபி யும் கலகக்காரர்களுக்குத் தலைமை தாங்கி—

ஜூன் 19—அவருடன் லோஷ்கார் குன்றுக்கருகில் (குவாலிய ருக்கு முன்பு) போரிட்டனர்; ராணி கொல்லப்பட்டார் அவரது படை பெரும் படுகொலைக்குப் பிறகு கலைந்து சென்றது. குவாலியர் ஆங்கிலேயர்களின் கையில்.

1858 ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில், அதிகப் பிரசித்தி பெற்ற கலகக்காரர்களை வேட்டையாடிக் கொல்வதற்கும், இன்னும் பிடிபடாத கோட்டைகளை யெல்லாம் பிடிப்பதற்கும் சர் காலின் காம்பல், சர் ஹோப் கிரான்ட், ஜெனரல் வால்போல் ஆகியோர் அமர்த்தப்பட் டனர்; பேகம் கடைசி சண்டைகள் சில செய்து, பிறகு நானசாகிப்புடன் ரப்தி நதியைக் கடந்து, ஆங்கிலேயர் களின் விசுவாசமான நாயான நேபாளத்து ஜங் பகதூர்

* அவரது பெயர் லக்ஷ்மிபாய்.

## தமிழ்மொழிப் பதிப்புக்கு ஓர் குறிப்பு!

மாஸ்கோ அயல்மொழிப் பதிப்பகம் வெளியிட்ட ஆங்கிலப் பதிப்பிலிருந்து இத்தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. ஆங்கிலப் பதிப்பில் சில தகவல்கள் தவறாகக் கொடுக்கப்பட்டுள்ளன. உதாரணமாக: பாதிமா, முகம்மது நபியின் சகோதரி (தமிழ்ப் பதிப்பு பக். 14) என்றும், செயின்ட் டேவிட் கோட்டை, அதாவது இன்றைய கடலூர், சென்னைக்குத் தெற்கில் 12 மைல் தொலைவில் இருக்கிறது (பக். 105) என்றும் காணப்படுகிறது. இத்தகைய தகவல்கள் தவறானவை என்பது தெரிந்திருந்தாலும்கூட, ஆங்கிலப் பதிப்பையொட்டியதே இத் தமிழாக்கம் என்பதனாலும், ஆங்கிலப் பதிப்பில் உள்ள தகவல்களை மாற்றும் உரிமை நமக்கு இல்லை என்பதாலும் அவைகள் அப்படியே விடப்பட்டுள்ளன.

பதிப்பகத்தார்.

என்பவரின் பிரதேசத்துக்கு ஓடினர்; தனது நாட்டி லுள்ளும் கலகக்காரர்களைத் துரத்தி வருவதற்கு ஆங்கிலேயர்களை அவர் அனுமதித்தார்; இவ்வாறாக, "எதற்கும் துணிந்தவர்களின் கடைசிக் கூட்டங்கள் கலைக்கப்பட்டன"; நானாவும் பேகமும் குன்றுகளுக்கு ஓடிப் போயினர்; அவர்களது சகாக்களோ தங்களது ஆயுதங் களைக் கீழே போட்டனர்.

1859ன் முற்பகுதி, தாந்தியா தோபியின் மறைவிடம் கண்டு பிடிக்கப்பட்டு, அவர் விசாரணை செய்யப்பட்டு கொல்லப்பட்டார்.—நானா சாகிப் நேப்பாளத்தில் இறந்து போனதாகக் "கருதப்படுகிறது." பரெய்லியின் கான் பிடித்து, சுட்டுக் கொல்லப்பட்டார்; லக்னோவின் மம்மு கான் ஆயுள் சிறை தண்டனை விதிக்கப்பட்டார்; இதரர்கள் வெவ்வேறு காலங்களுக்கு நாடுகடத்தப் பட்டனர், அல்லது சிறையிலிடப்பட்டனர்; கலகக் காரர்களில் பெரும் பகுதியினர்—தங்களது படைகள் கலைக்கப்பட்டு—வாளைக் கீழே போட்டுவிட்டு, குடியான வர்கள் ஆயினர். ஔத் பேகம் நேபாளத்தில் கட்மண்டு வில் வசித்தார்.

ஔத் பிரதேசம் பறிமுதல் செய்யப்பட்டது; ஆங்கிலோ-இந்திய அரசாங்கத்தின் சொத்தென்று கானிங் அதை அறிவித்தார்! சர் ஜேம்ஸ் அவுட்ரத்துக்குப் பதிலாக சர் ராபர்ட் மாண்ட்கோமரி ஔதின் தலைமைக் கமிஷனராக நியமிக்கப் பட்டார்.

கிழக்கிந்தியக் கம்பெனி கலைக்கப் படுதல். போர் முடியு முன்பேயே அது முறிக்கப்பட்டது.

டிசம்பர் 1857. பாமர்ஸ்டனின் இந்திய மசோதா; இதன் முதல் வாசிப்பு, இயக்குநர் குழுவின் சிறப்பான ஆட்சே பணைக்கும் மாறாக பிப்ரவரி 1858ல் நிறைவேற்றப்பட்டது;

*ஆனால் லிபரல் மந்திரி சபை கவிழ்ந்து, டோரி மந்திரி சபை பதவிக்கு வந்தது.*

**பிப்ரவரி 19, 1858, டிஸ்ரேலியின் இந்திய மசோதா** *(பக். 281 காண்க); வெற்றி பெறவில்லை.*

**ஆகஸ்டு 2, 1858, ஸ்டான்லி பிரபுவின் இந்தியா மசோதா நிறை வேற்றப்பட்டது;** *இதன்மூலம்* **கிழக்கிந்தியக் கம்பெனியின் முடிவு.** *இந்தியா* **"மகா"விக்டோரியாவின் பேரரசில் ஒரு மாகாணம்.**